புகழேணியின் உச்சியை எட்டுவதற்கு ஸ்ரீதேவி கூறும் யோசனை.

# "கொள்கையை விட்டுக் கொடுக்காதீர்கள்"



"உங்கள் கலைத்தொழிலின் துவக்கத்தில், ஒவ்வொருவரும் அவரவர் வழியிலே, நீங்கள் செயல்படவேண்டும் என்று விரும்பும் போதுதான், இது, குறிப்பாக முக்கியமானது."

"நகீனு" பிலிமில் நடிப்பதற்கு முன்பே, நான் பலருக்கும் மறுப்பு தெரிவித்து வந்திருக்கிறேன்-" சிரிக்கிறார் ஸ்ரீதேவி. "சர்வ சாதாரணமான பாத்திரங்களுக்கெல்லாம் முடியாது என்றேன்; அசட்டுத்தனமான கோரிக்கைகளுக்கும் முடியாதுதான்." இன்று புகழேணியின் உச்சியிலே, உறுதியாக ஊன்றிவிட்ட ஸ்ரீதேவி, தமது வழியிலே அனைத்தையும் சாதித்துவிட்டதில் மிகுந்த பெருமிதம் அடைகிறார்.

"சிலநேரங்களில், ஒரு டைரக்டர், ஒரு ஷாட்டில் திருப்தியடைந்து விடுகிறார்; ஆனால் என் உள்ளத்தினுள், எனக்குத் திருப்தியில்லை. எனவே, நான் அதனை மீண்டும் செய்கிறேன்; மறுபடியும் செய்கிறேன். எனது ரசிகப் பெருமக்களை திருப்திப்படுத்தும்வரை." சரிதான் ஸ்ரீதேவி. உங்கள் கருத்தை நாங்கள் ஏற்கிறோம்.

"சிலர், பலசமயங்களில், குறுக்குவழியில் பாய்கிறார்கள்"—புலம்புகிறார் ஸ்ரீதேவி. நிச்சயமாக, ஸ்ரீதேவியும் கூட, குறுக்குவழியில் செல்கிறார். "நான், ஒரு அவசரத்தின்போது, தியார்தயாரிப்பு உணவு அல்லது ஆயத்த உடைகள் போன்றவற்றை பயன்படுத்தும்போது மட்டும்தான். ஆனால் எனக்கு எதுவும், மெய்யாகவே முக்கியமானதாக இருக்கும்போது, நான் ஒரு போதுமே, குறுக்குவழியை நாடுவதில்லை. ஒருபோதுமில்லை."

"எனது கூந்தலுக்கு, டாபர் ஆம்லா ஹேர் ஆயிலின் பரம்பரைப் பராமரிப்புக்கு மாற்றே கிடையாது"

"எனது கூந்தல்தான், என் பெரும் பொக்கிஷம் என்று நான் நினைக்கிறேன்—" தமது அலை அலையான கருங்கூந்தலை நெருடியவாறே முறுவலிக்கிறார் ஸ்ரீதேவி.

டாபர் ஆம்லா ஹேர் ஆயிலை பயன்படுத்தி, நான் அதனைப் பராமரிக்கிறேன். ஒவ்வொரு நாளுமே. கூந்தல் நாகரீகத்துக்கான அல்லது நேர்த்தியான எண்ணெய், எனக்குத் தேவையில்லை—எனக்கு வேண்டியது மெய்யான ஒரு எண்ணெய்தான். டாபர் ஆம்லா ஹேர் ஆயிலின், வளமிக்க ஊட்டச் சத்து, என் கூந்தல் நன்கு வளரவும், மென்மையாகவும் ஆரோக்கியமாகவும் மின்னவும், துணைபுரிகிறது. அதனால்தான், என் கூந்தலுக்கு, நான் வேறு ஒரு எண்ணெய்யையும் நம்புவதில்லை.

"டாபர் ஆம்லா ஹேர் ஆயில் அதுதான் எனது கொள்கை-விட்டுக்கொடுக்காத கூந்தல் பராமரிப்பு திட்டம்.




## டாபர் ஆம்லா ஹேர் ஆயில்

கூந்தலைப் பராமரிக்கும் உண்மையான எண்ணெய்

DIL/114 tam

# தேள் கடித்தால் என்ன செய்ய?

பூச்சிக்கடி தேள் கொட்டுவது, பாம்புக்கடி போன்றவற்றால் ஏற்படும் நச்சு தவிர, பொருளாதார, விஞ்ஞான ரீதியில் ஒரு நாடு முன்னேற, முன்னேற, நாம் ஒவ்வொருவரும் சில தீமைகளை அனுபவிக்க வேண்டியதாகிறது. சூழல் (Environment) பாதிக்கப்படுவதால் ஆரோக்கியம் கெடுகிறது. மோட்டார் வாகனங்களின் இரைச்சல், புகை ஆகியவை சொல்ல முடியாத தீமைகளை விளைவிக்கின்றன. கண்கள், சருமம் போன்றவை மிகவும் பாதிப்புக்குள்ளாகின்றன. இம்மாதிரியான நிலையில் முதலுதவி மிகவும் அவசியம்.

மோட்டார் வாகனங்களின் புகையை நாம் சுவாசிப்பதால் நச்சுத் தன்மை ஏற்படுகிறது. இப்புகையில் கார்பன் மானோக்ஸைடு என்ற வாயு அதிகம். எனவே இந்த வாயுவைச் சுவாசிக்கும்போது, சிவப்பு இரத்த அணுக்களிலுள்ள ஹீமோகுளோபின் என்னும் பொருளோடு சேர்ந்து கார்பாக்ஸி—ஹீமோகுளோபின் என்னும் கூட்டுப் பொருள் ஏற்படுகிறது. இக்கூட்டுப் பொருள் காரணமாக சிவப்பு இரத்த அணுக்கள் பிராண வாயுவை எடுத்துச் செல்வது தடைப்படுகிறது. இதன் காரணமாக, கார்பன் மானாக்ஸைடைச் சுவாசிக்கும் நபருக்குத் தலைவலி, மூச்சற்றுப் போதல், தசைகள் பலஹீனமாதல், தலைச் சுற்று, வாந்தி போன்றவை ஏற்படுகின்றன.

மிக அதிகமான அளவில் கார்பன் மானாக்சைடினைச் சுவாசிக்கும் நபர், உடனடியாக நினைவிழந்து, செயலற்று விடுகிறார். சில சமயம் இறந்து விடுவதுமுண்டு. கார்பன்



வயதான மாமி மற்றும் குழந்தைகள் சகிதம் டில்லி வரை போக வேண்டிய நிர்பந்தம். மாமி வெளியில் வாங்கி உண்ணும் பழக்கம் இல்லாதவர். எனவே முதல் நாள் பூரி, சப்பாத்தி இப்படி எல்லோரும் சமாளித்து விட்டோம். மறுநாள் நாங்கள் கொண்டு சென்ற தயிர் சாதத்தை எல்லோரும் சாப்பிட்டோம். ஆனால் ஒருவருமே சாதம் புளிப்பு என்று சொல்லவில்லை. மாமி என்னிடம் கேட்ட போதுதான் உண்மையைச் சொன்னேன். என் அம்மாவின் அறிவுரைபடி வடித்த சூடான சாதத்தில் மொத்த தயிரையும் கொட்டிக் கரண்டியில் நன்றாகப் பிசைந்து பெரிய தூக்கில் ரெடியாக வைத்து விட்டேன். என்ன ஆச்சரியம் ஒருநாள் கழித்தும் துளி கூட புளிப்பே இல்லை. இந்த முறை நெடுந் தூர ரயில் பிரயாணங்களுக்கு மிக ஏற்றதாகும். வேண்டுமென்றால் நீரை விட்டு அந்த சமயத்தில் தளர வைத்துச் சாப்பிடலாம்.

— ஜெயஸ்ரீ.

மானாக்சைடினால் நச்சு (poisoning) ஏற்பட்டிருக்கிறது என்பதற்கு அடையாளமாக, இவ்வாயுவைச் சுவாசிக்கும் நபரின் தோல் "செர்ரி" பழத்தின் வண்ணத்தைப் போல் மாறுகிறது.

### கார்பன் மானாக்ஸைடு வாயுவைச் சுவாசித்து விட்ட நபருக்குச் செய்ய வேண்டிய முதலுதவி:

உடனடியாகப் பாதிக்கப்பட்ட நபரை, நல்ல காற்றோட்டமான பகுதிக்குக் கொண்டு வர வேண்டும். உடைகளைத் தளர்த்தி விட வேண்டும். மூச்சற்றுப் போய் விட்ட நிலையில் செயற்கை முறையில் (artificial respiration) மூச்சு கொடுக்கப்பட வேண்டும். உடல் உஷ்ணநிலை ஒரே சீராக இருக்கும்படிச் செய்ய வேண்டும். அவசியமானால் தடித்த கம்பளியைப் பயன்படுத்தி உடல் உஷ்ணநிலையைப் பாதுகாக்க வேண்டும். உடனடியாக மருத்துவ உதவிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

அம்மோனியா, நைட்ரஸ் ஆக்ஸைடு, சல்ஃபர் — டை — ஆக்ஸைடு, சல்ஃபர் ட்ரை ஆக்ஸைடு போன்றவை, புகையை எழுப்புவதோடல்லாமல், நீருடன் சேரும் போது, அம்மோனியம் ஹைட்ராக்ஸைடு, நைட்ரிக் ஆசிட், சல்ஃப்யூரிக் ஆசிட் போன்ற திராவகங்களாக மாறும் தன்மையை உடையவை. இந்த வாயுக்களால் தோலில் காயங்கள் (chemical burns) ஏற்படுகின்றன. மூச்சுக் குழலின் மேல் பகுதியிலும் காயங்கள் ஏற்படுகின்றன. அம்மோனியா வாயுவைச் சுவாசிக்கும் போது, தும்மல், இருமல், மூச்சின்மை, பார்வைக் கோளாறு போன்றவை ஏற்படும். அதிர்ச்சியினால், 24 மணி நேரத்திற்குள் மரணம் சம்பவித்தாலும் சம்பவிக்கலாம்.

கலாட்டா சமயங்களில் கூட்டம் கலைந்து போகும்படி, போலீசார், கண்ணீர்ப்புகைப் பிரயோகம் செய்வதுண்டு. இக்கண்ணீர்ப் புகை வாயு, கண்களில் நமைச்சலை ஏற்படுத்துகிறது. கண்களைச் சிவப்பாக்குகிறது. கண்களில் எரிச்சலையும் உண்டாக்குகிறது. ஆனால் இவ்விளைவுகள் தற்காலிகமானவையே. இந்த வாயுவினால் பாதிக்கப்படும் நபரை உடனே, இந்த வாயு சூழாத சூழ்நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டும். பிறகு அவர் கண்களை மிக நீர்த்த உப்புக் கரைசலால் (இரண்டு கோப்பை நீருக்கு கால் டீஸ்பூன் உப்பு) கழுவ வேண்டும்.

வாகனங்கள், மத்தாப்புகள், பண்டிகை விழாக் காலங்களில் விளையாட்டுக்குப் பயன்படுத்தப்படும் வர்ணங்கள் (எடுத்துக் காட்டாக, ஹோலி பண்டிகையின் போது, வண்ணப் பொடிகள் தூவி விளையாடுகின்றனர்.) சிந்தூரம் போன்றவைகளால் சருமத்தில் விஷத் தன்மை ஏற்படலாம். வர்ணங்களில் ஈயம், பாதரசம், கலந்துள்ளமையால் தோலில் நச்சுத்தன்மை ஏற்படுகிறது.

சில செடி கொடிகளாலும் உடலில் அலர்ஜி ஏற்பட்டு நச்சு உண்டாகிறது. இச் செடி கொடிகள் நம் உடல்மீது பட்டவுடனேயே, நமைச்சலும் எரிச்சலும் ஏற்படுகிறது. நமைச்சல் ஏற்பட்டவுடனேயே, அப்பகுதியை சோப்புப் போட்டு நன்றாகக் கழுவி, பிறகு மிருதுவான டவலால் மிருதுவாகத் துடைத்து காலமின் லோஷன் தடவ வேண்டும்.

விஷப்பாம்பு, வெறிநாய், தேள், மற்ற வகைப் பூச்சிகள் கடித்தாலும், உடலில் விஷம் சேர்ந்துவிடுகிறது. போதைப் பொருள்களாலும் விஷம் சேருகிறது. சில சமயம் ஊசி மூலமாகச் செலுத்தப்படும் மருந்துகளாலும் விஷத்தன்மை ஏற்படலாம். 1986 — ஆம் ஆண்டில் பம்பாயில் ஜே.ஜே. ஆஸ்பத்திரியில் டையதிலின் க்ளைகால் (Diethylene Glycol) என்னும் மருந்தால் விஷத்தன்மை ஏற்பட்டுச் சிலர் இறந்தார்கள் என்று கூறப்படுகிறது. இம்மாதிரியான நேரங்களில் உடனே கவனம் செலுத்தி ஆவன செய்யாவிடில் இறப்பு நேரிடும்.

போதைப் பொருள்களை நேரடியாக வெயினுக்குள் (Vein) செலுத்திக் கொள்வது மிக அபாயகரமானது. ஒரு நபர் சாதாரண முறையில் போதைப் பொருளை இஞ்செக்ஷன் செய்து கொண்டதாகத் தெரிந்தால், அவரை சாய்வான நிலையில் வைக்க வேண்டும். 1 × 50 சென்டிமீட்டர் இரப்பர் பேண்டால் (Rubber Band) இஞ்செக்ஷன் செய்யப்பட்ட இடத்துக்கு அருகே டூர்னிகெட் (Tourniget) கட்டி, ஒவ்வொரு பத்து நிமிடங்களுக்கும் ஒருமுறை, ஒரு நிமிடம் டூர்னிகெட்டைத் தளர்த்தி மறுபடியும் இறுக்கப்

# உங்கள் குடும்ப ஆரோக்கியத்திற்கான டின்

## 1கிலோ சாக்கலேட் காம்ப்ளான்



Complan®

COMPLETE PLANNED FOOD

CHOCOLATE FLAVOUR




FREE!

Collect a ceramic mug with this pack.

இலவசம்!




இரண்டு 500 கிராம் டின்களுக்குப் பதில், வாங்குங்கள் கிலோ சாக்கலேட் காம்ப்ளான் டின், மிச்சமாக்கிடுங்கள் 4 ரூபாய். அத்துடன் ஒரு பீங்கான் குவளை இலவசம். உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் தேவைப்படும் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும் காம்ப்ளான். வாங்குங்கள் இன்றே.

23
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

**காம்ப்ளான்®**

GX/58/213 TML

# உள் பாவாடைகள்

## மிருதுவான, தரத்தில் சிறந்த
## கலர் மாறாத.
## நியாயமான விலையிலே
## P.R.C. கார்மெண்ட்ஸ்
## லில்லி பாவாடைகள்
## உங்கள் இல்லம் தேடி வருகிறது.


Design No. 1


Design No. 2


Design No. 3

**நீங்கள் செய்யவேண்டியது இதுவே.**

உங்களுக்கு விருப்பமான கலர் மற்றும் உங்கள் சரியான அளவை எமக்குத் தெரிவிக்கவும். (முடிந்தால் கலர் கட்டிங் அனுப்பவும்).

உயரம் 36"–42"
ஒவ்வொன்றும் ரூ. 40/- மதிப்புள்ள, 6 பாவாடைகள் ரூ. 200/- விருப்பமான டிசைன்களில், பலவித வண்ணங்களில் உங்கள் இல்லம் தேடி வருகிறது. ரூ. 200/- & PRC கார்மெண்ட்ஸ் என்ற பெயருக்கு D.D அல்லது M.O மூலமாகவோ அனுப்புங்கள். மணியார்டர் அனுப்பினால் கடிதத்தில் கலர் கட்டிங் டிசைன் எண் குறிப்பிட தவறாதீர்கள்.

V.P.Pம் உண்டு. தபால் செலவு இலவசம் உங்களுக்கு விருப்பமான கலர் கிடைக்காவிடினும் நீங்கள் திருப்தியடையும் கலர் நிச்சயம் PRC லில்லி பாவாடைகள் விலையில் நியாயமானது, தரத்தில் சிறந்தது.

ஸ்பெஷல் அளவு (இடுப்பு அளவு 36"க்குமேல், 6 பாவாடைகள் ரூ. 230/- விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.

இது ஒரு சுயவேலை வாய்ப்பு நிறுவனம். பாரதப் பிரதமர் அவர்களின் "படித்த இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்பு"த் திட்டத்தின் கீழ், கரூர் கிளை "கனரா வங்கியின்" சீரிய பொருளாதார உதவியுடன், மிகச்சிறப்பாக செயல்படும் நிறுவனங்களில் ஒன்றாகும்.

## P.R.C. கார்மெண்ட்ஸ்

நெ. 26, பிரதட்சணம் ரோடு, A Plot, கரூர்-639 002. போன் : 21946

பட வேண்டும். (டூர்னிகெட் என்றால் என்ன? விஷ ஜந்து கடித்துவிட்டால், தீவிர சிகிச்சை அளிப்பதற்கு முன், விஷம் உடலில் வேகமாகப் பரவாமல் இருப்பதற்காக, கடிபட்ட இடத்திற்கு சற்று மேலே போடப்படும் ஒரு முடிச்சு) ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்படும் வரை, இம்மாதிரி செய்ய வேண்டும்.

விஷப்பாம்பு கடித்துவிட்டால், தாமதமின்றி உடனே சிகிச்சை செய்ய வேண்டும். பல பாம்புகள் சீண்டுவதால் மட்டுமே கடிக்கின்றன. எல்லாப் பாம்புகளும் விஷப் பாம்புகளல்ல. பாம்பு கடியால் மட்டுமே அபாயம் ஏற்படுவதில்லை. ஏனென்றால் பாம்பு கடிப்பதால் மிகச் சிறிய அளவு விஷமே உடலில் செல்கிறது. பாம்புக்கடியால் ஏற்படும் விஷத்தால் இறப்பவர்களைக் காட்டிலும், பாம்பு கடித்து விட்டதே நாம் கண்டிப்பாக இறந்து போய் விடுவோம் என்ற பயத்தினாலே இறப்பவர்களின் எண்ணிக்கையே அதிகம்.

விஷப்பாம்பு கடித்தால், கடித்த இடத்தில் பாம்புக்கடியின் அடையாளம் இருக்கும். கடிபட்ட நபருக்குத் தாங்க முடியாத வலி, இரத்தப் போக்கு (Bleeding) வாந்தி ஆகியவை ஏற்பட்டுச் சுயநினைவு அற்றுப் போய்விடும். நாகப்பாம்பு கடித்தால், உடனே தலைசுற்றல், சுறுசுறுப்பின்மை, தசைகளில் பலவீனம், சுலபமாக மூச்சு விட முடியாமை போன்றவை ஏற்படுகின்றன.

முதலுதவி செய்பவர், முதலில் கடிபட்டவரை, அமைதிப்படுத்தி, தைரியம் கொடுத்துப் படுக்க வைத்துப் பிறகு, கடிபட்ட இடத்தை நன்றாக சோப்புப் போட்டுக் கழுவி, கடிவாயிலிருந்து நான்கு அங்குலங்கள் மேலே விஷம் ஏறாத அளவுக்கு இறுக்கமான கட்டுப் போட வேண்டும். பிறகு உடனடியாக ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்ல வேண்டும். கடிபட்ட இடத்தில் கட்டுப் போட முடியாது என்றால் அவ்விடத்தில் பம்ப்பினால் உறிஞ்ச வேண்டும். அல்லது, வாயினாலே விஷத்தை உறிஞ்சி எடுக்க வேண்டும். வாயினால் உறிஞ்சும் போது, கடிபட்ட இடத்தில் மிக மெல்லிய பாலிதீன் பேப்பரைப் போட்டு விட்டு அதன் மேலிருந்து உறிஞ்சுவது நல்லது. இல்லாவிடில் வாயில் ஏதாவது புண், வெடிப்பு இருந்தால் அதில் விஷம் பட்டு விடலாம்.

தேள் கொட்டும் போது, இறங்கும் விஷம், பாம்புக்கடியால் இறங்கும் விஷத்தின் அளவைவிடக் குறைவானாலும் பாம்பு விஷத்தை விடக் கடுமையானதாகும். தேள் விஷத்தினால், எரிச்சலுடன் வலி, கொட்டிய இடத்தில் சிவந்து போதல், வீக்கம் ஆகியவை ஏற்படும். ஜுரம், வாந்தி ஏற்படலாம். தேள் கொட்டிய இடத்தில் ஐஸ் கட்டி வைத்தால் விஷம் வேகமாகப் பரவுவது தடுக்கப்படும். தேள் கொட்டிய இடத்தை நீர்த்த பொட்டாசியம் பர்மாங்கனேட், அம்மோனியா, அல்லது போரேக்ஸ் (Borex)

திரவத்தில் கழுவ வேண்டும். பிறகு விரைவில் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

கொடிய சிலந்திப் பூச்சி கடித்தாலும் மேலே குறிப்பிட்டபடி முதலுதவி அளிக்கப்பட வேண்டும். தேனீ, குளவி கொட்டினாலும் தாங்க முடியாத வலி உண்டாகும். கொட்டு வாயில் ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட (நீரில் கொதிக்க வைத்த அல்லது தீயில் காட்டப்பட்ட) கத்தி முனை அல்லது ஊசியால் விஷக்கொடுக்கினை (Venom sac) எடுக்க வேண்டும். பிறகு அந்த இடத்தை, நீர்த்த அம்மோனியா அல்லது சோடியம் பை சல்ஃபேட் கலந்த நீரால் நன்றாகக் கழுவ வேண்டும்.

அட்டை என்னும் பூச்சியாலும் விஷம் ஏற்படலாம். அட்டை (இரத்தத்தை உறிஞ்சும் பூச்சி) நம் உடலில் ஒட்டிக் கொண்டு விட்டால் அதை எளிதில் விடுவிக்க முடியாது. அது கடித்துக் கொண்டிருக்கும் இடத்தில் எரியும் சிகரெட் வைத்தால் சூடு தாங்காமல் அட்டை விழும். உப்பை வைத்து அழுத்தினாலும் அட்டை விழும். அட்டை கடித்த இடத்தில் ஏற்படும் நமைச்சலைப் போக்க, அந்த இடத்தை நீர்த்த அம்மோனியா திரவம் அல்லது சோடியம் பை கார்பனேட் திரவம் போன்றவற்றால் நன்றாகக் கழுவவும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் பொதுவான சில விஷயங்களும் அதற்கு மாற்று மருந்துகளும் (Antidote) கொடுக்கப்பட்டுள்ளன:

| விஷத்தின் பெயர் | எதிலிருந்து? (Source of Poison) | முதலுதவி |
|---|---|---|
| 1. ஆர்சினிக் | எலிமருந்து | வாந்தி எடுக்கச் செய்யவும். பால் போன்ற தொண்டைக்கு இதமான பானங்களைக் கொடுக்கவும். |
| 2. ஆஸ்பிரின் | மாத்திரைகள் | வாந்தி எடுக்கச் செய்யவும். ஒரு டீஸ்பூன் சோடா பைகார்பனேட் கலந்து ஒரு டம்ளர் நீர் குடிக்கச் செய்யவும். ஸ்ட்ராங், டீ அல்லது காப்பி கொடுக்கலாம். |
| 3. கார்பன் மோனாக்சைடு | கார், லாரி புகை கேஸ் ஸ்டவ் (Gas Stove) | பிராணவாயு செலுத்தவும். நல்ல காற்றோட்டமான இடத்திற்குப் பாதிக்கப்பட்ட நபரைக் கொண்டு வரவும். செயற்கை முறையில் மூச்சு கொடுக்கவும். |
| 4. சுத்தம் செய்யும் திரவங்கள். (Disinfectants) | கார்பாலிக் ஆசிட், பினைல், டெட்டால் போன்றவை | வாந்தி எடுக்கச் செய்யக் கூடாது. ஒரு லிட்டர் நீரில் 4 டீஸ்பூன் மக்னீஷியம் சல்பேட் (எப்சம் சால்ட்) கலந்து கொடுக்கவும். |
| 5. பாலிடால் | கரப்புக் கொல்லி மூட்டைப் பூச்சி கொல்லிகளாகிய பேகான் பேட், டிக் 20 | வாந்தி எடுக்கச் செய்யவும். குடிக்கநீர் அல்லது இளநீர் கொடுக்கவும். |
| 6. பூச்சிக் கொல்லிகள். (Insecticides) | DDT போன்றவை | செயற்கை முறையில் மூச்சுவிடச் செய்யவும். |
| 7. அயோடின் | டிங்ச்சர் ஆப் அயோடின் | 4 மேஜைக்கரண்டி கெட்டியான கஞ்சி அல்லது மாவு கரைத்த கெட்டியான நீர் கொடுக்கவும். பிறகு வாந்தி எடுக்கச் செய்யவும். பிறகு ஒரு டம்ளர் பால் கொடுக்கவும். |
| 8. ஈயம் | பெயிண்ட்டுகள், கூந்தலைக் கறுப்பாக்கும் சாயம் கண்மை. | வாந்தி எடுக்கச் செய்யவும். மக்னீஷியம் சல்பேட் (எப்சம் சால்ட்) கரைத்தநீர் அருந்தச்செய்யவும். |
| 9. மெர்க்குரி (பாதரசம்) | பற்பசை, தர்மாமீட்டர். | முட்டையின் வெள்ளைக் கருவை நீரில் கலந்து கொடுக்கவும். பிறகு பால் அருந்தச் செய்துவிட்டு வாந்தி எடுக்கச் செய்யவும். |

| | | |
|---|---|---|
| 10. போதை மருந்து (Illicit Drugs) | மார்ஃபைன், ஓபியம் போன்றவை. | பொட்டாசியம் பர்மாங்கனேட் கலந்த நீர் ஒரு டம்ளர் கொடுக்கவும். அல்லது, தயிர், மோர், எலுமிச்சை ரசம் அல்லது சூடான காப்பி கொடுக்கவும். |
| 11. பெட்ரோல், மண்ணெண்ணெய் | கார், ஸ்டவ்வுகள் | வாந்தி எடுக்கச் செய்யவும். சாதாநீர் அல்லது இளநீர் கொடுக்கவும். |
| 12. பாஸ்பரஸ் | எலிப்பாஷாணம் தீக்குச்சி எரிமுனை | வாந்தி எடுக்கச் செய்யவும். சாதா நீர் அல்லது இளநீர் கொடுக்கவுக். |
| 13. தூக்கமருந்து | காம்ஃபோஸ் போன்றவை | வாந்தி எடுக்கச் செய்யவும். இரண்டு டீஸ்பூன் அளவு மக்னீஷியம் சல்பேட் கலந்தநீர் கொடுக்கவும். |
| 14. அமிலங்கள் | அடர்த்தியான நைட்ரிக் அமிலம், கந்தக அமிலம் | வாந்தி எடுக்கச் செய்யக் கூடாது. சாதாரண நீர், இளநீர், நெய், ஆலிவ் ஆயில், பார்லி நீர், மில்க் ஆஃப் மக்னீஷியா, முட்டையின் வெள்ளைக்கரு, சோடா பைகார்பனேட் கலந்த நீர் கொடுக்கவும். |
| 15. ஆல்கலிஸ் (Alkalis) எனும் சுண்ணாம்புச் சத்துகள் | அடர்த்தியான சோடியம் ஹைடிராக்சைடு, பொட்டாசியம் ஹைடிராக்சைடு. | வாந்தி எடுக்கச் செய்யக் கூடாது. எலுமிச்சை ரசம், நீர், ஆரஞ்சு ரசம், இளநீர் கொடுக்கவும். |

ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளவும். அட்டவணையில் கூறியபடி, முதலுதவி, (மாற்று மருந்து) அளித்துவிட்டு சும்மா இருந்துவிடக் கூடாது. டாக்டரிடம் அழைத்துப் போவதற்கு முன்னர் அளிக்கப்பட வேண்டிய சிகிச்சையையே அட்டவணை கூறுகிறது.

ஆதாரம்: சயன்ஸ் டுடே.

— ராஜி.

# பார்வைதான் வேறு

"தங்கள் குடும்பத்தில் சம்பந்தம் வைத்துக் கொள்ளும் பாக்கியம் எங்களுக்கு இல்லை. மன்னிக்கவும்" என்று நாசூக்காக தங்கள் விருப்பமின்மையை தெரிவித்து வந்த இரண்டு வரி கார்டினால் ராஜி வீட்டில் அசௌகரியமான அமைதி நிலவியது.

அம்மாதான் முதலில் மௌனத்தைக் கலைத்தாள்.

"இந்த இடமாவது முடிஞ்சுடும்னு நினைச்சேன். ஜாதகம், நகை, சீர்னு முக்கால் கிணறு தாண்டியாச்சு. ஆனால் இப்படி எழுதிட்டாங்களே" என்று மூக்கை உறிஞ்சினாள்.

அப்பா எதுவும் பேசாமல் ராஜியின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தார்.

தங்கைகள் இருவரும் வீட்டின் இறுக்கத்தை உணர்ந்தவர்களாய் மொட்டை மாடியில் பதுங்கினர்.

ராஜியின் மனம் ஆற மறுத்தது. இதோடு பதிமூன்று இடங்கள் ஆகிவிட்டன. ஒவ்வொருமுறை பெண் பார்க்கும் போதும் நிறைய நம்பிக்கைகளை நெஞ்சில் சுமந்து, தன் ஹீரோ இப்படி இருக்க வேண்டும் என்று கற்பனையாக உருவம் கொடுத்து, பிறகு நாளடைவில் அந்த உருவம் தேய்ந்து, 'யாரோ ஒருவன்' என்ற அலட்சியம் ஏற்பட்டு, இப்போதெல்லாம் 'ப்ச்' என்று விரக்திதான் மிஞ்சும் நிலைக்கு அவளை ஆக்கிவிட்டது இந்த பெண் பார்க்கும் படலம்.

கிருஷ்ணா

தங்கள் விருப்பமின்மையைத் தெரிவித்து கடிதம் வரும் போதெல்லாம் அந்த நாள் முழுவதும் நெஞ்சை யாரோ முள்ளால் கீறி விட்டதைப் போல் துடித்துப் போய் விடுவாள் ராஜி.

"இது பதிமூணாவது இடமாச்சே, அன்லக்கி நம்பராச்சேன்னு முன்னாடியே நினைச்சேன். அது போலவே ஆயிடுச்சு. அதனாலென்ன, அடுத்த இடத்தை நிச்சயம் முடிச்சுடலாம். நம்பர் பதினாலு! ஒண்ணும், நாலும் கூட்டினா அஞ்சு வருது. கட்டாயம் கடவுள் கண்ணைத் தொறந்துருவார்" என்று எண் ஜோசியத்தில் நம்பிக்கையுள்ள அப்பா தன்னைத் தேற்றிக் கொள்வதைக் கேட்டவுடன் அந்த வெறுப்பிலும் ராஜிக்கு சிரிப்பை வரவழைத்தது.

தெருக் கோடியிலிருக்கும் தன் தோழி சுமதியைப் பார்த்துப் பேசினாலாவது துக்கம் குறையும் என்ற நினைப்புடன் தெருவில் இறங்கி நடக்க ஆரம்பித்தாள்.

"அட, வா ராஜி! உன்னை கூட்டிண்டு சிவன் கோவிலுக்குப் போகலாம்னு கிளம்பினேன். நீயே வந்துட்டே! என்ன முகம் வாடியிருக்கு? லெட்டர் வந்திருக்கா ஏதாவது?" என்று அருவியாய் பேசியபடி வரவேற்றாள் சுமதி.

சிவன் கோவில் சற்று ஊருக்கு ஒதுக்குப்புறமாய் அமைந்திருந்தது. கோவிலுக்குப் போகும் மனநிலையில் ராஜி இல்லாவிட்டாலும், மரங்களடர்ந்த, அமைதியான அந்தச் சுற்றுப்புறம் தன் மன இறுக்கத்தை தளர்த்தும் என்ற எண்ணத்துடன் சுமதியுடன் நடக்க ஆரம்பித்தாள்.

சற்று தூரம் நடந்ததும், அவர்களை கடந்து சென்ற டூரிஸ்ட் பஸ்ஸிலிருந்து 'ஹோ' என்ற இரைச்சல் கேட்கவும் திரும்பிப் பார்த்தாள். ஏதோ கல்லூரி மாணவர்களின் டூரிஸ்ட் பஸ் போலும். இவள் தங்களைப் பார்ப்பது தெரிந்ததும் 'ஹாய்' என்று கையசைத்தனர்.

"ஸ்கௌண்ட்ரல்ஸ்" என்று சத்தமாகத் திட்டியபடி அருகில் வரும் சுமதியைப் பார்த்தாள்; அவள் உற்சாகமாகப் பதிலுக்கு கையாட்டுவது தெரிந்தவுடன் திகைத்தாள்.

"என்ன சுமதி, அந்தப் பொறுக்கிப் பசங்கதான் பொண்ணுங்க நாம தனியா வருவது தெரிஞ்சு கலாட்டா பண்றாங்கன்னா, நீயும் அவங்க செய்கையை உற்சாகப்படுத்தறே?"

கோபத்துடன் தன்னைக் கடிந்து கொள்ளும் ராஜியைப் புன்னகையுடன் பார்த்து அவள் தோளை சமாதானப் படுத்தும் விதமாய் அழுத்தினாள் சுமதி.

"இதெல்லாம் ஒரு வயசு ராஜி. இந்த ரெண்டுங்கெட்டான் பருவத்துல எப்படி வாழ்க்கையை என்ஜாய் பண்ணணுமோ அப்படி நடந்துக்கறாங்க அவங்க. அது இயல்பு. இப்ப நான் பதிலுக்கு பஸ்ஸைப் பார்த்து கையசைச்சதுனால அந்தப் பசங்க முகத்துல எவ்வளவு சந்தோஷம் உண்டாச்சு, பாத்தியா?! கொஞ்ச தூரம் போனதும் அவங்க நம்மளை மறந்துட்டு வேற ஏதாவது குறும்பு செய்ய ஆரம்பிச்சுடுவாங்க. நாமும் இதைப் பற்றி உடனே மறந்துடப் போறோம். அவ்வளவுதான். இதுல என்ன தப்பு இருக்கு?"

"புரியலை சுமதி நீ சொல்றது!"

"அந்தந்த நிமிஷ வாழ்க்கையை அந்தந்த நிமிஷத்துலேயே முழுமனசோட ஈடுபட்டு ரசிச்சு வாழக் கத்துக்கிட்டோம்னா உலகமே ரம்மியமாத் தெரியும். நீ வேணா ட்ரை பண்ணிப் பாரேன். உன்னைக் கல்யாணம் பண்ணிக்க விரும்பலைன்னு லெட்டர் வந்ததுனாலே மனசு உடைஞ்சுபோய் உம்மணா மூஞ்சியா இப்ப இருக்க. உன்னை ஒருத்தன் ரிஜெக்ட் பண்ணிட்டான்னு நினைக்கறத்துக்குப் பதிலா நம்மை கல்யாணம் பண்ணிக்க அந்தப் பையனுக்கு கொடுத்து வைக்கலே. துரதிர்ஷ்டசாலி அவன்தான்னு நினைச்சுப் பாரு உன் துக்கமெல்லாம் ஓடிடும்!"

'ஓகோ, அப்படியும் ஒரு கோணம் இருக்கிறதோ' என்று நினைத்துக் கொண்டாள் ராஜி.

"இங்க பாரு ராஜி, வாழ்க்கையில நாம பிறந்தது, வளர்ந்தது, இனிமே வாழப் போறது எல்லாமே நம்மால் மட்டும் கிடையாது. விதிக்கப்பட்ட வழியில நம்ம வண்டி ஓடுது. பிரச்னைகளோ, சங்கடங்களோ வரும் போது, 'ஐயோ'ன்னு நம்மமேலே நாமேபச்சாதாப்பட்டோம்னா வாழ்க்கையே நரகமாயிடும். ஓடற நாயைக் கண்டாத்தான் துரத்தற நாய்க்கு எளிதுன்னு சொல்லுவாங்க. 'என்ன ஆச்சு இப்ப?'ன்னு எதிர்த்து நின்னோம்னு வைச்சுக்கோ மனசுல யானை பலம் வந்துடும். அப்படிப் பக்குவப்பட்ட மனசுல எந்த நிகழ்ச்சியும் பாதிப்பை ஏற்படுத்த முடியாது" என்று சொன்னவளை தெளிந்த மனத்துடன் ஏறிட்டாள்.

சிறுவயதிலேயே இறந்துவிட்ட அம்மா, குடிகார அப்பா, வேலைவெட்டியில்லாத அண்ணா என்ற குடும்பச் சூழ்நிலையில் வாழ்ந்தாலும் எப்போதும் உற்சாகத்துடன் சுமதியால் வளையவர முடிகிறதென்றால் இந்த மாதிரி பிரச்னைகளற்ற தன்னாலும் ஏன் சந்தோஷமாக இருக்க முடியாது...?

அப்போது அவர்களைக் கடந்து சென்ற ஸ்கூல் பஸ்ஸிலுள்ள குழந்தைகளை நோக்கி உற்சாகத்துடன் கையசைத்தாள் ராஜி.

பதிலுக்கு தன் பிஞ்சுக் கரங்களை ஆட்டிய அந்தக் குழந்தைகளைப் பார்த்து அவள் மனம் குதூகலப்பட்டது.

---

# வயிற்று உபாதைகளுக்கு வேப்பிலை!

கேஸ்டிக் அல்சர் தொந்தரவு உள்ளவர்கள், மேலும் வயிறு சம்பந்தமான எந்தக் கஷ்டமாக இருந்தாலும், அதற்கு தினம் காலையில் எழுந்ததும் வெறும் வயிற்றில் சிறிது வேப்பிலைக் கொழுந்து பச்சையாக சாப்பிட்டுப் பாருங்கள். முதல் இரண்டு நாட்கள் சாப்பிட கஷ்டமாக இருக்கும். பிறகு விரும்பி சாப்பிட ஆரம்பித்து விடுவீர்கள். நாளடைவில் வயறு கோளாறுகள் யாவும் சரியாகி விடும். வயிற்றில் உள்ள பூச்சியும் ஒழிந்து விடும். இதை தவறாமல் 48 நாட்கள் சாப்பிட்டுப் பாருங்கள். பலனை நன்கு புரிந்து கொள்வீர்கள். அதோடு பல்லுக்கும் நல்லது. மொத்தத்தில் வேப்பிலை கிருமி நாசினியாக பயன் அளிக்கிறது.

சமீபத்தில் வயறு சம்பந்தமாக மிகவும் கஷ்டப்பட்டேன். இது போல் வேப்பிலை கொழுந்து சாப்பிட்டதில் பூரண குணம் ஆகி விட்டது. எந்தத் தொந்தரவும் இல்லை. இருந்தபோதிலும் தினம் நான் வேப்பிலை சாப்பிட தவறுவதேயில்லை. வேப்பிலையை தினம் குளிக்கும் நீரில் போட்டு வைத்து, சிறிது நேரம் கழித்து குளித்தால் தோல் சம்பந்தமான நோய் வரவே வராது. தோல் அலர்ஜி உள்ளவர்கள் இந்தத் தண்ணீரில் குளித்தால் மறைந்து விடும்.

— பாலா.

# உங்கள் நம்பகமான ஃபாரெக்ஸ் இப்போது, சுவையிலே சிகரம்!

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதம் ஆகும்போது அவனுக்கு புதிய சுவைமிக்க ஃபாரெக்ஸ் துவக்குங்கள். 3 முதல் 4 தேக்கரண்டி வெது வெதுப்பான நீரில் ஒரு தேக்கரண்டி ஃபாரெக்ஸ் கலந்து கொடுங்கள். ஃபாரெக்ஸ் சுவை மிக்கது. முன்னைவிட அதிக ஊட்டச்சத்து மிக்கது.




- சுவை மிக்கது
- ஊட்டச்சத்து மிக்கது

**ஃபாரெக்ஸ்®- சுவையுடன் வளரும் வழி.**

GX/66/213 TML

# இம்மாத இல்லத்தரசி

**முதல் பரிசு:**

**பறக்கும் தட்டு**

தேவையான பொருட்கள்:

பிரெட் துண்டுகள் — 6,
கடலை மாவு — 2 பெரிய ஸ்பூன்,
ஓமப் பொடி — 1 கப்,
புளிச் சட்னி — ½ கப்,
காரச் சட்னி — ½ கப்,
கொஞ்சம் பச்சைக் கொத்தமல்லி,
பொதினா, பச்சை மிளகாய், வெண்ணெய் (கொஞ்சம் சீரகம்).

செய்முறை:

முதலில் பிரெட்டை எடுத்துக் கொண்டு ஏதாவது மூடியினால் நடுவில் இருந்து வெட்டி எடுத்துக் கொள்ளவும். அது மூடியின் அளவு போல் அழகாக இருக்கும். அப்படி வெட்டி எடுத்த துண்டுகளை தனியாக வைத்துக் கொள்ளவும்.

கடலை மாவை தண்ணீரில் கரைத்துக் கொள்ளவும். கொஞ்சம் நீர்ப்பாக இருத்தல் வேண்டும். ஆனால் அதிகமாக நீர்ப்பாக இருக்கக் கூடாது.

புளிச்சட்னி:

ஒரு உருண்டை புளியை பாத்திரத்தில் போட்டுக் கொண்டு, கொஞ்சம் வெல்லம் சேர்த்து, பிறகு தண்ணீர் விட்டு, அடுப்பில் வைத்து கொதிக்க விடவும். நன்றாகக் கெட்டியாக வந்தவுடன், வெளியில் எடுத்து, வடிகட்டி எடுக்கவும். சக்கையை எறிந்து விடவும். வடிகட்டி எடுத்த எஸென்ஸில், கொஞ்சம் சீரகப் பொடி, கொஞ்சம் காரப் பொடி சேர்க்கவும்.

காரச் சட்னி

பச்சைக் கொத்தமல்லி, பொதினா, இரண்டு பச்சை மிளகாய், எல்லாம் மிக்ஸியில் போட்டு நன்றாகக் கெட்டியாக அரைத்து வைத்துக் கொள்ளவும்.

தோசைக் கல்லைக் காயப் போடவும். பிரெட் துண்டின் ஒரு பக்கத்தில் கொஞ்சம் வெண்ணெய், அதன் மேல் காரச் சட்னி இரண்டையும் தடவி, கரைத்த கடலை மாவில்





முக்கி தோசைக்கல்லின் மேல் போடவும். சிறிது எண்ணெய் விட்டு, நன்றாக சிவந்தவுடன் திருப்பிப் போடவும். மறு பக்கமும் சிவந்தவுடன் வெளியில் எடுத்து வைத்துக் கொள்ளவும். எல்லா பிரெட் துண்டுகளையும் இது போல் செய்யவும். எல்லாவற்றையும் ஒரு தட்டின் மேல் வைத்து அலங்காரம் செய்யவும். ஒவ்வொரு பிரெட் துண்டின் மேலும், புளிச் சட்னி, ஓமப் பொடி, பச்சைக் கொத்தமல்லி போடவும். வேண்டுமானால் பச்சை வெங்காயம் பொடியாக அரிந்து

போடலாம்.

— திருமதி. வசந்தி ரகுபதி,
கல்கத்தா — 27.

## இரண்டாம் பரிசு:

### ஜவ்வரிசி ப்ரெட் வடை

தேவையான பொருட்கள்:

ஜவ்வரிசி — ¼ கோப்பை,
பெரிய உருளைக் கிழங்கு — 1,
ரொட்டி — ½,
வெங்காயம் — 1,
பச்சை மிளகாய் — 2,





கொத்துமல்லி — ¼ கட்டு,
கடலை மாவு — 1 மேசை கரண்டி,
வறுத்த கடலை — ¼ கோப்பை,
மஞ்சள் தூள் — ¼ தேக்கரண்டி,
சீரகம் — ¼ தேக்கரண்டி,
எண்ணெய் — வறுப்பதற்குத் தேவையான அளவு,
உப்பு — தேவைக்கேற்ப.

செய்முறை:

உப்பு கலந்த நீரில் ஜவ்வரிசியை ஒரு நிமிடம் ஊறவைத்து வடிகட்டிக் கொள்ளவும்.

ரொட்டியைச் சிறிது நீர் தெளித்து பிசைந்து கொள்ளவும். அத்துடன் வேக வைத்து மசித்த உருளைக் கிழங்கையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

வேர்க்கடலையை உரித்துப் பொடி செய்து கொள்ளவும். கொத்துமல்லி, பச்சை மிளகாய், வெங்காயம் இவற்றைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும்.

இவை எல்லாவற்றையும் பிசைந்து கோன் வடிவில் உருட்ட வேண்டும். அல்லது வடை போல் நடுவில் துவாரம் செய்து கொள்ளலாம். இதை எண்ணெயில் பொரித்தெடுத்து, சூடாகப் பரிமாறவும்.

— பிரேமலதா ஜான்சன், திருச்சி — 12.

## மூன்றாம் பரிசு:

### 'ப்ரெட் புட்டு'

தேவையான பொருட்கள்:

இனிப்புப் புட்டு
உதிர்த்த பிரெட் — 2 கப்,
வெல்லம் பொடி செய்தது — ¾ கப்,
ஏலக்காய் பொடி செய்தது — 1 டீஸ்பூன்,
தேங்காய் துருவியது — ¾ கப்,
முந்திரி, திராட்சை, நெய் — 7–8 ஸ்பூன்,

காரப் புட்டு

உதிர்த்த பிரெட் — 2 கப்,
துவரம் பருப்பு — ½ கப்,



உமா சந்திரன்

கடலைப் பருப்பு — ½ கப்.
தேங்காய் துருவியது — ½ கப்.
உப்பு — தேவையான அளவு.
பச்சை மிளகாய் (அதிக காரமில்லாதது) 7 அல்லது 8.
பெருங்காயம் — சிறு துண்டு.
கறிவேப்பிலை, கடலை எண்ணெய் அல்லது ரிபைண்டு ஆயில் — ¼ கப்.

செய்முறை:

பிரெட்டுகளை ஓரம் நறுக்கி விட்டுத் தண்ணீர் தெளித்து உதிர்த்து வைத்துக் கொள்ளவும். உலர்ந்த பிரெட்டானால் தண்ணீரில் நனைத்து பிழிந்து விட்டு உதிர்த்துக் கொள்ளவும். இதை வாணலியில் 3—4 ஸ்பூன் நெய் விட்டுப் பொன் நிறத்தில் புரட்டி எடுத்து வைத்துக் கொள்ளவும். அதில் இருக்கும் கொஞ்சம் தண்ணீர் கூட ஆவியாகிப் போய் உதிராக இருக்கும். பிறகு வாணலியில் அரை கப் தண்ணீர் விட்டுப் பொடித்த வெல்லத்தைப் போட்டு பாகு காய்ச்சவும். அதில் தேங்காய் சேர்த்துக் கொள்ளவும். பாகு நல்ல கெட்டியான பிறகு இறக்கி அதில் உதிர்த்த பிரெட்டைப் போட்டுக் கிளறவும். ஏலக்காய்ப் பொடி, முந்திரி, திராட்சை வறுத்தது எல்லாவற்றையும் போட்டுக் கிளறவும். மிகவும் மிருதுவாகவும் ருசியாகவும் இருக்கும்.

காரப் புட்டுக்கும் பிரெட்டை மேல் சொன்ன மாதிரி உதிர்த்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டுப் பொன் நிறமாக புரட்டி எடுத்து வைத்துக் கொள்ளவும். கடலைப் பருப்பு, துவரம் பருப்பு இரண்டையும் ஒரு மணி நேரம் ஊறவைத்து, அதைப் பச்சை மிளகாய், தேவையான அளவு உப்பு, பெருங்காயம் சேர்த்து கரகரப்பாக அரைத்து ஆவியில் வேக வைத்து எடுக்கவும். கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை தாளித்து வெந்தப் பருப்பை எண்ணெய் விட்டு விட்டு கிளறி நன்றாக உதிர்க்கவும். பிறகு பிரெட்டை அதனுடன் சேர்க்கவும். பிரெட்டில் உப்புப் போட வேண்டிய அவசியமில்லை. வேண்டுவோர் சிறிது அளவு சேர்த்துக் கொள்ளலாம். கடைசியில் அவரவர் ருசிக்குத் தக்கவாறு எலுமிச்சை ரசம் மேலாக சிறிதளவு விட்டுக் கிளறியும் சாப்பிடலாம். எலுமிச்சை இல்லாமலும் ருசியாக இருக்கும்.

— ஜெயா லக்ஷ்மண்.

**ஆறுதல் பரிசு:**
**மில்க், ப்ரூட், ப்ரெட் புட்டிங்**

தேவையான பொருட்கள்:

பிரெட் — 1.
கான் ப்ளவர் — 2 டீஸ்பூன்.

பரிசுப் பொருட்கள்:





முதல் நாள் இரவே ஒரு கிலோ புழுங்கலரிசியை ஊறவைக்கவும். மறு நாள் அதை கல் நீக்கி, கழுவி அத்துடன் ஒரு டேபிள் ஸ்பூன் உப்புச் சேர்த்து மசிய அரைத்து அடுப்பில் நிதானமான தீயில் அந்த மாவை நன்றாகக் கிளறி வெந்ததும் இறக்கவும். ஒரு பிளாஸ்டிக் ஷீட்டில் அந்த மாவை இடியாப்ப அச்சில் வைத்து நீளவாட்டில் பிழிந்து 2, 3 நாள் வெய்யிலில் காய வைக்கவும். பிறகு அதை ஒரு டப்பாவில் எடுத்து வைக்கவும். எதிர்பாரா விருந்தாளிகள் வந்தால், காய வைத்த இடியாப்ப குச்சிகளை சம அளவில் ஒடித்து வெந்நீரில் ஊறவைத்து 2, 3 நிமிடம் கழித்து தண்ணீரை வடிக்கவும். தேவையான ருசிகளில் (எலுமிச்சம் பழ சாதம், தேங்காய் சாதம், சர்க்கரை பொங்கல் செய்வது போல்) செய்து விருந்தினர்களை சமாளித்து பாராட்டையும் பெறலாம். காய வைத்து ஒரு வருடம் வரை கெடாமல் இருக்கும்.

— சிவகாமி.

பால் — 1 லிட்டர்,
சர்க்கரை — 250 கிராம்,
திராட்சை (கிஸ்மிஸ்) — 20 கிராம்,
டூட்டி ப்ரூட்டி — 20 கிராம்,
முந்திரி — 10 அல்லது 15,
ஏலக்காய் — 10,
ரோஸ் எஸன்ஸ் — 1 டீஸ்பூன்
இரண்டு வகை கலர் ஒவ்வொரு சிட்டிகை
பிரெட் டோஸ்ட் செய்ய தேவையான நெய்.

செய்முறை:

பிரெட் ஸ்லைசை தோசைக் கல்லில் நெய் விட்டு டோஸ்ட் செய்து கொள்ளவும். ஒரு கால் லிட்டர் பாலைக் காய்ச்சி சூடாக பிரெட் டோஸ்ட் செய்ததில் விட்டு ஊற வைக்கவும். மீதி பாலை அடுப்பில் வைத்து 2/3 ஆகும் வரை காய்ந்ததும் அதில் கான் ப்ளவரை கரைத்து விட்டுச் சர்க்கரை போட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கி வைக்கவும்.

நன்றாக ஆறினதும் பிரெட் ஸ்லைஸ், பால், ஏலக்காய்ப் பொடி, எஸன்ஸ் எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து மிக்ஸியில் போட்டு ஒரு சுற்று சுற்றி அதை மூன்று பாகமாக செய்து ஒரு பாகத்தில் பச்சைக் கலர் கலந்து புட்டிங் மோல்ட் அல்லது அலுமினிய குக்கர் பாத்திரத்தில் சமமாக பரப்பி ஒரு அரை மணி நேரம் ப்ரீஸரில் வைக்கவும். பிறகு கலர் போடாது ஒரு பாகத்தை அதன் மேல் பரப்பி மேலும் அரை மணி ப்ரீஸரில் வைக்கவும்.

மூன்றாவது பாகத்தில் ஆரஞ்சு கலர் கலந்து அதன் மேல் பரப்பி மேலாக வறுத்து ஒடித்தமுந்திரி, கிஸ்மிஸ், டூட்டி புரூட்டியை தூவி மீண்டும் அரை அல்லது ஒரு மணி நேரம் ப்ரீஸரில் வைத்து வேண்டிய அளவு துண்டுகள் செய்து கிண்ணங்களில் பரிமாறலாம்.

— அகிலா, ஹைதராபாத் — 7.

**ஆறுதல் பரிசு:**

**ப்ரெட் சுழியன்**

தேவையான பொருட்கள்:

பிரெட் — 1 பாக்கெட்,
கடலைப் பருப்பு — ¼ கிலோ,
நாட்டுச் சர்க்கரை — 200 கிராம்,
தேங்காய் — 1 மூடி,
ஓ.கே. ஆயில் — ½ லிட்டர்,
ஏலக்காய் — 3,

செய்முறை:

முதலில் கடலைப் பருப்பை வேக வைத்து விழுதாக அரைத்துக் கொள்ளவும். பிறகு அதனுடன் துருவிய தேங்காய்ப் பூ சர்க்கரை, பொடித்த ஏலக்காய் அனைத்தையும் ஒன்றாகக் கலந்து சிறு சிறு உருண்டையாக உருட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரெட்டைச் சுற்றி சிவந்து உள்ள பகுதியை மட்டும் கட் பண்ணி எடுத்து விடவும். பிறகு பிரெட்டை தண்ணீரில் நனைத்து இரு உள்ளங்கையில் நடுவில் வைத்து லேசாக அழுத்தினால் தண்ணீர் வந்து விடும். பிறகு பிரெட்டுடன் நடுவில் உருண்டையை வைத்து நன்றாக மூடி உருண்டையாக உருட்டி எண்ணெயில் பொரித்து எடுக்கவும். இது சாப்பிட சுவையாக இருக்கும்.

— ஆர். உமா சந்திரன், மதுராந்தகம்.

# அறிமுகம் இதோ ஒரு மணிப் பயல்.

**பஜாஜ் காம்பேக்ட் வாஷிங் மெஷின். நாசூக்கான களைதுலங்கும் நன்மணி... இதற்கு நாங்கள் இட்ட பெயர்: மணிப் பயல்.**



காம்பேக்ட் என்னென்ன வரங்களை வாரிவழங்குது பாருங்கள் வரிசையாக.

**ஸிங்கிள் பட்டன் கண்ட்ரோல்:** நவீனமிக்க CMOS மின் ஸர்க்யூட்—துணி வகைக்கேற்ப 1 முதல் 4 நிமிடங்கள் வரை, அலசி வெளுக்க 4 வித கற்றேட்ட வகைகளை அமைத்துக் கொள்ள அனுமதிக்கிறது. பழங்கால பாணி டைமர்கள் இனி உமக்கில்லை.

**எதிர்கால நவீனக் கலை:** சிட்டு வடிவிலே சிகரமான கட்டழகு இழையும் வாஷிங் மெஷினாக ஓங்கி விளங்குவது காம்பேக்ட் தான். குறைந்த இடத்தில் அடங்கிடும். எளிதில் நகர்த்த சரளமான உருள் சக்கரங்கள் பதிந்த மெஷின்.

**LED இயங்கு நிலைகாட்டி:** எலக்ட்ரிக் ஸெட்டிங் நிலையினைக் காட்டுகிறது ஆடியோ ஒலிச் சைகைகளோடு. சலவை முடிந்ததுமே அதனை அறிவிக்கிறது ஓர் அலாரம் ஓசை.

**திசை மாறிமாறிச் சுற்றும் வாஷர்:** அதிகத் துப்புரவான சுத்தமும், உயர்த்தியான சலவையும் பெற உதவுகிறது.

**திடவலு மிக்கது** காம்பேக்ட். ஸ்டைல் மிளிரும் வலுவான ஃபைபர்கிளாஸ் கட்டுமானம். உட்புறம்: அரிமான எதிர்ப்புள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தொட்டி.

**உள்நோக்க வாகு: அக்ரிலிக் மூடி:** உட்புறம் நடக்கும் சலவையை நேரில் நீங்கள் பார்த்திடலாம்.

**நிறைவான சலவைத் திறம்:** காம்பேக்ட் சிற்றடக்கமாக இருப்பினும் எத்தனை துணிகளை வெளுக்கிறது பாருங்கள்: ஒரே வீச்சில் 1 புடவை, 2 ஷர்ட்டுகள், 1 ஜீன்ஸ், 1 ஷீட், 5 சிறு உருப்படிகள்.

**பேக்-அப் ஸ்விட்சு:** உங்கள் காம்பேக்ட் மெஷினின் எலக்ட்ரானிக் பேனலுக்கு எப்போதேனும் ரிப்பேர் தேவைப்பட்டால், மெஷின் வேலை தடைப்படாது. பேனலைக் கழற்றிப் பழுது திருத்தக் கொடுத்துவிட்டு, பிக்-அப் ஸ்விட்சைப் பயன்படுத்தி மெஷினைத் தொடர்ந்து இயக்கலாம். மறவாதீர், சிறியதே அழகு: சிக்கனமே செழிப்பு. முத்தான அழகோடு மூளை பலம். இத்தனை பெருமைகளும் உரிமையோடு பனிச்சிடும் எந்திரம் பஜாஜ் காம்பேக்ட்—இல்லத்தரசிக்கு மகத்தான நல்வரம்.



bajaj
COMPACT

பஜாஜ் காம்பேக்ட்
வாஷிங் மெஷின்




**அடக்கமான சிறு வடிவம், அபார மூளைத்திறம், சலவைக்கு நல்வரம்.**

# மாற்றாந் தாய்கள்

**வித்தியாசமான உறவுகள் —**



''நீங்களே சொல்லுங்கள், கடமைகளை மட்டும் கழுத்தில் கட்டிவிட்டு உரிமைகளை மறுப்பது எந்த வி த த் தி ல் நியாயம்?'' என்று திடீரென்று கேட்டாள் நாயகி. நாயகியைப் பற்றி சில வார்த்தைகள். ஜாதக தோஷத்தாலும், வீட்டின் ஏழ்மை நிலையாலும் 28 வயதுவரை திருமணம் செய்து கொள்ள முடியாமலிருந்தவள். அதனால் ராகவனுக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப் பட்டவள். ராகவனின் முதல் மனைவி மூலம் பிறந்திருந்த கீதா, ஷ்யாம் ஆகிய இருவரிடமும் நாயகி அதீத பாசம் கொண்டிருந்ததாகவும் சொல்ல முடியாது. அதற்காக அலட்சியம் காட்டியதாகவும் சொல்ல முடியாது.

''கீதாவுக்கும் ஷ்யாமுக்கும் நான் சாப்பாடு விஷயத்திலேயிருந்து, ட்ரஸ் விஷயம் வரை பார்த்துப் பார்த்துதான் செய்கிறேன்.

இருந்தும் என்ன பிரயோஜனம்? அவர்களை தவறு செய்தபோது கண்டித்ததற்கு என் கணவர் என்னை எரிக்கிற மாதிரி பார்த்து விட்டு 'என்ன இருந்தாலும் அம்மா அம்மா தான்; சித்தி சித்திதான்'னு சொல்லிட்டுப் போறார். மாற்றாந்தாயாக உறவுமுறை இருந்தாலே என்ன செய்தாலும் பேரெடுக்க முடியாது போலிருக்கு'' என்று வருத்தத்துடனும், உஷ்ணத்துடனும் சொன்னாள். தொடர்ந்து ''யாருக்கோ பிறந்த குழந்தைகளைத் தன் குழந்தைகளாக நினைத்துப் பழகுவது எவ்வளவு சிரமம்னு அந்த நிலையிலே இருந்து பார்ப்பவர்களுக்குத்தான் தெரியும்'' என்றாள்.

நாயகியின் எண்ணங்களைக் கேட்ட மனவியல் மருத்துவர் சாந்தி கருணாகரன் சில நிமிடங்கள் ஒன்றும் பேசாமலிருந்தார். பிறகு தன் கருத்துக்களைக் கூற ஆரம்பித்தார்.

''கதைகளிலும் சரி, திரைப்படங்களிலும் சரி, மாற்றாந்தாய்கள் தங்கள் கணவரின் முதல் தாரத்துக் குழந்தைகளைக் கொடுமைப் படுத்துவதாகத்தான் சித்தரிக்கப் படுகிறார்கள். ஏன், 'மாற்றாந்தாய் மனப் பான்மை' என்ற சொற்றொடரே நிலவுகிறதே! இது எந்த அளவுக்கு உண்மை? மிகைப்படுத்தப்பட்ட உண்மை என்று வேண்டுமானால் கூறலாம். 'அப்படியானால் உண்மை அதில் ஓரளவாவது உண்டு என்று அர்த்தமாகிறதே! மூத்தவள் (அதாவது கணவரின் இறந்து போன முதல் மனைவி) குழந்தையின் மேல் அன்புமழை பொழியும் பெண்கள் இல்லையா என்ன?' என்று சிலர் கேட்கலாம். இருக்கிறார்கள்.

ஆனால் கணிசமான பெண்கள் தங்கள் மூத்தவள் குழந்தைகளைச் சரியாக நடத்துவதில்லைதான். ஆனால் அதற்குக் காரணம் அவர்கள் மட்டுமல்ல.

எந்தப் பெண்ணும் அடிப்படையில் கொடியவள் அல்ல. பின்னே மாற்றாந்தாயாக உருவெடுக்கும்பெண்களில்சிலருக்கு மட்டும் ஏன் வன்ம உணர்ச்சி வருகிறது? இதற்குப் பல்வேறு காரணங்கள் உண்டு.

முதலாவதாக மூத்தவள் குழந்தையைப் பார்க்கும் போதெல்லாம் 'நான் இரண்டாமவள்தான்' என்ற நினைவு பொட்டில் அறைந்தாற்போல எழுகிறது. இந்த எண்ணம் அக்குழந்தையைப் பார்க்கும் போதெல்லாம் எரிச்சலை ஏற்படுத்தலாம்.

பெரும்பாலும் இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்படும் பெண் தன் பிறந்த வீட்டின் வறுமைச் சூழ்நிலையினால்தான் அந்த ஏற்பாட்டிற்கு ஒத்துக் கொள்கிறாள். தன் மூத்தவள் குழந்தையிடம் பழகும் போதெல்லாம் தன் பிறந்த வீட்டு வறுமையும், தன் தந்தையின் 'கையாலாகாத்தனமும்' சேர்ந்து ஞாபகத்திற்கு வந்து அவளை வருத்தம் கொள்ள வைக்கிறது.

ஒரு பெண் தன் மூத்தவள் குழந்தையிடம் எரிச்சல்பட, அவளது கணவனே காரணமாக அமைந்து விடுவதுண்டு. உதாரணமாக ''என் குழந்தைக்கு ஒரு அம்மா வேண்டுமென்பதற்காகத்தான் உன்னைக் கல்யாணம் செய்துகிட்டேன்'' (அது எவ்வளவு தூரம் உண்மையென்பது வேறு விஷயம்) என்று தன் இரண்டாவது மனைவியிடம் ஒருவன் கூறினால் அது அவளது உள்ளத்தைப் புண்படுத்தலாம். தன் பெண்மையே அவமானப்படுத்தப் பட்டதாக எண்ணி, அந்தக் குழந்தையின் மீது அவள் ஆத்திரம் கொள்ளலாம்.

புதிதாகக் கல்யாணமான பெண் தன் கணவனோடு தனியாக வெளியில் செல்ல ஆசைப்படலாம். அப்போது அப்பெண்ணுக்கு மூத்தவள் குழந்தை ஓர் இடையூறாகத் தோன்றலாம்.

ஆனாலும் நம் நாட்டில் இரண்டாம் தாரமாய் வாழ்க்கைப்படும் பெண்கள் ஓரளவு வயது முதிர்ந்தவர்களே என்பதைப் பார்க்கும் போது, அப்பெண்களுக்கு மன முதிர்ச்சியும் வந்திருக்க வேண்டுமென்று நான் எண்ணுகிறேன். எனவே மேற்கண்ட சூழ்நிலைகளில் கோபமோ, வருத்தமோ ஏற்பட்டால் அதைக் குழந்தையின் மேல் காட்டுவது தவறு.

சிலசமயம் விசித்திரமான சந்தேகங்களும் ஏற்படுவதுண்டு. என்னிடம் ஒரு பெண்ணை அவள் கணவர் அழைத்து வந்தார். அவள் அவரது இரண்டாவது தாரம். ''டாக்டர், என் முதல் மனைவியின் மூலம் பிறந்த குழந்தை மீது இவள் மிகவும் அன்பு செலுத்திக் கொண்டுதானிருந்தாள். இப்போது கொஞ்ச காலமாக என் மீதும் சரி, என் குழந்தையின் மீதும் சரி இவள் அடிக்கடி கோபம் கொள்கிறாள். சில சமயம் திடீரென்று சூனியப் பார்வை பார்க்கிறாள். எனக்குப் பயமாக இருக்கிறது. நாங்கென்னவோ அவளை வீட்டில் கனிவுடன்தான் நடத்துகிறோம். இதுவரை எங்களுக்குள் குறிப்பிடும்படியான எந்த சண்டையும் நடந்ததில்லை'' என்றார்.

அந்தப் பெண்ணை த் தனியே அழைத்து பலவித கேள்விகள் கேட்டதில், "என் கணவர் என்னிடமும் சரி, என் மூத்தவள் குழந்தையிடமும் சரி மிகவும் கனிவாகத்தான் நடந்து கொள்கிறார். ஆனால் எனக்குக் கல்யாணமாகி இரண்டு வருடங்களாகியும் நான் இன்னும் கருத்தரிக்கவில்லை. மூத்தவள் குழந்தையிடம் நான் கொண்டுள்ள அன்பு குறையக் கூடாது என்பதற்காக இவர் எனக்குத் தெரியாமலேயே கருத்தடை ஆபரேஷன் செய்து கொண்டு விட்டாரோ என்று எனக்கு சந்தேகம். இதை அவரிடம் கேட்டால், அவர் என்மீது கோபித்துக் கொள்வாரோ என்று பயம். இந்த சந்தேகத்தை மனத்திலேயே வைத்துக் கொண்டு அதை நிவர்த்தி செய்து கொள்ள வழி இல்லாததாலோ என்னவோ எல்லோரிடமும் எனக்கு அலுப்பும் சலிப்பும் ஏற்படுகிறது'' என்றாள்.

பிரச்னை பிடிபட்டுப் போக அவள் கணவனிடம் இது பற்றி நாசூக்காக விசாரித்த போது அந்தப் பெண்ணின் சந்தேகம் ஆதாரமற்றது எனத் தெரியவந்தது. பிறகு அவளும் சகஜ நிலைக்கு வந்தாள். சென்ற மாதம் அவளைக் கடைத்தெருவில் பார்த்த போது ''எனக்கு இப்போது இரண்டு குழந்தைகள்'' (மூத்தவளின் ஒரு குழந்தையும் அதில் அடக்கம்) என்றாள் சந்தோஷத்துடன்.

ஆனால் மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சியில் அப்பெண் சந்தேகம் நியாயமானதே என்று ஆகியிருந்தால் அதாவது அவள் கணவன் கருத்தடை ஆபரேஷன் செய்து கொண்டிருந்தால், அவளை சகஜ நிலைக்குத் திருப்பியிருக்க முடியுமா? அது அவள் கணவன் அவளுக்கிழைக்கும் பெரும் துரோகமல்லவா?

முதல் மனைவியின் வாழ்நாட்களுக்குப்

இப்பொழுதெல்லாம் ஏகப்பட்ட செலவு செய்து விசேஷங்களுக்கு போட்டோ எடுத்து ஆல்பத்தில் பிளாஸ்டிக் உறைகளில் போட்டு வைக்கிறோம். அப்படி வைப்பதால் கொஞ்ச நாள் கழித்து பிளாஸ்டிக் உறைகளில் புழுக்கத்தால் தண்ணீர் விட்டுக் கொண்டு போட்டோக்களில் புள்ளிகள் விழுந்து வீணாகி விடுகிறது. ஆகையால் மாதம் ஒருமுறை போட்டோக்களை உறைகளிலிருந்து வெளியே எடுத்து காற்றாட வைத்து விட்டு உள்ளே எடுத்து வைக்க வேண்டும்.

— ஆர். ஜானகி.

பிறகு இரண்டாவது மணம் செய்து கொள்பவர்களுக்கு சில வார்த்தைகள். உங்களுக்கு வேண்டுமானால் மணவாழ்வு இரண்டாவதாக இருக்கலாம்,. அந்தப் பெண்ணுக்கு இது முதல் வசந்தம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். யாராவது ஏதாவது நினைத்துக் கொள்வார்களோ என எண்ணி, அந்தப் பெண்ணுக்குரிய உரிமைகளையும், சௌகரியங்களையும் அளிக்காமல் இருந்து விடாதீர்கள். முக்கியமாக உங்கள் முதல் மனைவி மூலம் பிறந்த குழந்தைகளெதிரே அவளை அலட்சியப்படுத்துதல் கூடவே கூடாது. அந்தக் குழந்தைகளின் மீது உங்களுக்குள்ள பாசத்தை வெளிப்படையாகக் காண்பிப்பது போலவே, உங்கள் இரண்டாவது மனைவியின் மீதும் அன்பை வெளிப்படையாகக் காண்பியுங்கள். அவள் தன் மூத்தவள் குழந்தைகளிடம் அன்பை மட்டுமே செலுத்த வேண்டும்; (கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட நாயகியின் மனக்குறையைப் போல) கண்டிப்பு காட்டக் கூடாது என்று சொல்லக்கூடாது. ஒரு தாய்க்குரிய முழு லைசன்சும் அவளிடம் இருக்கட்டும்.

மணப்பெண்ணாக ஆகும் போதே மாற்றாந்தாய் எனும் பொறுப்பையும் சுமக்க நேரும் சகோதரிகளுக்கும் சிலவற்றைச் சொல்ல விரும்புகிறேன். பெரும்பாலோர் உங்கள் சொற்களைக் காமாலைக் கண்ணோடுதான் பார்ப்பார்கள் என்பதால் அதிகப் பொறுப்புணர்வோடு நீங்கள் செயல்பட வேண்டும். தன் இறந்து போன முதல் மனைவியைப் பற்றியோ, அவள் மூலம் பிறந்த குழந்தைகளைப் பற்றியோ உங்கள் கணவர் பாராட்டிப் பேசினால் முகம் சுளிக்காதீர்கள்; மனம் சுருங்காதீர்கள். ஏனென்றால் மூதல் மனைவி மீது அவர் வைத்திருந்த அன்பு உங்கள் மீது பாய வாய்ப்புண்டு. அவள் செய்த சேவைகளை சுலபமாக அவர் மறந்து விட்டிருந்தால், உங்களிடமும் அவர் நன்றியில்லாதவராக விளங்கலாம். மூத்தாளின் குழந்தைகளை உங்களுக்கும் உங்கள் கணவருக்கும் இடையே எழும் குறுக்குச் சுவராக நினைக்க வேண்டாம். உங்கள் கணவரின் அன்பை சுலபத்தில் பெற ஓர் எளிய சாதனம் அக்குழந்தைகள். அவர்கள் மீது நீங்கள் செலுத்தும் அன்பு பல மடங்காக அவர்கள் மூலமாகவும் உங்கள் கணவர் மூலமாகவும் உங்களிடமே திரும்பி வரத்தான் செய்யும்.''

— அருண் சரண்யா

# நிலைப்படியில் கலைநயம்!

தேவையான பொருட்கள்:

குழந்தைகளுக்கான உணவு டின்னில் வரும் கரண்டி (நீலம், சிவப்பு, வெள்ளை) ஏதேனும் ஒரு கலர் 56.

அதே நிறத்தில் கலர் நரம்பு ஒயர்.

பெல் வடிவ மணி 14 (நிறத்துக்குப் பொருத்தமாக).

செய்முறை:

கோன் ஊசியை (மூட்டை தைப்பது) விளக்கில் காட்டி நன்றாக சூடுபடுத்திக் கொண்டு இந்தக் குறிப்பிட்ட இடங்களில் ஓட்டை போட்டு வைத்துக் கொள்ள வேண்டும். பின்னர் ஒன்றோடு ஒன்றாக கலர் நரம்பு ஒயர் போட்டுக் கட்ட வேண்டும். முதலில் 7, பின்னர் 6, 5, 4, 3, 2, 1 என்று கோர்த்து, மீண்டும் 1, 2, 3, 4, 5, 6, 7 எனக் கோர்த்து, அடியில் பெல் வடிவ மணியைக் கட்டவேண்டும். மெல்லிய நைலான் கயிற்றில் மேலே குறிப்பிட்டபடி கோர்க்கவும். மிகவும் குறைந்த செலவில் கரண்டி தோரணத்தால் வீட்டை அலங்கரிக்கலாம்.

— ஆர். ஹாஜிரா.



# 70 வருடகாலமாக வேறு எந்த நறுமணம் இந்தியர்களின் மனதை கவர்ந்துள்ளது?

மூன்று தலைமுறையாக, இதன் தரத்தை முழுமையாக நம்பி இந்த நறுமணத்தை பெரிதும் விரும்பி வருகிறார்கள். ஏனென்றால் மைசூர் சாண்டல் சோப் தயாரிப்பதற்கு சுத்தமான சந்தன எண்ணெயையே உபயோகிப்பதால் இயற்கையின் சந்தன நறுமணத்தையும் நன்மையையும் அளிக்கிறது.

**மைசூர் சாண்டல் சோப்**

**ஒருமுறை உபயோகிப்பீர்**
**தொடர்ந்து இதையே நாடுவீர்.**









Net Weight: 75 gms
Price: Rs. 6.25 (inclusive of all taxes)



தயாரிப்பவர்கள்: கர்நாடகா சோப்ஸ் அண்டு டிடர்ஜென்ட்ஸ் லிமிடெட் பெங்களூர்-560 055

MCA/KSDL/59 TAM

# ஆயுர்வேத முறையில் புற்று நோய்க்கு சிகிச்சை



லக்கப்பா அனுமந்தப்பா பூஜாரியாகிய எனக்கு வயது 39. எனது இடது காலில் சர்கோமா மிருதுவான தசையில் (Sarcoma Soft Tissue) புற்று நோயினால் அல்லல்பட்டுக் கொண்டிருந்தேன். இரண்டு முறை ச ஸ்திர சிகிச்சை செய்து கொண்டும் கெமோ தெரபி மற்றும் ரேடியம் சிகிச்சை செய்து கொண்டும் (Chemotherapy and Radiation) எந்த குணமும் தெரியவில்லை.

நான் நம்பிக்கை தளர்ந்த நேரத்தில் கன்னட பத்திரிகை ஒன்றில் ஹைதராபாத் சிக்கட்பள்ளியைச் சேர்ந்த ஆயுர்வேத டாக்டர் எம். பாபுராவ் அவர்களைப் பற்றி அறிந்தேன். நான் டாக்டர் பாபுராவ் அவர்களிடம் கடந்த ஒன்பது மாதங்களாக மருந்து சாப்பிட்டு வந்தேன். இப்பொழுது நான் பூரண குணம் அடைந்திருக்கிறேன்.

நான் இந்த விளம்பரம் செய்வதன் நோக்கம் என்னவென்றால் இதே வியாதியினால் கஷ்டப்படும் நோயாளிகள் டாக்டர் பாபுராவை அணுகி சிகிச்சை பெற்று குணம் பெறலாம்.

**லக்கப்பா அனுமந்தப்பா பூஜாரி**

ஜவுளி வியாபாரி,
முடல்கி போஸ்ட், கோகக் தாலுக்கா,
பெல்காம் ஜில்லா, கர்னாடகா.

கால அட்டவணை

| விலாசம் | போன் நம்பர் | பார்க்கும் கிழமைகள் |
|---|---|---|
| டாக்டர் எம். பாபுராவ் வீடு<br>கேன்ஸர் இன்பர்மரி<br>2-1610, செடம்ரோடு<br>மொமுலா கூடம்<br>குல்பார்கா (கர்னாடகா) | 21452 | பிரதி திங்கள், செவ்வாய் |
| கேன்ஸர் இன்பர்மரி<br>1-1-271/3, சிக்கட் பள்ளி<br>பஸ் ஸ்டாண்டு அருகில்<br>ஹைதராபாத் 20 | 64735 | பிரதி வெள்ளி |
| C/o ஹோட்டல் ராம் இண்டர்நேஷனல்<br>114 கோடம்பாக்கம் நெடுஞ்சாலை<br>சென்னை 34 | 473350<br>473422 | பிரதி சனி |
| C/o ஹோட்டல் பிருந்தாவன்<br>மகாத்மா காந்தி ரோடு<br>பெங்களூர் | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o ஹோட்டல் மிட்டவுன்<br>அன்டேரி (மேற்கு<br>ரயில்வே ஸ்டேஷன் எதிரில்)<br>பம்பாய் | 6286635<br>6203476<br>6288882 | பிரதி புதன் |

# இனி இவர்கள்...

"அம்மா என்னடி சொல்றா?"

"என்ன சொல்றது போ. நா அந்த விஷயத்தை சொன்னதுலேர்ந்து ஒரேயடியாய் இடிஞ்சி போயிட்டா. சில சமயம் அழுறாளோன்னு தோண்றது. சரியா சாப்பிடவும் மாட்டேங்கறா. இத்தனைக்கும் நான் ரொம்ப பக்குவமாத்தான் சொன்னேன். நாம என்ன மின்ன, பின்ன தெரியா தவாகிட்டே அனுப்பறோமா... இல்ல முதியோர் இல்லத்துல கொண்டு விடறோமா... அவ பெத்த பிள்ளைகிட்டத் தானே அனுப்பறோம்."

"அதானே! ராகவன்கிட்டே போறதுக்கு அம்மா எதுக்கு இத்தனை கலங்கணும்? அவ பெத்த பிள்ளைதானே ராகவன்! அவனுக்கும் அவன் பெண்டாட்டிக்கும் பாத்தியதை இல்லையா என்ன... அவனுக்குக் கல்யாணமானதுலேர்ந்து. அம்மா அவனோட சேர்ந்தாப்ல எத்தனை நாள் இருந்திருப்பா..."

"ஆமா வத்ச! இத்தனை வருஷமா அம்மா நம்மளோடல்லாம் இருந்துட்டதாலே ராகவனும் கவலை இல்லாம இருந்துட்டான். ஏதோ நமக்கு வசதி இருந்ததாலேயும், பிக்கல் பிடுங்கல் அதிகம் இல்லாததாலேயும் அம்மாவை இஷ்டப்பட்டவரை வெச்சுக்க முடிஞ்சுது.. அதுக்காக ராகவனுக்குக் கடமை இல்லையா? அம்மா அனாவசியமா பயப்படறாளோன்னு தோண்றது."

"நாம நல்லா வெச்சுண்டோம். இப்ப மாட்டுப் பொண்ணுகிட்டே போனா படுத்துவாளோன்னு பயப்படலாம். சுலோ வந்தா எல்லாம் சரியாயிடும். அவ எப்ப வராளாம்?"

"அவளுக்கும் விவரமா எழுதியிருக்கேன். அநேகமா நாளைக்கு வந்திடுவா. சுலோ வந்தாத்தான் பேசற விதத்துல பேசி அம்மாவுக்கு புரிய வைப்பா. அம்மா மனசுக்குள்ளேயே எதையோ நினைச்சு குழம்பிக்கறா.."

வத்சலாவும், மாலுவும் அம்மா உறங்கிக் கொண்டிருப்பாள் என்று நினைத்து பேசிக் கொண்டிருக்க —

அடுத்த அறையில் படுத்திருந்த ஜானகிக்குப் பெண்கள் பேசிக் கொண்டிருந்த அத்தனையும் காதில் விழுந்தது. கண்களில் ஈரம் கசிய மனம் ஊமையாய் அழுதது.

தாய்மைப் பாசத்தை இவர்கள் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்ட போது, இவர்களுடன் சேர்ந்து... இவர்களுக்காக ஓடி.. ஓடி உழைத்து,

தான் பெற்ற மகள்கள்தான் என்றாலும், இவர்களது சந்தோஷத்தை மட்டுமே பெரிதாக நினைத்து நடந்து கொண்டது தன் அறியாமைதானோ என்ற நினைப்பு மீண்டும் மனத்தில் எழ.. நடந்து போனதையே திரும்பத்திரும்ப நினைத்துப்பார்க்கத் தோன்றியது...

ராகவனின் திருமணம் முடிந்திருந்த சமயம் அது. திருமணத்திற்காக வந்திருந்த பெண்கள் மூவரும் ஊருக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளில் முனைந்திருந்தனர்.

கல்யாண அமளியில் ஆளுக்கொரு பக்கமாய் எறிந்திருந்த சாமான்களை சரிபார்த்து எடுத்து வைத்துக் கொண்டிருந்தனர்.

"வத்ச! என்னோட யெல்லோ பிளவுஸ் கிடைக்கலே. கொஞ்சம் உன்னோடதுல இருக்கா பாரேன்."

"சுலோ! உன்னோட பிளவுஸ் கட்டிலுங்கிழே பார்த்தேன். அம்மா! என் பசங்களோட டிரஸையெல்லாம் தனியா மடிச்சு வெச்சிருந்தேனே... பார்த்தியா?"

"மாலு! உன்னோட நீலப் பாவாடை தேடினியே இந்தா. அப்புறம், ராகவன் உன் பையனுக்கு மருந்து வாங்கி வெச்சிருக்கான். அதையும் மறக்காம எடுத்து வெச்சுக்கோ."

இப்படித் தேடித் தேடி எடுத்து வைத்துக் கொண்டிருந்த போது சுலோசனா வத்சலாவிடம் கேட்டாள்.

"வத்ச! உன் வீட்டுக்காரர் ஏதோ

சாந்திராஜா

ஸ்பெஷல் டிரெயினிங்குக்கு ஜெர்மனிக்கு ஆறு மாசம் போகப் போறதா சொன்னியே எப்பப் போறார்?''

''அடுத்த மாசம் போகணும். ஆனா என்னைத் தனியா விட்டுட்டுப் போக பயப்படறார். இப்பல்லாம் டில்லியிலே ஏதாவது ரகளை நடந்துண்டே இருக்கே. அபி வேற படிக்கறது.''

''அதனாலே என்னடி! டிரெயினிங்கை விட முடியுமா? பேசாம அம்மாவை அழைச்சிண்டு போய் வெச்சுக்கோயேன். அம்மாவுக்கு ஒண்ணும் பிக்கல் பிடுங்கல் இல்லையே. ராகவனுக்கும் கல்யாணம் ஆயாச்சு. அம்மா வந்து இருக்கட்டுமே.''



சுலோ அன்று சாதாரணமாகத்தான் சொன்னாளோ... இல்லை நிஜமாகத்தான் சொன்னாளோ.

மகளுக்குத் துணையாக இருக்க என்று ஜானகி அப்போது புறப்பட்டவள்தான். அதன் பிறகு இந்த பதினைந்து வருடங்களில் ராகவனுடன் சேர்ந்தாற்போல் இருந்தது



அவன் மனைவி பிரசவத்திற்குச் சென்ற போது மட்டும்தான். பதினைந்து வருடங்கள்! காலம் இத்தனை வேகமாய் கூட ஓடுமா?

வத்சலாவிற்குத் துணையாக ஆறு மாதங்கள் இருந்து விட்டுப் புறப்பட நினைத்த போது பெரியவள் சுலோவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. காலம் கடந்து வயிற்றில் வந்து விட்டதாகவும் ஓய்வு தேவை என்று டாக்டர் சொல்லி இருப்பதால் பிரசவத்துக்கு முன்பே அம்மா அங்கு வந்து விடட்டும் என்று எழுதியிருந்தாள்.

சுலோவிற்குப் பிரசவம் முடிந்து குழந்தை தவழத் துவங்கி விட்டான். டேராடூனிலிருந்து மாலு வந்திருந்தாள். மாலுவின் கணவர் மிலிடரியில் ஆபீஸராய் இருக்கிறார். மாலு அம்மாவிடம் சிணுங்கினாள்.

''அம்மா! எனக்குக் கல்யாணமாகி நீ என்னோட சேர்ந்தாற் போல கொஞ்ச நாள் கூட இருந்ததில்லே. அவரும் உன்னை அழைச்சிண்டு வரச் சொல்லியிருக்கார். வேற ஏதானா ஊருக்கு மாத்தலாயிட்டா எப்படியோ. அதாலே நீ என்னோட புறப்படணும்.

''ராகவன் குழந்தையைப் பார்க்கணும் போல இருக்கு.''

''சரி. ரெண்டு பேரும் மெட்ராஸ் போய் ரெண்டு நாள் இருந்துட்டுப் போயிடலாம்.''

இப்படி, பெண்கள் பாசத்துடன் வலிய அழைத்த போது அவர்கள் மேல் கொண்டிருந்த அன்பினால், அவர்கள் அழைப்பை மறுக்க முடியாமல் அங்கும் இங்குமாய் போய் வந்து கொண்டிருந்த நாட்களில் மகள்கள் மூவரும் தன் மேல் கொண்டுள்ள பாசத்தை எண்ணிப் பூரித்துப் போன நாட்கள்தான் எத்தனை!

அம்மா... அம்மா என்று வாய்க்கு வாய் இவளை அழைத்து அத்தனைக்கும் இவள் தான் என்ற பொறுப்பைக் கொடுத்த போது ஏதோ கிரீடம் சூட்டியதைப் போல்...

''அம்மா! இன்னிக்கு, சோப்ரா குடும்பத்தோட இங்கே சாப்பிட வறார். அவாளுக்கு புளியோதரை, அவியல் ரெண்டும், நீ போன தடவை செய்த போது ரொம்பப் புடிச்சுப் போச்சாம். மாதாஜிகிட்டே சொல்லி கண்டிப்பா இதைச் செய்யச் சொல்லியிருக்காராம்.''

''அம்மா! வடாம் போடணும். நீ சொன்னதெல்லாம் வாங்கி வைச்சாச்சு. வத்சுவுக்கும், மாலுவுக்கும் இங்கேயே சேர்த்து போட்டுடு. நீ போறச்சே எடுத்துண்டு போயிடலாம்.''

''அம்மா! நீ சுலோ வீட்டுக்குப் போயிட்டியா! இங்கே வீடே வெறிச்சுன்னு போயிடுத்து. என் கை சாப்பாடே யாருக்கும் பிடிக்கலேம்மா. பசங்கள்ளாம் பாட்டி எப்ப வருவான்னு தினம் ஒரு தடவை கேக்காம இருக்கறதில்லே.''

''அம்மா! டூர் ரொம்ப நல்லா இருந்த தும்மா. நீ இங்கே இருந்தியோ லதாவையும், கீதாவையும் விட்டுட்டு நிம்மதியா போயிட்டு வர முடிஞ்சுது. அப்புறம் டூர்லே இவரோட ஆபீஸர் உன்னை ரொம்ப புகழ்ந்தார்மா. 'மாதாஜியை ஊருக்கு அனுப்பாதீங்கங் கறார்!'

இப்படி, உடம்பு நடமாடிக் கொண்டிருந்த போது இவர்களுக்காக உழைத்து விட்டு இன்று படுக்கைதான் கதி என்று ஆகி விட்ட நேரத்தில் ராகவனிடம் செல்ல மனசு உறுத் திற்று.

நன்றாக இருந்த உடம்புதான். மூன்று மாதங்களுக்கு முன் திடீரென்று இடது கையும் காலும் இழுத்துக் கொள்ள மாலு வின் கணவர் உடனே டாக்டரிடம் அழைத் துச் சென்று மருந்து மாத்திரை என்று ஏகப் பட்டது வாங்கிக் கொடுத்தும் பலனில்லா மல்... இடது கையும், காலும் சுவாதீனமில் லாமல் போய் விட்டது.

இந்த நிலையில்தான் பத்து நாட்களுக்கு முன் மாலு மெதுவாக, ''அம்மா! இந்த நேரத் துல நீ ராகவன்கிட்டக்க இருக்கறதுதான் நல்லது. நாளைக்கு ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆச்சுன்னா புள்ளைகிட்டக்க இல்லாம போயிட்டோமேன்னு நீயும் நினைக்கக் கூடாது. ராகவனும், அம்மாவை என்கிட்டே அனுப்பியிருக்கக் கூடாதான்னு கேட்டுட கூடாது. நாங்க அப்பப்போ வந்து உன்னைப் பார்த்துப்போம். கவலை படாதே..'' என்றாள்.

அப்போதிருந்துதான் இந்த உறுத்தலும்... கவலையும். இரண்டு வாய்க்கு மேல் சாப் பாடு இறங்கவில்லை. ஏதோ இனம் புரியாத வகையில் மனம் கிடந்து உறுத்திற்று.

இந்தப் பதினைந்து வருடங்களில் எந்த வகையில் என் மருமகளுக்கு நான் உதவி இருக்கிறேன்?

மருமகள், மாமியாருக்குச் செய்ய வேண் டியது கடமை என்பது போல், மாமியாருக் கும், மருமகளின் சங்கடங்களில், பங் கெடுத்து உதவ வேண்டியது கடமைதானே!

ராகவனின் மனைவிக்கு எந்தச் சங்கடத் தில் நான் கை கொடுத்திருக்கிறேன்?

என்னால் அவள் எந்த விதத்திலாவது சுகப்பட்டிருக்கிறாளா? பலமுறை, அவ ளுக்கு உடம்பு சுகமில்லாமல் படுத்த படுக் கையாய் இருக்கிறாள் என்று ராகவன் கடிதம் எழுதிய போது எனக்கு ஏன் போகத் தோன்றவில்லை!

அடுத்தடுத்து இரண்டு பிரசவங்களாகி மூன்றாவதில் ஏதோ சிக்கல் ஏற்பட்டு கர்பப் பை எடுக்க வேண்டிய நிலைவரும் போல் உள்ளது என்று அவன் எழுதிய போது —

இது தனக்கு எந்தவிதத்திலும் சம்பந்தம் இல்லாத விஷயம் என்பது போல், மாலு வையும் அவள் கணவரையும் டூர் அனுப்பி விட்டு குழந்தைகளுடன் பொழுதைக் கழித் தது எப்படி நியாயம்?

மருமகள் என்ற முறையில் அவளும் எனக்கு மகள் போலத்தானே.. அவளுக்கும் செய்ய வேண்டிய கடமை இருக்கிறதே..

அவளுக்காக இதுவரை ஒரு வெந்நீர் வைத்துக் கொடுக்காத நான்... இன்று கை, கால் சுவாதீனமில்லாமல் படுத்த படுக்கை யாகி விட்ட நிலையில்.. அவள் செய்ய வேண்டும் என்று உரிமையுடன் எப்படி எதிர்பார்ப்பது?

இப்படி நடந்து போனதையெல்லாம் நினைத்து, தனக்குள்ளாகவே கேள்வி களாய் கேட்டுக் கொண்டு உருகி, குற்ற உணர்வு உந்த ஒரு வாய் சோறு இறங்காமல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

நினைவிலிருந்து கலைந்த ஜானகி புரண்டு படுக்க நினைத்து.. மாலுவைக் கூப்பிட முயன்ற போது மாலுவே, கையில் ஒரு கடிதத்துடன் வந்தாள். கூடவே வத்சு வும்.

''அம்மா! ராகவன் எழுதியிருக்கான். அவனும் சுமதியும் நாளைக்கு இங்கே வராளாம். உன்னை அழைச்சிண்டுப் போகத்தான் வராளாம். இதை உங்கிட்டச் சொல்லி, புறப்படறதுக்கு எல்லாம் தயார் பண்ணி வைக்கச் சொல்லியிருக்கான். ரெண்டு, மூணு நாளுக்குத்தான் தங்க முடியும்னு எழுதியிருக்கான்...''

கேட்டுக் கொண்டிருந்தபோதே ஜான கிக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. பெண்களைப் பார்த்தாள்!

என்னதான் இருந்தாலும் பெண்கள் பெண்கள்தான் என்பது புரிய, தன் இடம் எது என்பது தெரிய, ராகவனும், அவன் மனைவியும் வருவது மனதுக்கு மிகவும் இதமாக இருந்தது.

மைதா மாவையும், மில்க் பவுடரை யும் சம பங்கு 100 கி + 100 கி. கலந்து ஒரு சிட்டிகை சோடா உப்பு சேர்த்து மிருதுவாக பிசைந்து எலுமிச்சை அளவு உருண்டைகளாக உருட்டி வைக்கவும். ஒரு வாயகல அடி கனத்த பாத்திரத்தில் ½ கிலோ சர்க்கரை ½ லிட்டர் நீர் விட்டு கொதிக்க வைக்கவும். சர்க்கரை நீர் நன்கு கொதிக்கும் போது இவ்வுருண் டைகளை இரண்டிரண்டாகப் போட வும். உருண்டைகள் நீரில் அமிழ்ந்து பின் மேல் எழும்பி வரும் போது அடுத்த உருண்டைகளைப் போடவும். வெந்த உருண்டைகளை எடுத்து வேறு பேஸி னில் போட்டு விட்டு எல்லா உருண்டை களும் வெந்து எடுத்தவுடன் மீதியுள்ள சிரப் ஆறியவுடன் சிறிது புரூட் சென்ஸ் அதில் விட்டு உருண்டைகளுடன் இந்த சிரப்பையும் விட்டு கப்புகளில் பரிமாற வும்.

இதுவே மில்க் பவுடர் ரசகுல்லாக்கள்.

— தாஜலட்சுமி.



# ஸ்ரீபெட்

# 'CHUBBY'

**சின்னஞ் சிறியதே கண்ணுக்கு அழகு!**

உங்கள் கைப்பைக்குள் வைத்துக்கொள்ளும் அளவுக்குச் சின்னதாக, எல்லா இடங்களுக்கும் எடுத்துச் செல்லக்கூடிய அளவுக்கு அழகான பாட்டில்கள். நீர் கசியாது. அரை லிட்டர் 'CHUBBY' பாட்டில்கள் எங்கும் கையோடு எடுத்துச் செல்வதற்கு ஏற்றவை.

ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜாடிகளும் கண்ணாடிபோல உள்ளேயிருப்பதை பளிச்சென்று காண்பிப்பவை. உடையாதவை. உணவுப் பொருட்களைப் பத்திரப்படுத்துவதற்கு ஏற்ற தகுதியும் தரமும் வாய்ந்தவை. நெடியற்றவை. கனமில்லாதவை. உபயோகிக்க வசதியானவை.

60 டிகிரி சென்டிகிரேட் வரை உஷ்ணத்தைத் தாங்கக் கூடியவை.




பெட் இண்டஸ்டிரியல் கன்ஸ்யூமர்
பாக்கேஜ் பிரைவேட் லிமிடெட்,
3வது மாடி, மூகாம்பிகா
காம்பிளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன்: 73768/74960/73038.





ADWAVE/PET/3830 TAM A

அக்குபங்சர் தொடர் — VII

# மூட்டுவலி

தொழிலதிபர் ஒருவர், அவருடைய ஒற்றைத் தலைவலிக்காக அக்குபங்சர் வைத்தியத்தை மேற்கொண்டு முற்றிலும் குணமாகி ஒரு வருடத்திற்கு மேலாகி விட்டது. அன்று மீண்டும் வந்தவரிடம், "என்ன? தலைவலி மீண்டும் வந்து விட்டதா?" என்று வினவிய போது, "அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் இப்போது வந்திருப்பது மனக் கஷ்டத்தினால்தான்" என்று கூறினார். என்ன கஷ்டம், என்ன காரணம் என்று கேட்ட போது அவரால் சரியாக விவரிக்க முடியவில்லை. "எனக்குத் தெரியவில்லை டாக்டர். மனசு சஞ்சலமாக இருக்கிறது. பிசினஸ் டென்ஷன் மாதிரியும் தெரிகிறது. ஏதோ கஷ்டம் சூழ்ந்து கொண்டிருப்பது போன்ற உணர்வு. ஓரிடத்தில் உட்கார முடியவில்லை. எழுந்து நடக்கத் தோன்றுகிறது. உட்காரத் தோன்றுகிறது. ஒரு குறிக்கோள் இல்லாமல், பிரயோஜனமில்லாத காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறேன். எனக்கே தெரிகிறது நான் செய்யும் காரியங்கள் அர்த்தமற்றவை என்று. இருந்தாலும் அதையே செய்கிறேன். இரண்டு இரவுகளாகத் தூக்கமில்லை. காலை ஏன்தான் விடிகிறதோ என்ற வெறுப்பு. ஆபீஸுக்குப் போகவும் விருப்பமில்லை. என்னுடைய நடவடிக்கைகளை வீட்டிலும் ஒரு மாதிரியாகக் கவனிக்கிறார்கள். இம் மாதிரி, அமைதியின்மை என்னுடைய வாழ்வில் ஒரு நாளும் நான் அனுபவித்ததில்லை" என்று கூறினார். நாடிப் பரிசோதனையில் அவருடைய இதயத்தில் அளவுக்கு மீறிய சக்தி தேங்கியிருப்பது தெரிந்தது. இந்த அதிக அளவு சக்தி தேக்கத்தை வடித்து அதன் ஓட்டத்தைச் சீராக்கக்கூடிய இருதய சக்தி நாளத்தின் 5-வது புள்ளி (Heart Meridian Point 5) மட்டும் தூண்டப்பட்டது. இரண்டே நிமிடங்கள் கழித்து அவரிடம் திரும்ப வந்து எப்படியிருக்கிறது என்று கேட்ட போது, "நான் இப்போது அனுபவித்துக் கொண்டிருக்கும் சுகம் உங்களுக்குத் தெரியாது டாக்டர். மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. மனத்தைக் கவ்விக் கொண்டிருந்த மேக மூட்டம் சுத்தமாக கலைந்து விட்டது. மனம் ரொம்பவும் தெளிர்ச்சியாக இருக்கிறது. என்னைப் போன்ற எண்ணற்ற தொழிலதிபர்களுக்கு இந்த மாதிரி 'டென்ஷன்' (BUSINESS TENSION) காரணமாகக் கஷ்டப்பட நிறைய வாய்ப்புண்டு. இவ்வளவு எளிதான முறையில் இந்த டென்ஷனை நீக்கக்கூடிய வைத்தியம் அக்குபங்சர் முறையில் கிடைக்கும் என்பது மட்டும் அவர்களுக்குத் தெரிந்தால், இதை விட பாக்கியம் அவர்களுக்கு வேறென்ன இருக்க முடியும்!" என்று தெளிவாகப் பேசியது இப்போது நினைவுக்கு வருகிறது.

ஒருவருடைய மனம் குடிகொண்டிருப்பது, அவருடைய இதயத்தில்தான். ஒருவருடைய மூளையை ஒழுங்காக இயங்க வைப்பதும் இதயம்தான். இதயமே ஒருவனுடைய மனத்தைக் கட்டுப்படுத்துகிறது. மனமும் இதயமும் ஒன்றோடொன்று கலந்திருக்கிறது. இதயத்தில் ஒரு நோய் ஏற்பட்டால், மனத்தில் ஏற்படும் கலக்கமும், பீதியும் உடலில் வேறெந்தப் பகுதியில் ஏற்பட்டாலும் அந்த அளவுக்குத் தோன்றுவதில்லை.



இதயத்தின் சக்தி ஓட்டம் நடைபெறும் நாளம் (Heart Meridian) அக்குள் பாகத்தில் ஆரம்பித்து கையின் உள்பாகம் வழியாகக் கீழிறங்கி, உள்ளங்கை வழியாக சுண்டு விரலில் நகத்தின் நுனியில் சென்று முடிவடைகிறது. இதயத்தையும் மனத்தையும் சீரான நிலையில் வைத்திருக்க உதவும் மிக முக்கியமான புள்ளி (Heart Point 9) சுண்டு விரலில் அமைந்துள்ளது. இதன் அடிப்படையில்தான், திருமண வைபவத்தில் மணமகன், மணப்பெண் இருவருடைய 'சுண்டு' விரலையும் 'இணைத்து' விடும் சடங்கு நடைமுறையில் உள்ளது. உடலிலுள்ள மற்ற உறுப்புக்களின் சக்தி நாளங்களைப் போலவே இருதய சக்தி நாளமும்

உடலின் வலது, இடது இரு பாகங்களிலும் அமைந்துள்ளது. இருதயத்தில் அதனை இயக்கக் கூடிய சக்தியானது குறையும் போது இருதயத்திற்குள்ளேயே சக்தி ஓட்டமும் குறைகிறது. இதன் காரணமாக இருதயத்துக்குள் இரத்த ஓட்டம் குறைவாகச் செல்ல ஆரம்பிக்கிறது. இதுவே இருதய சம்பந்தமான அனைத்து நோய்களுக்கும் **(Angina; Myocardial Infraction; Cardiomyopathy; Cardiomegaly; Hypertension)** மூலகாரணமாகும். இந் நோய்களை நாடிப் பரிசோதனை மூலம் ஆரம்ப நிலையிலேயே கண்டறிந்து அவற்றின் அறிகுறியே இல்லாமல் வேரோடு



களைந்து விடலாம். ஆயுள் முழுக்க மாத்திரை மருந்துகளை சாப்பிட்டுக் கொண்டு, தான் ஒரு 'இருதய நோயாளி' என்ற முத்திரையைச் சுமந்து கொண்டு திரிய வேண்டிய அவசியமில்லை.

ஒரு நோயாளி 'ரிஸப்ஷனி'லிருந்து 'கன்ஸல்டேஷன்' ரூமுக்கு வருவதற்குள் பத்து நிமிடங்களாகின. அவருக்கு 35 வயது தான் ஆகிறது. மெதுவாக அடி மேல் அடியெடுத்து வைத்து, ஒவ்வொரு அடிக்கும் கொஞ்சம் 'ரெஸ்ட்' எடுத்துக் கொண்டு நடந்து வந்தார். அவரது ஒரு கை அவருடைய நெஞ்சுப் பகுதியில் இருந்தது. அவருக்குத் துணையாக இரு பக்கமும் இருவர். பெரும் வியாதிக்காரராக இருப்பாரோ என்று எண்ணியவாறு அவரிடம் விசாரித்த போது, மெதுவாகப் பாக்கெட்டுக்குள் கையை விட்டு ஈ.ஸி.ஜி. ரிபோர்ட் ஒன்றைக் கொடுத்து விட்டுத் தான் ஒரு 'ஹார்ட் பேஷண்ட்' என்று மெதுவாகச் சொன்னார்.

உங்கள் கால்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்ட போது, "கால்கள் நன்றாகத் தானிருக்கிறது. டாக்டர் மெதுவாக நடக்கச் சொல்லியிருக்கிறார். மேலும் இருதயத்திற்கு அதிர்ச்சி அளிக்கக் கூடாது என்று சொல்லியிருக்கிறார். அதனால்தான் கைத்தாங்கலாக அழைத்து வருவதற்கு இரண்டு பேர் துணைக்கு வருகிறார்கள். நானும் ஒரு பாதுகாப்புக்காக எப்போதும் எனது நெஞ்சில் கையை இதமாக அழுத்திக் கொண்டுதான் நடக்கிறேன்" என்று கூறினார்.

கொஞ்சம் வேகமாக நடந்தாலும் மூச்சிறைப்பு ஏற்படும். கைகளின் உள் பாகத்தில், அக்குளின் உள் பாகத்தில் ஆரம்பித்து சுண்டு விரல் வரையில் வலியானது ஊடுருவும். இந்த வலியானது ஆரம்ப காலத்தில் வலது கையில் மட்டும்தான் இருந்தது. கொஞ்சம் கடினமான வேலைகள் செய்தால் மட்டுமே ஏற்பட்டு வந்தது. சிறிது நேரம் ஓய்வு எடுத்தால் வலி அடங்கும். இப்போது கொஞ்சம் நடந்தாலும் நெஞ்சில் வலி ஏற்படுகிறது. வலது கை மட்டுமின்றி, இடது கையிலும் அதே மாதிரியான வலி ஏற்படுகிறது. மேலும் இந்த வலி ஏற்படும் போது தொண்டையிலும், நாக்கிலும் ஒரு மாதிரியான விறுவிறுப்பு ஏற்படுகிறது. முதுகுப் பாகமும் அழுத்தினாற் போல் வளைகிறது. 'ரெஸ்ட்' எடுத்தாலும் பூரணமாக அடங்குவதில்லை. இந்த நிலை

டாக்டர் சித்தீக் ஜமால்
டாக்டர் பஸ்லூர் ரஹ்மான்.

கடந்த ஒரு வருடமாக நீடித்து வருகிறது என்றும் தெரியப்படுத்தினார்.

அக்குபங்சர் முறைப்படி இதயத்திற்கும், தொண்டை, நாக்கு இவற்றிற்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதை நாம் சென்ற இதழில் அறிந்திருக்கிறோம். நாடிப் பரிசோதனையில் இவருடைய மண்ணீரலில் மிக அதிகமான சக்தி தேக்கத்தையும், இதயத்தில் அறவே சக்தி ஓட்டம் இல்லாததையும் கண்டறிய முடிந்தது. ஆகவே இதய நாளத்தின் நுழைவுப் புள்ளியான முதல் புள்ளி **( Entry Point H-1)** நாள் ஒன்றுக்கு 5 நிமிடங்கள் வீதம், வாரம் இருமுறை தூண்டப்பட்டது. நாளுக்கு நாள் அவருடைய இருதயம் பலம் அடைய ஆரம்பித்தது. சரியாக 4 மாதங்களில் பூரணமாகக் குணமடைந்தார். இப்போதெல்லாம் மூன்றாவது மாடியிலிருக்கும் 'கிளினிக்'கிற்கு 'லிப்ட்' உபயோகப்படுத்தி வருவதில்லை. படிக்கட்டு வழியாக ஏறியே வந்து விடுகிறார். நடப்பதும், ஓடுவதும் மிகுதியான புத்துணர்ச்சியையும், தெம்பையும் கொடுக்கிறதாம்!

சிலருக்கு நாக்கில் அடிக்கடி புண்கள் ஏற்படும். இதனால் சாப்பிடும் போது எரிச்சலும், வலியும் உண்டாகும். இன்னும் பலர் நாக்குக்கு சுவை ஏதும் தெரியவில்லை. மண்ணைச் சாப்பிடுவது போல இருக்கிறது என்றும், மேலும் சிலர் நாக்கு வேப்பங்காயாய்க் கசக்கிறது என்றும் கூறுவார்கள்.

இவை அனைத்தும் இருதய நாளத்தில் 'சீரான சக்தி' ஓட்டம் தடைப்படுவதால் ஏற்படும் விளைவுகளாகும். குறிப்பாக, நுனி நாக்கில் ஏற்படும் விளைவுகள் இருதய நாளத்தில் சக்தி ஓட்ட பாதிப்பினால் உண்டாகின்றன. சாதாரணமாக நாக்கைப் பார்த்தோமானால் அது இளஞ் சிவப்பு நிறமாகக் காணப்படும். நுனி நாக்கில் இந்த இளஞ் சிவப்பு மாறி இரத்தச் சிகப்பாகத் தோன்றினால், அந்தக் கணமே நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்; இருதயம் பாதிப்புக்குள்ளாகிறது என்பதை!

நாம் சாதாரணமாக அன்றாட வாழ்வில் காணும், அனுபவிக்கும் தொந்தரவுகளில் மிக முக்கியமானது 'Arthritis' எனப்படும் மூட்டு வலியாகும். இந்த மூட்டு வலி பல வகைப்படும். அவையாவன: 1. ஒரே ஒரு மூட்டில் மட்டும் வலி எடுத்தல்; வேறு எந்த மூட்டிலும் இருக்காது. 2. ஒன்றுக்கு மேற்பட்ட மூட்டில் வலி ஏற்பட்டு தொடர்ச்சியாக மோசமாகிக் கொண்டு வருதல். உதாரணம்: முழங்கால் மூட்டு வலி; கழுத்து மூட்டு வலி. 3. மூட்டுவலி ( Joint pain; arthritis) யானது ஒரு சமயம் ஒரு மூட்டிலும், மற்றொரு சமயம் மற்றொரு மூட்டிலும், வேறொரு சமயம் மற்றுமொரு மூட்டிலும் மாறி மாறி வரும். எந்த மூட்டிலும் வலியானது நிரந்தரமாக இருக்காது. இந்த மூன்றாவது வகை வலியின் மற்றொரு சிறப்பம்சம் என்னவெனில் வலியின் வேகமும் நேரத்திற்கு நேரம் குறைந்தும், அதிகமாகியும் வேறுபட்டுக் காணப்படும். பல சமயங்களில் முற்றிலுமாக இல்லாமலும் இருக்கும். இந்த வகை மூட்டுவலியை ( MIGRATING RHEUMATISM) என்று கூறுகிறோம்.

'Migrating Rheumatism' இருதயம் பலவீனத்தின் காரணமாக ஏற்படும் அறிகுறிகளில் மிக முக்கியமானதாகும். சிறு வயதில் அல்லது நடுத்தர வயதில் இது தோன்றும் போதே பூரணமாகக் குணப்படுத்தி விடுதல், எதிர்காலத்தில் இருதயத்தை பாதிக்கக் கூடிய பலவிதமான நோய்களிலிருந்து காப்பாற்றி விட முடியும்.

பதினாறு வயது நிறைந்த கிராமத்துப் பையன் ஒருவன், ஊரில் அப்பா, அம்மாவிடம் சண்டை போட்டுக் கொண்டு சென்னைக்கு ரயிலேறி விட்டான். பட்டணத்தைப் பார்த்ததும் அவனுக்கு ஒரே மலைப்பு. என்ன செய்வது, ஏது செய்வது என்பது புரியவில்லை. நான்கைந்து நாட்களில் எடுத்து வந்த பணமும் செலவாகி விட்டது. மிகவும் கஷ்டப்பட்டு ஏதோ ஒரு வேலையில் சேர்ந்தான். மனது நிம்மதியே இல்லை. திரும்ப ஊருக்குப் போய் விடலாமென்றால் பயமாகவும் இருந்தது. ஊரில் அப்பா, அம்மா ஒழுங்காக உபசரிப்பார்களா என்ற ஐயமும் எழுந்தது. மனப்புழுக்கத்துடன் இங்கேயே காலம் தள்ள ஆரம்பித்தான். இரண்டு மாதம் கழித்து ஒரு நாள் விடியற்காலை எழுந்த போது அவனால் எழ முடியவில்லை. முதுகுப் பாகத்தில் அப்படியொரு வலி. மேலும் கையை ஊன்றவும் முடியவில்லை. கையின் உள்புறமாக அக்குளில் இருந்து சுண்டு விரல் வரையிலும் ஒரு மாதிரியான விறுவிறுப்புடன், மதமதப்பும், வலியும் இருந்தது. அவனுடைய முதலாளி ஏதோ மாத்திரை கொடுத்தார். 10 நிமிடத்தில் வலி குறைந்து விட்டது. பிறகு மீண்டும் மீண்டும் அதே இடத்தில் மட்டுமல்லாமல் வேறு இடங்களிலும் வலியானது மாறி மாறி ஏற்பட்டது. இதன் காரணமாக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான். பலவிதமான சோதனைகள் செய்து மருந்து மாத்திரைகள் கொடுத்தும் சிகிச்சை பலனளிக்காமல் போகவே, மனோதத்துவ சிகிச்சைப் பிரிவுக்கு மாற்றப்பட்டான். அங்கு 15 நாட்கள் 'பெட்டில்' தங்கி வைத்தியம் பார்த்தும் சரியாகாமல் போகவே, ஆஸ்பத்திரியில் சொல்லிக் கொள்ளாமலேயே வெளியேறி விட்டான்.

அவனுடைய தொந்தரவுகள் "Migrating Rheumatism" வகையைச் சார்ந்தது. அதனை மேலும் நிரூபிக்கிறது. அவனது கையின் உள்பாகத்தில் இருதய நாளத்தின்' பாதையில் அடிக்கடி ஏற்படும் வலியும், மதமதப்பும். ஆகவே இருதயத்தைப் பலப்படுத்தக் கூடிய புள்ளிகளான, முதலாவது புள்ளியும், 7வது புள்ளியும் ( Heart Meridian Point 1—ம் Point 7—ம்) ஒரு நாளைக்கு 5 நிமிடங்கள் வீதம் மூன்று நாட்கள் தொடர்ந்து தூண்டப்பட்டது. நான்காவது நாளிலிருந்து அவனுக்குப் பல பாகங்களிலும், பலவிதமாக ஏற்பட்டு வந்த வலியானது குறைய ஆரம்பித்தது.

பிறகு மேற்கொண்டு வைத்தியம் அளிக்காமல் 10 நாட்கள் கழித்துத் திரும்பவும் வைத்தியம் தேவைப்படலாம் என்று வரச் சொன்னோம். ஆனால் அந்த 10 நாட்களில் அவனுடைய வலி அனைத்தும் பூரணமாக மறைந்து விட்டது. ஒருமுறை அவனுடைய ஊருக்குச் சென்று அப்பா, அம்மாவைப் பார்த்து விட்டுத் திரும்பியும் விட்டான். அத்துடன் முன்பு போல மனக் கலக்கம், அமைதியின்மை ஏதும் இல்லாமல் நிம்மதியாக இருக்கிறேன் என்றும் கூறினான். ஒருவனுடைய மனம் அவன் இருதயத்தில்தான் குடிகொண்டுள்ளது என்பதையும், அதன் பலவீனம் மனக் கலக்கத்தையும், அமைதியின்மையையும் ஏற்படுத்தும் என்பதையும் இதன் காரணமாக ஏற்படும் விளைவுகளில், 'Migrating Rheumatism' நோய், ஒருவகை என்பதையும் மேற்கூறிய உதாரணம் உண்மைப்படுத்துகிறது.

---

தேங்காய் உடைத்து எடுத்த நீரை, ரசத்தில் ஊற்றலாம். ரசம் அதிரசமாக சுவைக்கும்.

— ர்ாஜம்.

# கண் சிமிட்டும் நேரத்திலே...





# ஐடெக்ஸ்

## காஜல் ஸுப்ரீம்

உங்கள் விழிகளுக்கு எழில் கூட்டும்
ஐடெக்ஸ் காஜல் ஸுப்ரீம்.
நாகரீக நங்கையரின் நயனங்களை
எளிய, ஏற்ற முறையில் ஒப்பனை
செய்ய சுகாதாரமான முறையில்
தயார் செய்யப்பட்ட, கையடக்கமான
காஜல் ஸுப்ரீம்.

அரவிந்த் லாபரடரீஸ்-
50 ஆண்டுகளுக்கு மேலாக
கண்கள் பராமரிப்புக்கு தரமான
தயாரிப்புகளை அளிப்பவர்கள்.




அதிகபட்ச
சில்லரை விலை (MP)
ரூ. 6-00
(உள்ளூர் வரிகள் தனி)

**அரவிந்த் லாபரடரீஸ்,**
**சென்னை 600 033.**

Imageads 2788 Tam

# தேவதையே அரக்கியானாள்!

**குடும்ப உறவுகளைப் பற்றி வாசகிகளின் கடிதங்கள் தொடருகின்றன. இந்த வாசகி பெண் குடும்பத்திற்கும், மருமகள் குடும்பத்திற்கும் நடுவில் நிற்கும் வயதான பெண்மணியைப் பற்றிச் சுவையாகக் கூறுகிறார்!**

இன்று பழைய நாட்களைப் போல் அல்லாமல், தாய்மார்களின் மனம் நன்கு விசாலமாகியிருக்கிறதென்று தான் சொல்ல வேண்டும். அதைவிட, நாம் ரொம்பவும் துள்ளினால், பிள்ளையும் மருமகளும் நம்மை உதறிவிட்டுப் போய் விடுவார்களோ என்ற பயம்தான் இன்னும் பலமான காரணம். பிள்ளைக்குக் கல்யாணம் என்று வரும் பொழுது தான் இன்று பெற்றவர்கள் ரொம்பவும் அதிகமாக கவலைப்பட்டுக் கலங்குகிறார்கள்.

பெண் கல்யாணத்துக்குக் கொஞ்சம் அவசரப்படுகிறார்களே ஒழிய, மருமகன் எப்படி இருப்பானோ என்று கவலைப்படுவதெல்லாம் கொஞ்சம் குறைவுதான்.

ஒருவேளை, மாப்பிள்ளை எப்படியிருந்தாலும் பெண் தனது அழகு திறமை, தொழில் அல்லது உத்தியோகத்தில் கணவனுக்கு உதவவும், அவை சம்பந்தமாக அவனுடன் விவாதிக்கவும்தான் பெற்ற புலமை, எல்லாவற்றுக்கும் மேலாக மூவாயிரம் நாலாயிரம் என்று அவள் கொண்டு வரும் சம்பளம், இவைகளினால், மாப்பிள்ளையைத் தன் வசம் விழச் செய்து விடுவாள் என்ற அபாரமான தன்னம்பிக்கை இன்று பெண்களைப் பெற்றவர்களுக்கு இருக்கிறதோ?

தனது பெண் எவ்வளவுதான் கணவன் வீட்டில் சந்தோஷமாக இருந்தாலும், அவள் வைத்ததுதான் அங்கே சட்டம் என்றாலும் அவள் ஏதோ பெரிய கஷ்டப்படுவது மாதிரி மருமகள் காது கேட்க அழுது புலம்புவார்கள். பெண்ணுக்கு இருக்கும் அல்ப பிரச்னைகளையும் கஷ்டங்களையும் பூதாகாரமாக வர்ணித்து ஒப்பாரிவைப்பார்கள்.

இதோ இந்த பத்மா மாமியை எடுத்துக் கொள்ளுங்கள். இவருடைய பெண் அமெரிக்காவில் இருக்கிறாள். மாப்பிள்ளையை விட கூட சம்பாதிக்கிறாள். பிக்கல் பிடுங்கல் என்ற பட்டத்தை காலம் காலமாக தாங்கி வரும் புக்காத்து மனிதர்கள் யாரும் பெண்ணுடன் இல்லை. மடி ஆசாரம் நாள் கிழமை என்றெல்லாம் துளியும் அலட்டிக் கொள்ளாத நவீன நங்கை அந்தப் பெண். பெரும்பாலும் டப்பா உணவுவகைகளை வாங்கிச் சாப்பிடுகிறார்கள். முத்தான குழந்தைகள். மொத்தத்தில் சத்தான வாழ்வுதான். ஆனால் மருமகளை வைத்துக் கொண்டு பத்மா மாமி புலம்புவதைக் கேளுங்கள்.

"ஹூம், எங்க நிம்மி (மகள்) கொடுத்து வச்சவள், அவளுக்கென்ன குறை என்று எல்லாரும் சொல்கிறார்கள். அவள் படுகிற கஷ்டம் யாருக்குத் தெரியப் போகிறது? வீடு சுத்தம் செய்வதிலிருந்து ஒவ்வொரு வேலையையும் அவள் தானே செய்யணும்? உன்னை மாதிரி அவளுக்கு வேலைக்காரியா இருக்கிறாள்? ஒரு நாள் வேலைக்காரி வராவிட்டால் இங்கே வீடு நாறிப் போகிறது. நிர்மலா ஆயுசுக்கும் தானே அவள் வேலைகளை செய்துக்கணும். இங்கே நானாவது குழந்தைகளை மேய்க்க இருக்கிறேன். அவளுக்கு அங்கே யார் துரும்பைக்கிள்ளி அந்தாண்டை போடுவார்கள்?

இதைக் கேட்கும் மருமகளுக்கு எவ்வளவு எரிச்சல் வரும் என்று சொல்லத் தேவையில்லை. அவள் மனதுக்குள் பொருமுகிறாள். "ஆஹா நிர்மலா ரொம்பத்தான் கஷ்டப் படுகிறாள், பா....வம்! இவள் இங்கே குழந்தைகளைப் பார்த்துக்கறாளாம். என்னவோ பீற்றிக் கொள்கிறாள். உப்புமாவுக்கு பச்சை மிளகாயைக் கிள்ளிக்



கொடுத்தால் கூட சமயம் பார்த்து அதைச் சொல்லிக் காட்டிவிடுகிறாள். போதாத குறைக்கு, பூஜை ஜபம் அதற்குக் கொஞ்சம் மடி ஆசாரம் என்று எத்தனையோ. இந்தக் கிழவியோடு, ஆபீஸ் போகும் நான் அனுசரித்துப் போக வேண்டியிருக்கிறது. மாமனார் துர்குணமோ கேட்கவே வேண்

டாம். சதா யாரோ தன்னை அலட்சியம் செய்து விட்ட மாதிரி உர்ரென்றுமூஞ்சியைத் தூக்கி வைத்துக் கொண்டு நிற்கிறது அந்தக் கிழம். இவர்களோடு இப்படி காலம் தள்ளு வதைவிட வேலைக்காரி இல்லாத அமெரிக்க வாழ்க்கையே பெரிய சொர்க்கம் தான்.''

இதோ இன்னுமொரு கமலா அம்மை யாரைப் பார்ப்போம். இந்த அம்மையாரின் பெண் நீலாவும் மாப்பிள்ளையும் கை நிறைய சம்பாதிக்கிறார்கள். செலவழிப் பதிலும் சம்பாதிப்பதைப் போலவே இரு வருக்கும் ஒற்றுமை. இருவருமே சிக்கனம். பாங்கில் இருப்பு ஏறிக் கொண்டே போகிறது. எப்பொழுதாவது நீலாவின் மாமியார் நீலாவின் வீட்டில் தலைகாட்டு வாள். அவ்வளவுதான். இரண்டு பெண் குழந்தைகள். படிப்பிலே இருவருமே படு சுட்டி. ஆனால் கொஞ்சம் கருப்பு நிறத் தோடு பிறந்துவிட்டவர்கள்.



இந்த நீலாவைப் பற்றி கமலா அம்மை யார், மருமகள் எதிரில் என்ன அழுகிறாள்?

''நானும் எத்தனையோ புருஷர் களைப் பார்த்திருக்கிறேன். ஆனாலும் இந்த நீலா வீட்டுக்காரனைப் போல, பெண் டாட்டியின் சிரமத்தைப் புரிஞ்சுக்காத வனைப் பார்த்ததே இல்லை. ஒரு நாளைப் போல் தினமுமா ஒருத்தன் ஊரெல்லாம் சுற்றி விட்டு, ராத்திரி பதினோரு மணிக்கு வீட்டுக்கு வருவான்? ஆபீசுக்குப் போகிற பெண், தினமும் இப்படி அர்த்த ராத்திரி வரை கண் முழித்தால் உடம்பு என்னதான் ஆகும்? உன் புருஷன் முரளி மாதிரி (தன் மகனைக் குறிப்பிடுகிறார்) எட்டாவது மணிக்கு டாண் என்று வீட்டிலே ஆஜராகி விட்டால் எவ்வளவு பிரச்னைகள் தீரும்! இத்தனைக்கும் நீ வேலைக்குப் போகாதவ, ராத்திரி கண் முழிச்சாலும் பகலில் கொஞ்சம் படுத்துக்கலாம். நீலா என்ன செய்வா பாவம்? போதாத குறைக்கு கறுப்புப் பெண்களைப் பெத்து வைத்திருக் கிறாள், எத்தனை லட்சங்களை இரண்டு மாய் முழுங்கப் போகிறதுகளோ?''

இதை செவி மடுக்கும் மருமகள் மனதுக் குள்ளே எவ்வளவு எரிச்சல் படுவாள் என் பதைச் சொல்லவே தேவையில்லை. நீலா வின் மற்ற பாக்கியங்களைப் பற்றி மருமகள் காது கேட்க மூச்சுக் கூட விடமாட்டாள் கமலா அம்மையார். உப்புப் பெறாத பிரச்னைகளைச் சொல்லி சொல்லி மார டித்துக் கொள்வார். பொதுவாக, தன் மருமகள் ரொம்ப சுகமாக காலம் தள்ளு வதாகவும், பெண் பெரிய கஷ்டப்படுவது மாதிரியும் சொல்லிக் காட்டிக் கொண்டு அழுவதில் பல தாய்மார்களுக்கு மிகவும் திருப்தி ஏற்படுவதாகத் தெரிகிறது.

தான் பெற்ற பெண்ணின் பெருமைகளை மருமகளிடம் அளப்பதை விட, இந்த 'ஒப் பாரி' மருமகளுக்கு இன்னும் அதிகமான எரிச்சலை ஏற்படுத்தும் என்பதை இவர்கள் உணர்வதே இல்லை. உண்மை நிலை என்ன என்றால் குடும்ப வாழ்வில் எல்லோருக்குமே கஷ்டங்கள் பாக்கியங்கள் இரண்டும் கலந்து தான் இருக்கும். அவரவர்களுக்கு அவரவர் களுடைய கஷ்டங்கள் பெரிதாகத்தோன்றும். கஷ்டங்களை ஒப்பிடுவது மனதுக்கு ஓர் ஆறுதலைத் தேடிக் கொள்ளத்தான். நிஷ்டூர மாகப் பேசுவதற்கோ, தற்பெருமை அடித் துக் கொள்ளவோ அல்ல.

நாத்தனார் தன்னை விட கெட்டிக்காரி என்பதைக் கூடபல பெண்கள் சுலபமாக (கொஞ்சம் வயதாக வயதாக) ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் நாத்தனார் தன்னைவிட கஷ்டப்படுகிறாள் என்பதை மாமியார் சொல்லிக் காட்டினால் எந்தப் பெண்ணுமே அதை லேசில் ஏற்றுக் கொள்ள மாட்டாள். (அதுவும் நாத்தனார் நன்றாக இருக்கும் பொழுது).



நாத்தனார் — மன்னி (அல்லது தம்பி பெண்டாட்டி) உறவு பலப்படாமல் போவ தற்கு, முக்கியமாக இந்த மாமியார் — தாயின் நடத்தையும், அணுகுமுறைகளும் தான் காரணம். மாமியார் — தாயின் மறைவுக்குப் பின் நாத்தனார் — மன்னி உறவு பல குடும் பங்களில் நன்றாக பலப்பட்டிருப்பதை நான்

கண் கூடாகப் பார்த்திருக்கிறேன்.

ஒரு தலைப் பட்சமாக பேசுவது இந்த மாமியார் — தாய்களின் இரத்தத்திலேயே ஊறிப் போயிருக்கும் குணமாகத் தோன்றுகிறது.

இதோ இந்த லட்சுமி அம்மாளைக் கொஞ்சம் பார்ப்போம். இவர் தன் பெண்ணின் குடும்பத்தைப் பற்றியும் அதேசமயத்தில் தன் பிள்ளையின் குடும்பத்தைப் பற்றியும் விமர்சிப்பதைக் கொஞ்சம் பார்ப்போமா?

''என் மாப்பிள்ளை இருக்கிறானே அவனை மாதிரி கோபக்காரனை இந்த லோகத்தில் காணமுடியாது. அது என்ன துர்வாஸ கோபமோ! என் பெண்ணாக இருக்கக் கொண்டு மீனா இவனுடன் பயந்து அடங்கி காலம் தள்ளுகிறாள். இன்னொரு பெண்ணாயிருந்தால் ''போய்யா, புருஷனே, எனக்கு நீயும் வேண்டாம், உன்னோடு வாழ்க்கையும் வேண்டாம் என்று என்னைக்கோ ஓடிப் போயிருப்பாள். அந்த சம்பந்திக் கிழவி மட்டும் லேசுப்பட்டவளா? (மீனாவின் மாமியார்) சதா குழந்தைகளை கரித்துக் கொட்டுகிறாள். மாட்டுப் பெண்ணுக்கும் வயதாகிறது என்று கொஞ்சமாவது நினைத்துப் பார்க்கிறாளா? என்னவோ போன வாரம்தான் கல்யாணம் ஆன பெண் மாதிரி மீனாவை அதிகாரம் பண்ணி ஆட்டிப் படைக்கிறாள். கிழவிக்கு நிறைய 'பவர்' கொடுத்து வைத்திருக்கிறார்கள்.''

இப்படிப் புலம்பும் லட்சுமி அம்மாள், தன் பிள்ளைக்குக் கோபம் வந்து அவன் மருமகனிடம் சத்தம் போடும் போது என்ன சொல்கிறாள் என்று பார்ப்போமா?

''ஹும். ரமேஷுக்குத்தான் (தன்பிள்ளை) கோபம் வருகிறதென்று இவளுக்குத் தெரியுமில்லையா? பின்னே எதற்கு அவனோடு வாய் கொடுக்கணும், பின்னே வாங்கிக் கட்டிக் கொள்ளணும்? கோபக் காரன்னு தெரிஞ்சப்புறம் அதுக்குத் தகுந்த மாதிரி நடந்துக்க வேண்டாமா? இவளுக்கு அறிவு எங்கே போச்சு? இந்தக் குழந்தைகளுக்கும் கொஞ்சமும் சமர்த்து போறாது. செல்லம் கொடுத்து எல்லாரையும் குட்டிச்சுவராக்கி விட்டா. நான் சொன்னா, 'ஏ கிழவி உனக்கென்ன ஆக வேண்டியது'ன்னு என்மேலே பாய்வா. ஆனா என்னாலே சொல்லாம, கண்டுக்காம இருக்கமுடியலையே. அஞ்ஞானம், பாசம் இதையெல்லாம் விட முடியறதா? ஏதோ எல்லாரும் நல்லா இருக்கணும்னுதானே, குறைகளை எடுத்துச் சொல்லி திருத்திக் கோன்னு அடிச்சுக் கறேன்.''

மாப்பிள்ளைக்குக் கோபம் வந்தால் தன் பெண் 'சீதா தேவி' என்று ஸ்துதி பாடுகிறாள். அதேசமயத்தில் பிள்ளைக்குக் கோபம் வந்தால் மருமகளுக்கு அறிவில்லை என்று ஏசுகிறாள்.

தான் தனது பேரக்குழந்தைகளைத் திட்டினால், அதற்குக் காரணம் தன் நல்லெண்ணம், பாசம். தன் பெண்ணின் குழந்தைகளை, சம்பந்திக் கிழவி திட்டினால் அதிகாரத்தைக் காட்டுகிறாள் என்று புலம்புகிறாள்.

தாயாகவும், வயிற்றில் பிறந்த பெண்ணாகவும், மற்றும் சகோதரியாகவும் ஸ்தானம் வகிக்கும் பொழுது தேவதைகளாக ஜ்வலிக்கும் பெண்கள், மாமியாராகவும், மருமகளாகவும், மற்றும் அண்ணி (அல்லது தம்பியின் மனைவி) யாக உறவை ஏற்றுக் கொள்ளும் பொழுது அசுர குணம் படைத்தவர்களாக மாற்றப்படுகிறாள்.

எல்லாருக்கும் வழிகாட்ட வேண்டிய, மரியாதைக்குரிய வயதான பெண்மணிகள் ஒருதலைப் பட்சமாகவும், பொறுப்பில்லா மலும் வார்த்தைகளைக் கொட்டுகிறார்கள். அதிலும் ''என் பெண் என்பதற்காக, சொல்லவில்லை...'' என்ற பீடிகையோடு இவர்கள் ஆரம்பிப்பதைக் கேட்டால் கேட்பவர்களுக்குத் தாங்க முடியாத எரிச்சல் ஏற்படும்.

ஒருதலைப பட்சமாகப் பேசுவதில் வயதில் குறைந்த குடும்பத் தலைவிகளும் பெரியவர்களுக்கு சளைத்தவர்கள் அல்ல.

என் அம்மா, மாமியாராகக் கிடைக்க என் தம்பி பெண்டாட்டி எவ்வளவோ கொடுத்து வைத்திருக்கணும் என்று சொல்லாத பெண்ணைப் பார்க்கவே முடியாது.

அதே போல் என் வீட்டில் என் மாமியார் — மாமனாருக்கு நடக்கிற மாதிரி ஊர் உலகத்தில் ஒருத்தருக்கும் நடக்குமா? என்று சொல்லிக் காட்டாத பெண்ணையும் காண முடியாது.

பிள்ளைகளின் தாய்மார்களுக்கு இன்னுமோர் ஆலோசனை. தயவுசெய்து மருமகளை உங்கள் தோழியாக நினைத்துக் கொண்டு உங்கள் வாழ்க்கையில் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் சாங்கோ பாங்கமாக அவளுக்கு விவரித்து ''மாமியார் அறுவையை ஒப்பிட்டால் டீ.வி. தெய்வம் என்று அவள் நினைக்கும்படி செய்துவிடாதீர்கள்.

நாம் எல்லோரும் சாதாரண மனிதர்கள். ஒரே வயது உடையவர்களுக்குப் பல பொதுவான பிரச்னைகள், விருப்பு வெறுப்புகள் இருக்கும். அப்படிப்பட்ட இருவர் சந்தித்துக் கொண்டால் அவர்களுடைய உரையாடல் தான் இருவருக்குமே 'போர்' அடிக்காமல் இருக்கும். மாமியாருடைய வயதில் உப்பும் புளியும், சாம்பார் பொடியும் தான் அவருக்கு மிகமுக்கிய மானதாகத் தோன்றும். ஆனால் ஏராளமான கனவுகளுடன் கணவன் வீட்டில் நுழையும் போது இளம் பெண்ணுக்கு எப்பொழுதும் 'குடித்தனம்' செய்வதைப் பற்றி மட்டுமே நினைத்துக் கொணடிருக்க முடியுமா?

— உமாதேவி ராமஸ்வாமி.

# உஷா ஸ்ரீராம் சவால்

# ஆம்

## ஆயிரக்கணக்கான குடும்பத்தலைவிகள் சொல்கிறார்கள் "ஆம் இதை மிஞ்சமுடியாது!"



'மேலானதொரு மிக்ஸர் கிரைண்டர் கிடைக்குமா என்று பார்க்கவும் என்று உஷா ஸ்ரீராம் எனக்குச் சவால் விட்டது - என்னால் இயலவில்லை.''

ஆம். அவர்கள் மேம்பட்ட அதி வேக மோட்டாரைச் சொல்கிறார்கள். ஒரு படி நிறைய இட்லி மாவை அது பத்தே நிமிடத்தில் அரைத்து விடுகிறது.

ஆம். அவர்கள் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலின் உறுதிப்படுத்தப்பட்ட ஜாடியைச் சொல்கிறார்கள். அது நசுங்கவே செய்யாது.

ஆம். அவர்கள் விசேஷமாக கடினப்படுத்தப்பட்ட ஸ்டீல் பிளேடுகளைச் சொல்கிறார்கள். அவை மஞ்சளையும் எளிதாக அரைத்துவிடும்.

ஆம். அவர்கள் ஸ்டைலான சர்வதேச வடிவமைப்பைச் சொல்கிறார்கள். அது பியானோ வகை ஸ்விட்சுகளைக் கொண்டது.




**உஷா ஸ்ரீராம்**
**மிக்ஸர் கிரைண்டர்**
**உங்கள் விருப்பப்படியே**

Contract US 21226 Tam

உஷா ஸ்ரீராம்-உஷாவின் தலையாய சாதன வரிசை







# அழகுக்கு

நமக்கோ, குழந்தைகளுக்கோ, உடை வாங்கப் போகிறோம். புதுசா ஒன்றும் இல்லையா எனக் கேட்கிறோம். இங்கே சில மாதிரி உடைகளைக் கொடுக்கிறோம். இவை லேட்டஸ்ட் ஃபாஷன். இதைக் காட்டி உங்கள் டைலரிடம் கொடுத்து கூடத் தைக்கலாமே!

இந்த நவீன உடைகள் தொடரும்...

சிவப்பு சல்வார், பச்சை 'யோக்' உள்ள கம்மீஸ் கறுப்பு துப்பட்டா —

பழங்காலத்திலிருந்துஇன்று வரை ஃபாஷன் மாறாமலிருக்கும் உடை. வடிவமைத்துக் கொடுத்த திருமதி ரீடாலால் கூறுகிறார்: ''கம்மீஸில், முன் பக்கமிருக்கும் 'அனார்கலிப்ளீட்ஸ்' எனப்படும் மடிப்புகள் இவ்வுடைக்கு அழகு சேர்க்கும். பொதுவாக இரண்டு, மூன்று மாறுபட்ட வண்

# அழகு!

ணக் கலவைகளோடு தைக்கப்படும் இவ்வுடை கல்லூரி மாணவியர் முதல் சற்று வயதானவர் வரை எல்லோருக்கும் பொருந்தும். இளம் வயதினருக்கு ஆழ்ந்தநிறங்களும், நடுத்தர வயதினருக்கு வெளிர் நிறங்களும் எடுப்பாக இருக்கும். கறுப்புத்துப்பட்டா குஜராத் மாநிலத்து ஸாடின் துணியாலானது.''

'பிங்க்' சல்வார் — எம்பிராய்டரி செய்த மேலுடையுடன் கூடியது — கணுக்கால் பக்கம் 'பின் டக்' எனப்படும் மடிப்புக்களுடன் கூடிய இவ்வுடை 'ஹேரம் சல்வார்' என்று அழைக்கப்படுகிறது. அரேபிய அழகிகளும், 'முஜ்ரா' நடன அழகிகளும் விரும்பி அணியும் உடைகளின் வடிவம் கொண்டது. ''நீளமான 'குர்தா'வுடன் அணிந்திருக்கும் மேலுடையின் பெயர் 'கோட்டீ.' 'இது கறி பிரிண்ட்' என்றழைக்கப்படும். வேலைப்பாடு கொண்டது. இந்த மேலுடை தனியா

**(தொடர்ச்சி 40 — ஆம் பக்கம்)**



# மருந்தாகும் மந்திரக்கோல்!




உச்சிக் கிளையிலே ஒரு முழும் குச்சி! அது என்ன? இது ஒரு மந்திரக்கோல். மருந்துப் பெட்டகம். இளமை தரும் சஞ்சீவினி.. ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய பொக்கிஷம். புரிந்து கொண்டீர்களா? முருங்கைக்காய்தான் அது.

வீட்டில் என்ன சாம்பார்?

'முருங்கைக்காய் சாம்பார்' என்ற பதில் வந்தால் 'ஜமாய் ராஜா' என்று சொல்லத் தோன்றுகிறது. சாம்பாருக்கே முருங்கைக் காய் கிரீடம் சூட்டி விடுகிறது. வெங்காயத்தைப் போலவே முருங்கையும் எல்லோராலும் விரும்பப்படுகிறது. இதற்கு அதன் தனிச் சுவை மட்டுந்தானா காரணம்? தெரிந்தோ தெரியாமலோ இருக்கும் அதன் மருத்துவக் குணமும் இருக்கலாம். முருங்கை மரம் முழுவதுமே மருந்தாகப் பயன்படுகிறது.

முருங்கை இலைகளை நெய்யில் பொரித்து உண்டால் இரத்த சோகை நீங்கும். பல் கெட்டிப்படும். தோல் வியாதிகள் மறையும். இதில் இரும்பு, தாமிரம், சுண்ணாம்புச் சத்து ஆகியவை ஏராளமாக இருக்கின்றன.

முருங்கை இலைக்கு வயிற்றுப் புண்ணை ஆற்றும் சக்தி உண்டு. வாய் நாற்றம் போக்கும். வாரம் இரண்டு முறை உணவில் சேர்த்துக் கொண்டால் ஜலதோஷம் போகும். கபம் முறியும். உடற் சூடு தணியும்.

இந்தக் காலத்தில், சிறிய வயதினர் கூட வேலைப் பளுவினாலும், அவசர வேலைகளினாலும் பிளட்பிரஷரால் பாதிக்கப் படுகின்றனர். இவர்களுக்கு மிக எளிய முறையில் சிகிச்சை தந்து, நிவாரணம் அளிக்க முருங்கையின் ஈர்க்குகளே போதும். முருங்கையின் ஈர்க்குகள் 200 கிராம் எடைக்கு எடுத்து, ஒரு மண் சட்டியில் போட்டு கூடவே கொஞ்சம் மிளகுத் தூள், வேண்டிய அளவு உப்பு, தண்ணீர் சேர்த்து, காய்ச்ச வேண்டும். இந்த ரசத்தை ஒரு மணி நேரத்திற்கு ஒருமுறை ஏழு அல்லது எட்டு தடவை குடிக்க இரத்தக் கொதிப்பு குறைவது உறுதி. இந்த ரசத்தோடு சிறிது பூண்டு சேர்த்து கொதிக்க வைத்து வாயுத் தொல்லை உள்ளவர்கள் அருந்தலாம். நல்ல பலன் உண்டு.

அலைச்சலால், டென்ஷனால் ஏற்படும் தலைவலிக்கு கண்ட கண்ட மாத்திரைகளை சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக் கொள்வதற்குப் பதில் முருங்கை இலையை மிளகோடு சேர்த்து நசுக்கி, அந்தச் சாற்றை நெற்றியில் தடவ தலைவலி பறந்து விடும். முருங்கை இலைகளை அரைத்து வீக்கங்




களின் மீது பற்றுப் போட்டால் வீக்கம் குறைந்து விடும்.

முருங்கைக் கீரைச் சாற்றுடன் சிறிது சுண்ணாம்பு, தேன் இவற்றைச் சேர்த்துத் தொண்டைக் குழியில் தடவினால் இருமல், குரல் கம்மல் ஆகியவை நீங்கும்.

முருங்கைக் கீரைச் சாற்றை ஒரு சங்கு அளவு எடுத்து மூன்று வேளை தினமும் உண்டு வந்தால் நரம்பு இழுப்பால் ஏற்படும் அடி வயிற்றுவலி கன்னிப் பெண்களுக்கு ஏற்படும். சூதக வயிற்று நோய், அடி வயிற்றை இழுத்துப் பிடித்தாற் போல் ஏற்படும் வலி ஆகியவை நீங்கும்.

சில குழந்தைகள் எவ்வளவுதான் சத்தான உணவு வகைகளை உண்டு வந்தாலும் உடல் மெலிந்து பலம் இல்லாமல் இருப்பார்கள். டாக்டருக்கும், பல வகையான டானிக்குகளுக்கும் செலவழித்துப் பலன் ஏற்படாமல் இருப்பவர்கள் அதிகம் முற்றாத இளங் காய்களை எடுத்துப் பசும்

பாலில் போட்டு, வேக வைத்து, பின்னர் அந்த முருங்கைக்காய் சோற்றை உண்டு வந்தால் மெலிந்த உடல் தேறும். பலம் கூடும்.

முருங்கைக்காயில் குளோரின், கந்தகம், ஆக்ஸாலிக் அமிலம், மெக்னீசியம், இரும்பு ஆகிய சத்துக்கள் நிறைந்துள்ளன. முருங்கைக்காயின் அற்புத சக்திகளை அறியாமல் சில திரைப்படங்கள் கொச்சைப்படுத்துகின்றன. முருங்கைக்காய் சூப் காய்ச்சலையும், மூட்டு வலியையும் போக்கும்.

வாரத்தில் இரண்டு முறை முருங்கைக் காயை உண்டு வந்தால் இரத்தமும், சிறுநீரும் சுத்தி அடையும். வாய்ப்புண் வருவது தடுக்கப்படும்.

முருங்கைப் பூவை அவித்து உணவோடு உண்டு வந்தால் இருதயம் பலம் பெறும். பூவை கசாயம் செய்து சாப்பிட மயக்கம், வாந்தி, பித்தம் அகலும். சிறுநீர் அடைப்பும், கல்லடைப்பு நோயும் குறையும். ஒரு மண்டலம் அருந்தி வர 'கிட்னி ஸ்டோன்' என்ற மூத்திரக்கோச கல்லடைப்பு குணமாகும். இதற்குப் பத்தியம் எதுவுமில்லை.

வீட்டிற்கு ஒரு மரம் வளர்ப்போம் என்று அரசாங்கம் நம்மை மரம் வளர்க்கத் தூண்டுகிறது. கற்பக மரம் கேட்டதெல்லாம் கொடுக்கும் என்று புராணங்கள் கூறுகின்றன. அந்த மாதிரி ஒரு மரம் நம் வீட்டில் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நாம் ஆசைப்படுவதுண்டு. அந்த



ஆசையை நிறைவேற்றவே இயற்கை முருங்கை மரத்தைப் படைத்துள்ளதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

வாய்க்கு ருசியாக காயையும், உடலுக்கு வலிமை சேர்க்க இலை, பூவையும், மருந்தாகக் கொடுத்து உதவும் முருங்கை மரமும் ஒரு வகையில் கற்பக மரந்தான். அதை நம் வீட்டில் வளர்த்துக் கொள்வதால் மரம் வளர்த்த பெருமையும் உண்டு. மருந்துக்கு ஆகும் பணத்தை மிச்சம் பிடித்த புத்திசாலித்தனமும் உண்டு.

— ராஜி சீனுவாசன்







**(37—ஆம் பக்கத் தொடர்ச்சி)**
கத் தைக்கப்படுவதால் வேறெந்த உடையுடன் சேர்த்தும் அணிந்து கொள்ளலாம். விருந்து போன்ற வைபவங்களுக்குச் செல்வதானால் வேலைப்பாடுடன் கூடிய துப்பட்டாவையும் சேர்த்து அணியலாம்.''

**வெ**ளிர் பச்சைக் கோடுகளுடன்கூடிய உடை— வீட்டில் சாதாரணமாக அணிவதற்கோ, கல்லூரிக்கு அணிந்து செல்வதற்கோ, மிகச் சௌகரியமான உடை. பக்கவாட்டில் தனித் துணி வைத்துத் தைக்கப்படும் முறைக்குப் பெயர் 'கலி' ஆதலால், இவ்வுடை, 'கலிதார் குர்தா' எனப் பெயர் பெற்றது. 'இந்த உடையின் விசேஷம். எந்த விதமான வண்ணக் கலவைகளையும் பரீட்சித்துப் பார்க்கலாம். கற்பனையைச் சற்று ஓட விட்டால் உங்களுக்கே வகை வகையான வடிவமைப்புக்கள் தோன்றுமே!''

**க**ருப்பு, மஞ்சள் உடை—காஞ்சிபுரம் காட்டன் சல்வாரும், 'டை அண்டு டை' துப்பட்டாவும்

இணைந்த இவ்வுடையின் 'குர்தா' 'போபாலி' ஸ்டைலில் உள்ளது. இடுப்பின் இரு புறமும் உள்ள சிறு குஞ்சங்களை அவரவர் அளவுக்குத் தக்கபடி முடிவிட்டுக் கொள்ளலாம். விருப்பமிருந்தால் அதில் சிறு அலங்கார மணிகளையோ, குஞ்சங்களையோ இணைத்துக் கொள்ளலாம். இவ்வுடையின் சிறப்பு 'குர்தா' வின் மேல் பாகத்திலிருந்து தைக்கப்படும் சிறு சிறு மடிப்புக்கள்' என்று கூறும் ரீடா லால் மேலும் தொடர்கிறார். ''பொதுவாக 'போபாலி' ஸ்டைலில் 'குர்தா' இருக்கும். ஆனால் தற்கால ஃபாஷனை முன்னிட்டு நீளத்தைக் குறைத்திருக்கிறேன்.''

**உடைகள் உதவி: 'மேடமாய்சல்' பொடிக் உரிமையாளர் திருமதி ரீடா லால். உடைகளுக்கு உயிர் கொடுத்தவர்கள்: வித்யா, நீலிமா.**

**— நிர்மலா சக்கரவர்த்தி.**

அட்டை வண்ணப் படம், வண்ணப் படங்கள்:
**யோகா.**



# மாசிலா மேனி

மாசிலா மேனியெழில் பெற நீங்கள் மனதில் முடிவெடுத்தால் போதும்.

தினமும் உங்களுக்கெனச் சிறிது நேரம் ஒதுக்குங்கள். கூடவே கொஞ்சம் லாக்டோ-காலமைனும் எடுத்துக்கொள்ளுங்கள்.

லாக்டோ-காலமைன் மாசுமறுக்களை அகற்றுகிறது. உங்கள் மேனியை மென்மையாகவும் மாசற்றதாகவும் வைத்திருக்கிறது.

லாக்டோ-காலமைன். ஒப்பனைத் திரையிட்டு மறைக்கவே விரும்பாத உன்னத எழிலைத் தருவது.

ஆம். எழிலான மேனியில் மறைக்க எதுவுமே இல்லை!




**லாக்டோ-காலமைன்**

# இந்த மாதம் எப்படி?

## செப்டம்பர்-89

### மேஷ ராசி:

அசுவினி, பரணி, கிருத்திகை 1 — ஆம் பாதம்.

கடந்த மாதங்களைவிட மனமகிழ்வு அதிகம் ஏற்படும். சுபகாரியங்கள், பதவி உயர்வு, பண வரவு, புத்திரப் பிராப்தி என ஏதாவது ஒரு விதத்தில் மன நிறைவு உண்டாகும். கணவன் மனைவிக்கிடையே உண்டாகியிருந்த சந்தேகங்களோ, மனத் தாங்கல்களோ நீங்கிப் புத்துணர்வும், புது வாழ்வும் மலரும். தாய்மாமனால் சிலருக்கு நன்மை உண்டாகும். தாய்வழி பாட்டனார் சொத்துக்கள் எதிர்பாராத விதத்தில் தேடி வந்தடையும். அது வீடாகவும் இருக்கலாம். அல்லது நிலமோ, பணமாகவோ, பொன்னாபரணமாகவோ கூட இருக்கலாம். கலைஞர்களுக்குக் கீர்த்தியும், கவிஞர்களுக்குப் பாராட்டும் கிடைக்கலாம்.

### ரிஷப ராசி:

கிருத்திகை 2, 3, 4 — ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 — ஆம் பாதங்கள்.

குருவினால் கூடுதலான நன்மையுண்டு. படிப்பில், பதவியில், பண விஷயத்தில் ஏதேனும் ஒரு விதத்தில் குருவின் அருள் பரிபூரணமாகக் கிட்டி, இதுவரை பட்ட அவதியிலிருந்து சற்று நிம்மதி கிடைக்கும். எனினும் பூரண நன்மை ஏற்படப் பல பௌர்ணமிகள் காத்திருக்க வேண்டும். ஆட்சி சுக்கிரனும், உச்ச புதனும் உகந்த நேரத்தில் கைகொடுப்பார்கள். நிம்மதிப் பெருமூச்சு விட வேண்டிய மாதம். கன்னிப் பெண்களுக்கு எதிர்பாராத நேரத்தில், எதிர் பார்த்த ஒருவரால் திருமணம் கைகூடி வரலாம். அந்த ஒருவர் தாய் மாமனாகக் கூட இருக்கலாம். வரும் இடத்தை விட வேண்டாம். ஏனெனில் சில அமைப்பின் காரணமாகத் தடங்கல் ஏற்படலாம்.

### மிதுன ராசி:

மிருகசீரிஷம் 3, 4 — ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

மகப்பேறு நிலையில் உள்ளவர்களுக்குப்

புதனின் அருளால் புதல்வர்களே பிறப்பார்கள். சுக்கிரனின் அருளால் சிலர் வீட்டில் சுப காரியங்கள் நடக்கும். ஹோமங்கள், பூஜைகள் எனத் தெய்வீகச் செயல்களில் சிலர் ஈடுபட வேண்டியிருக்கும். சகல சாஸ்திரங்களையும், புராணங்களையும் கற்றவர்கள், மற்றவர்களால் போற்றப்பட்டுப் பெருமை அடைவார்கள். வெளிநாட்டில் பணிபுரியும் அரசாங்க மருத்துவர்கள் பதவி மாற்றம் அல்லது உயர்வு அடைவார்கள். இந்த மிதுன ராசியை இலக்கினமாகக் கொண்டுள்ள கன்னிப் பெண்கள் திருமணத்திற்கு இதுவரை இருந்த தடைகள் விலகி மனம் போல் மாங்கல்யத்தைப் பெறுவார்கள். இதை நல்ல மாதம் எனலாம்.

**கடக ராசி:**

புனர்பூசம், 4 — ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

கல்லூரிகளுக்குச் செல்லும் மாணவிகள் சற்றே அதிருப்தியை அடைய வேண்டியிருக்கும். மனத்தில் குழப்பமும், விரக்தியும் ஏற்படுமளவுக்கு, வகுப்புச் சூழ்நிலை அமையலாம். அல்லது எதிர்பார்த்த 'சீட்' கிடைக்காமல், கிடைத்ததை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படலாம். வித்யாகாரகனாகிய புதன் உச்சம் பெற்றாலும் ஞானகாரகனாகிய குரு வலுவிழந்து காணப்படுவதே இதற்குக் காரணமாகும். எனினும் கலைஞர்களும், கவிஞர்களும் கீர்த்தியைப் பெறுகின்ற சூழ்நிலை காணப்படுகிறது. அரிசி வியாபாரிகளும், எண்ணெய் வியாபாரிகளும் ஏற்றம் பெறுவார்கள். மூத்த சகோதரர்களாலும், தாய்மாமன் வகையினராலும் ஒரு சில சகோதரிகள் இலாபம் பெறுவார்கள்.

**சிம்ம ராசி:**

மகம், பூரம், உத்திரம் 1 — ஆம் பாதம்.

இராசி நாதனும் வாக்கு ஸ்தானாதிபதியும் ஆட்சியும் உச்சமும் பெற்றிருப்பதால் நடிகர்களும், நடிகைகளும் இராஜ யோகத்தைப் பெறுவார்கள். சினிமாவில் 'இராஜ பார்ட்' மட்டுமல்ல! — நிஜ வாழ்க்கையிலே கூட இவர்களுக்கு இந்த மாதம் பல படங்கள் அல்லது நாடகங்களில் நடிக்கும் வாய்ப்பு இவர்களைத் தேடி வரும். எந்த விதத்திலும் சிம்மராசிக்காரர்கள் சிறப்பினைப் பெறுவார்கள். மாணவிகளுக்குப் பிடித்தமான கல்லூரிச் சூழ்நிலை ஏற்படும். உல்லாசப் பிரயாணத்திற்கு வாய்ப்புண்டு. பத்ரி நாத், பண்டரிபுரம் என வைஷ்ணவத் தலங்களுக்குச் செல்லும் வாய்ப்பு ஒரு சிலருக்குக் கிடைக்கும். வண்டி, வாகன யோகம், மனை, வீட்டு யோகம் எனப் பல விதத்திலும் பலன் தருகின்ற காலகட்டம். அழகு சாதன வியாபாரிகள், ஒப்பனைக் கலைஞர்கள், மற்றும் தொழில் நுட்பக் கலைஞர்கள் முன்னேற்றம் அடைவார்கள். வீட்டில் சுபநிகழ்ச்சிகள் நடக்கும். கன்னிப் பெண்களுக்கோ, வரன்களுக்கோ இதுவரை இருந்த தடங்கல்கள் நீங்கித் திருமணம் தடையின்றி நடக்கத்தக்க சூழ்நிலை வந்து விட்டது. ஜாம் ஜாம் என்று திருமணம் நடக்கும்! கவலை வேண்டாம்!

**கன்னி ராசி:**

உத்திரம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1 — ஆம் பாதம்.

இந்த இராசிக்காரர்களும், கூடுதலான நன்மையை அடைவார்கள். விஞ்ஞானிகள், அறிவியல் பாடத்தை விரும்பிக் கேட்கும் மாணவிகள், மற்றும் தொழில் நுட்பக் கலைஞர்கள் கட்டாயம் நன்மையை அடைவார்கள். அதுபோலவே நாவலாசிரியர்கள், புது முகங்கள், மற்றும் ஆரம்ப எழுத்தாளர்கள் எதிர்பாராத பாராட்டையோ, பரிசையோ பெறுவார்கள். அதே சமயம் ஒரு சிலருக்குப் பொருள் விரயமும், கண் சம்பந்தமான வியாதிகளும் ஏற்படும். தசாபுத்திகள் நன்றாக அமைந்துள்ளவர்களுக்கு உள்ளபடியே எதிர்பாராத தனலாபம் ஏற்படும். போட்டிப் பந்தயங்களில் புதன் அருளால் வெற்றி உண்டு.

**துலா ராசி:**

சித்திரை 3, 4 — ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

எல்லாம் நினைத்தபடி முடியும். இப்படிக் கூறும் போது எதிர்பார்த்த, எதிர்பாராத எல்லா இனமும் அதில் அடங்கும். எது நடக்கிறதோ, இல்லையோ, வீட்டில் இதுவரை காத்திருந்த கன்னிப் பெண்களுக்குத் திருமணம் கட்டாயம் கைகூடி வரும். சூரியனும் சரி, குருவும் சரி அதற்குத் துணை நிற்கிறார்கள். சுக்கிரனோ சுயவீட்டில் ஆட்சியில் உள்ளார். தொழில் ஒன்று ஆரம்பிக்கவும், பதவி ஒன்றைப் பெறுவதற்கும் ஏற்ற தருணம். வீடு மனை வாங்கவும் கூடுதலான லாபத்திற்கு விற்கவும் சரியான சமயம். முயன்றுதான் பாருங்களேன். சுவாதி நட்சத்திரக்காரர்களுக்குக் கியாதியும், கீர்த்தியும் தேடி வரும். அறிமுக எழுத்தாளர்கள் அமோகமான ஆதரவைப் பெறுவார்கள். எழுதும் கதைகள் திரும்பி வராமல் பத்திரிகையில் பிரசுரமாகக் கூடிய நேரம்! எனவே எழுதித் தள்ளுங்கள்!

**விருச்சிக ராசி:**

விசாகம் 4 — ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

வெளிநாட்டுப் பிரயாணம் ஒன்று எதிர்பாராத நேரத்தில் வந்தமையும், எரிபொருள்,

உருகும் பொருள் இவை சம்பந்தமான தொழில் துறையில் உள்ளவர்கள் கூடுதலான நன்மை பெறுவார்கள். ஒரு சிலருக்கு விஷப் பூச்சிகளால் தொல்லை ஏற்படலாம். கைகூடிய திருமணம் தடை ஏற்பட்டுத் தள்ளி வைக்க நேரிடும். எனினும் கீர்த்திக்கோ, புகழுக்கோ பங்கம் ஏற்படாத வண்ணம் புதன் காப்பாற்றுவார். எதிலும் நிதானத்துடன் நடந்து கொள்ள வேண்டியிருக்கும். அரசு உத்தரவுகள், உதவிகள் எதிர்பார்த்தபடி உரிய காலத்தில் வராத அளவிற்குத் தடைகள் உண்டாகலாம். எனவே எதிலும் கவனம் தேவை. அனுஷ நட்சத்திரக்காரர்களுக்குப் புதன் கூடுதலான நன்மைகளைத் தருவார்.

### தனுசு ராசி:

மூலம், பூராடம், உத்திராடம் 1 — ஆம் பாதம்.

இந்த இராசிக்கு இராசி நாதனுடைய பார்வை உண்டு. எனவே தீயபலன்கள் குறைக்கப்படும். கொடுக்கல், வாங்கலில் சற்றுச் சிரமம் ஏற்படலாம். தடைப்பட்டிருந்த எந்தச் செயலும் ஏதோ ஒருவிதத்தில் தடை நீங்கி வெற்றி நடைபோட ஆரம்பிக்கும். எப்படியும் இதுவரை இருந்த குழப்பமும், குறையும், மறைந்து மனநிறைவு ஏற்படும். பதவி ஏற்றம், உத்தியோக வாய்ப்பு என மனமகிழ்வுக்கு வாய்ப்பு உண்டு. எனினும் ஜென்மச் சனியினால் சற்று விரயமும், விசனமும் ஏற்படும்.

### மகர ராசி:

உத்திராடம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 — ஆம் பாதங்கள்.

மகர ராசிக்காரர்கள் மகத்தான நன்மையைப் பெறக் கூடிய காலகட்டம் இன்னும் வரவில்லை. குறிப்பாக இந்த மாதம் உடல் நிலையும் சரி, மனநிலையும் சரி சீராக இருக்க வாய்ப்புக் குறைவே. வம்பு, வியாஜ்ஜியங்கள் என வீண் செலவுகள், நிம்மதிக் குறைவு, அலைச்சல், பயம் எனப் பலவிதங்களிலும் பாதிப்பை எதிர்பார்க்கலாம். புதனைத் தவிர மற்ற கிரகங்கள் அனைத்துமே இந்த இராசிக்காரர்களை 'விட்டேனா பார்' என்று கங்கணம் கட்டிக் கொண்டு கவலையைத் தரக் காத்திருக்கிறார்கள். எனவே அமைதியும், அடக்கமுமே இவர்களைக் காக்கும் கேடயங்களாக இருக்க முடியும். ஆன்றமைந்த ஆன்மீகச் சான்றோர்களின் ஆசிகளைப் பெற முயலுங்கள். தொழிலைத் தொடங்கும் முயற்சியையோ, திருமணப் பேச்சையோ தள்ளி வைக்க வேண்டி இருக்கும்.

### கும்ப ராசி:

அவிட்டம் 3, 4 — ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி.

கேது, சூரியன், ஆகியவைகளைத் தவிர மற்றவர்கள் அனைவருமே அனைத்து நலன்களையும் அளிக்கக் கூடிய அருமையான சந்தர்ப்பம். இதைப் பயன்படுத்திக் கொள்ள முயல வேண்டும். திருமணத்திற்காகக் காத்திருக்கும் காதலர்களின் திருமணம் பெற்றோர்களின் ஆசியுடன் நிறைவேறும். எந்தத் துறையிலும் வெற்றி ஏற்படும். கிரக பரிகாரங்கள், ஹோமங்கள் இவைகளினால் தோஷங்கள் விலகும். க்ஷேமங்கள் ஏற்படும். தசாபுத்தி நன்றாக இருப்பவர்களுக்கு மேலும் நன்மைகள் ஏற்படலாம். சதய நட்சத்திரம் பெண்களுக்கு ஆதாயம் அதிகமாகவே இருக்கும். புது வீடு வாங்குதல், குடி புகுதல், பதவி ஏற்றம் எனப் பலவிதங்களில் நன்மை உண்டு. எனினும் பொறாமைப்படுபவர்களால் சற்று மனக்கவலையும் ஏற்படும். கண், வயிறு சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம்.

### மீன ராசி:

பூரட்டாதி 4 — ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

நன்மைகளும், நலிவுகளும் சேர்ந்தே நடக்கும். ஒன்றை வாங்க மற்றொன்றை விற்க வேண்டியிருக்கும். சுக்கிரனும் சூரியனும் சுப பலன்களைத் தருவார்கள். சனியும், புதனும் சற்றுக் குழப்பத்தை உண்டாக்கலாம். பூரட்டாதி நட்சத்திரக்காரர்களுக்குப் பூரண நன்மை உண்டு. அதிலும் சுக்கிர திசைக்காரர்களுக்குச் சற்று அதிகமாகவே நற்பலன் உண்டு. புதுமனை புகுதல், புதுப் பதவி ஒன்றைப் பெறுதல் என மனமகிழ்வினைப் பெறுவார்கள். ஆனால் ரேவதி நட்சத்திரப் பெண்கள் பல அவதிகளுக்கு ஆளாகலாம். சகோதரர்களால் குழப்பமோ, மனக்கவலையோ உண்டாகலாம்.

## சனி கொடுப்பாரா? கெடுப்பாரா?

"பரம பக்தர்களாக இருந்து பிறகு எக்காரணத்தாலோ நாஸ்திகர்களாக மாறிய பலரைப் பார்க்கலாம். அவர்கள் மனம் அப்படி மாறினாலும், அவர்கள் கடவுளை நிந்தனை செய்ய மாட்டார்கள். நாஸ்திகப் பிரசாரத்தையும் செய்ய மாட்டார்கள். ஆனால் பரம நாஸ்திகனாக இருந்து பிறகு திடீரென ஆஸ்திகனாக மாறியவர்களோ, எந்த ஆண்டவனைக் கேவலப்படுத்திப் பிரசாரம் செய்தார்களோ அந்த நிலையிலிருந்து முழுவதுமாக மாறி, இறைவனைப் பற்றி இவ்வுலகமே வியக்குமாறு பிரசாரம் செய்வார்கள். அருணகிரி நாதரை அதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். அவ்வாறு நம்மிடையே வாழ்ந்து, தமது கவிதைகளால் லட்சோப லட்ச மக்களைக் கவர்ந்து, அண்



'கடலை மாவு
தோசை

நம் வீட்டில் தோசை மாவு கொஞ்சமாக மீந்திருக்கும். திடீரென்று விருந்தினர் வந்துவிட்டார்களா? கவலையே வேண்டாம். தோசை மாவுடன் கடலை மாவையும் கலந்து, பொடியாக வெங்காயம், பச்சை மிளகாய், மல்லி கறிவேப்பிலை எண்ணெயில் வதக்கிப் போட்டுத் தேவையான உப்பு போட்டு தோசை ஊற்றவும். விருப்பமுள்ளவர்கள் சிறிது பெருங்காயம் (தூள்) போட்டு ஊற்றலாம். தொட்டுக் கொள்ளத் தேங்காய் சட்னி நன்றாக இருக்கும்.

— கருணா சீதாராமன்.

மையில் அமரரான ஒரு மாபெரும் கவிஞர், அத்தகைய நாஸ்திக நிலையிலிருந்து, ஆஸ்திகராக மாறி இந்து மதத்தின் அர்த்தத்தையே அழகாக விளக்கியிருப்பதை நாம் அறிகிறோம். இப்படிப்பட்ட மாறுதல்களை அவர்களிடம் செய்பவர் யார்? எந்தக் கிரகம்?'' என அண்மையில் ஒரு சகோதரி கேட்டிருந்தார்கள். அத்துடன் கைகளில் அத்தன்மையைக் காட்டும் ரேகைகள் உண்டா எனவும் விளக்கம் கேட்டார்கள். உள்ளபடியே பக்தியைக் கொடுப்பவரும், கெடுப்பவரும் சனீஸ்வரனே ஆவார். நமது கையில் உள்ள சனீஸ்வர மேடும், விதி ரேகையுமே இதை நன்கு எடுத்துக் காட்டும்.

ஒருவரது கையில் உள்ள விதிரேகை ஆரம்பத்தில் சந்திரமேட்டில் அழுத்தமாக ஆரம்பிக்காமல், அல்லது சிதைந்த நிலையில் ஆரம்பித்து (X—Y) புத்திரேகை அவ்வாறிருந்து, பிறகு நேராகச் சனி மேட்டிற்குச் சென்று, ஒரு கிளை குருமேட்டையடைந்தால் அப்படிப்பட்டவர்கள் ஆரம்பத்தில் நாஸ்திக வாதியாக இருந்து பிறகு ஆஸ்திக வாதியாக மாறியவர்களாக இருப்பார்கள். இதிலிருந்து, 'அவனருளாலே, அவன் தாள் பணிகின்ற' தன்மையை ஒருவருக்குத் தருகின்ற வாய்ப்பு 'சனீஸ்வரர் ஒருவருக்கே உண்டு என அறியலாம். அதுபோலவே பிடிவாத மனப்போக்குடன் செயல்படுவதற்கும் சனீஸ்வரனே காரணமாவார். சில குழந்தைகள் சண்டித்தனமும் பிடிவாதமும் நிறைந்து, வீட்டில் குழப்பத்தை உண்டாக்கினால், பெரியவர்கள் அந்தக் குழந்தையைப் பெற்றவரிடம் "சண்டிகேசுவரருக்கு அர்ச்சனை செய், எல்லாம் சரியாகி விடும்'' என்று கூறுவதைக் கேட்கலாம். வாத நாடிக்குக் காரணமான சனீஸ்வரனே அத்தகைய பிடிவாதத்திற்கும், அசைக்க முடியாத ஆணித்தரமான வாதத்திற்கும் காரணமாகிறார். சில அரசியல்வாதிகள் கடைசி மட்டும் தனித்தன்மையுடன் தான் சார்ந்த இயக்கத்தின் கொள்கையில் ஈடுபாடு கொள்வதற்கும் இந்தச் சனீஸ்வர கிரகமே காரணம். எனவே அக்ககையோர் கைகளில் விதி ரேகை நன்கு அழுத்தமாகக் (N—M) காணப்படுவதுடன் குரு மேட்டில் ஒரு சதுரத்தையும் (S) சூரியமேட்டில் நீண்டதொரு ரேகையையும் (X) செவ்வாய் மேட்டில் ஒரு சிறந்த நேரான (C—D) ரேகையையும் பெற்றிருக்கும். அப்படிப்பட்டவர்கள் வாழ்க்கையில் ஒரே நோக்கத்துடன், பிடிவாதத்துடன் முன்னேறி அகில உலகப் புகழ்பெற்று என்றும் அழியாத அமரத்தன்மை பெறுவார்கள். இதே சனீஸ்வரன் ஒரு பெண்ணின் மணவாழ்க்கையில் பிரிவினையையோ, அல்லது பிடிப்பினையோ எவ்வாறு ஏற்படுத்துகிறார் என்பதை அடுத்த இதழில் காணலாம்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.

அரை முற்றலில் மட்டைத் தேங்காய் வாங்கியோ அல்லது பறித்தோ விட்டவர்கள் அதன் மட்டைகளை உடனே உரிக்காது ஒரு வாரம் வைத்திருந்தால் தேங்காய் முக்கால் காயாகுமாம். ஒரு மரம் ஏறி உரைத்த உண்மைச் செய்தி இது!

— ராஜம்.

# மல்லிகை நறுமணத்தில் குளித்தெழுங்கள்"

கூறுபவர் ராமாயணம் புகழ் தீபிகா.




இந்தியாவின் மிக நவீன மயமாக்கப்பட்ட தொழிற்சாலையிலிருந்து, இத்தாலியின் தொழிற் நுட்பத்துடன், மல்லிகை நகரத்திலிருந்து இந்த சோப் தயார் செய்யப்படுகிறது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தும் தரமான சோப்புகளை தயாரிப்பதில் சரித்திரம் படைத்தவர்கள் இதையே பின் தொடர்கிறார்கள்.

**மல்லிகையின் நறுமணத்தில் குளித்தெழுங்கள்.**

மைசூர் ஜாஸ்மின்




MAX. PRI
Rs. 3.8
LT. EXTR.
Net Weight 100 gm

கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட்ஸ் லிமிடெட் பெங்களூர்-560 055.

"இந்து.... போன்...."

போன் மூன்றாவது மேஜையில் இருந்தது. செக்ஷன் ஆபீசரின் மேஜை.

பிற்பகலில் போன் வந்தால் அநேகமாக ராமலிங்கமாகத்தான் இருக்கும்.

"ஹலோ, இந்து ஹியர்....."

"இந்து..... அப்பா பேசறேன். பானுவுக்கு வலி எடுத்துடுத்து. நர்சிங் ஹோமுக்குக் கிளம்பறோம். நீ நேரே அங்கே வந்துடறியா, பர்மிஷன் போட்டுட்டு?"

"சரிப்பா....." ஒரு வாரமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்ததுதான். இன்றைக்கா, நாளையா, ஒரு வாரம் ஆகுமா என்று கடவுள் கண்ணாமூச்சி ஆடும் சஸ்பென்ஸ். "இதோ கிளம்பறேம்பா..."

"இன்னொரு வேலை இருக்கு. ஆட்டோ எடுத்துண்டு சித்தி வீட்டுக்குப் போ. ராத்திரி அம்மாவோட நர்சிங் ஹோமில் இருக்கணும். ரெடியாக இருக்கேன்னு சொல்லியிருக்கா. ஆட்டோவை வெயிட்டிங்கிலேயே வைச்சுட்டு சித்தியையும் உடனே அழைச்சிண்டு நேரே நர்சிங் ஹோம் வந்துடு....."

"சரிப்பா.... பானு ரொம்ப சிரமப்






படறாளா......?''

''வலி தொடர்ந்து இல்லை. விட்டுவிட்டு வரது. வைச்சுட்டுமா...?''

இந்துவுக்குப் படபடவென்று வந்தது.

செக்ஷன் ஆபீசரிடம் விஷயத்தைச் சொன்னாள். தன் நாற்காலிக்கு வந்தாள். பைலை மூடிவைத்தாள். மேஜை டிராயரைப் பூட்டினாள். நடந்தாள்.

செக்ஷன் ஆபீசர் மேஜையைத் தாண்டும்போது மறுபடியும் போன் அடித்தது. எஸ்.ஓ. பீரோவைத் திறந்து எதையோ தேடிக்கொண்டிருந்தார். அதனால் இந்து போனை எடுத்தாள்.

''கொஞ்சம் இந்துவைக் கூப்பிட முடியுமா......?'' ராமலிங்கம்.

''நான்தான் இந்து பேசறேன்...''

''இந்து.... காலையிலேயிருந்து உன்னைக் கூப்பிட ட்ரை பண்றேன், பண்றேன், எங்க ஆபீஸ் போன் சண்டித்தனம் பண்ணிக்கிட்டே இருக்கு. ஒரு அஞ்சு நிமிஷம் வர முடியுமா? பர்மிஷன் போட்டுவிட்டுக் கிளம்ப முடியும்னா ரொம்ப சந்தோஷம்...''

"சரி.... அவசரமா கிளம்பிக்கிட்டிருக்கேன். பானுவுக்கு வலி எடுத்துட்டுதாம். அப்பா போன் பண்ணினார். நர்சிங் ஹோமில் அட்மிட் பண்ணக் கிளம்பறாங்களாம். நான் ஒரு ஆட்டோ பிடிச்சு திருவல்லிக்கேணி சித்தியை அழைச்சுகிட்டு நேரே நர்சிங் ஹோம் போய்க்கிட்டிருக்கேன்...."

"இப்ப நான் வெளியிலே இருக்கிற பூத்திலேருந்துதான் பேசறேன். நீ கிளம்பி வா. அதுக்குள்ளே ஆட்டோ பிடிச்சுவைக்கட்டுமா...?"

"சரி... தேங்ஸ்...."

அவள் மாடிப்படி இறங்கி, கட்டிடத்தின் படிகள் இறங்கி நடந்து காம்பவுண்ட் கேட்டைத் தாண்டி வெளியே வந்தபோது ராமலிங்கம் ரோட்டில் போகும் டிராபிக்கில் ஆட்டோவைத் தேடிக்கொண்டிருந்தான். இந்துவைப் பார்த்ததும், "வா.... பி.டபிள்யூ.டி. ஆபீஸ் எதிரிலே நிற்கும். அங்கே போய்ப் பிடிச்சுக்கலாம்" என்று நடந்தான்.

"நீ ஒரு முக்கியமான சமாசாரம் சொன்னால் நான் ஒரு முக்கியமான சமாசாரம் சொல்றேன். வீடு வாடகைக்குக் கிடைச்சிட்டுது.... பம்மல்லே...."

"பம்மலா... ஆபீசுக்கு வரது கஷ்டமாக இருக்குமே...."

"வீட்டு வாசல்லே பஸ் ஸ்டாப். பல்லாவரம் ஸ்டேஷன் நாலாவது ஸ்டாப். எலக்டிரிக் டிரெயினிலே இருபது நிமிஷம்..."

"வீட்டுக்காரர்கிட்டே சொல்லிட்டீங்களா, 'நம்ம' விஷயத்தை. அப்புறம் ஏதாவது சொன்னாங்கன்னா...."

"தனி வீடு இல்லே. ஃப்ளாட். இருபது ஃப்ளாட்டிலே ஒண்ணு. சிங்கிள் பெட்ரூம். 500 ரூபாய். ஃப்ளாட் ஓனர் பம்பாயிலே இருக்கானாம். எதிர் ஃப்ளாட்டிலே யார் இருக்கான்னு கண்டுக்கமாட்டாங்க. நம்ம மாதிரி ப்ராப்ளம் உள்ளவங்க சௌகரியத்துக்குன்னே வந்திருக்குது இந்த ஃப்ளாட் ஸிஸ்டம்...."

ரோடில் போன ஆட்டோவைக் கையைக் காட்டி நிறுத்தினார்கள். இந்து ஏறிக் கொண்டாள். "நான் போறேன். முதல்லே ஊருக்குப் போய் உங்க அப்பாவைப் பார்த்து கன்வின்ஸ் பண்ணுங்க..."

"நீ சொல்லி விடுவே இல்லே உங்க வீட்டிலே, அக்காவுக்கு டெலிவரி ஆனவுடனே...?"

ஆட்டோ கிளம்பியது.

சித்தி வீட்டுச் சந்து முனையில் திரும்பியது. சித்தியிடம் சொன்னதும் போட்டது போட்டபடி கிளம்பி விட்டாள். வாசலுக்கு

எலுமிச்சை, காயாக இருந்தால், சமைக்கும் போது, காஸ் அடுப்பில் ஜ்வாலைபக்கத்தில்சிறிதுநேரம்வைத்துப் பிறகு பிழிந்தால் சாறு சொட்டும்.

— பார்வதி.

நடந்து கொண்டே பெண்ணைக் கூப்பிட்டு, ராத்திரி எல்லோரும் சாப்பிட, மறுநாள் காலை நர்சிங் ஹோமுக்குக் காப்பி கொண்டு வருவதிலிருந்து ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வந்து ஆட்டோவில் ஏறிக் கொண்டாள்.

சிலுசிலுவென்று சுகமாக மாலைக் காற்று முகத்தில் பட, சித்தியுடன் ஆட்டோவில் போய்க் கொண்டிருக்கும் போது இந்துவுக்குத் திடீரென்று மனசில் இருந்த ஒரு திரை விலகியது போலிருந்தது.

சித்தியிடம்தான் முதலில் ராமலிங்கத்தைப் பற்றிச் சொல்ல வேண்டும். சித்தி புரிந்து கொள்வாள். இவள் அம்மா அளவுக்குப் பழமையில் ஊறினவள் இல்லை. நிறைய கதைகள் படிக்கிறவள். இயல்பாகப் புரிந்து கொள்வாள். இப்போது ஆரம்பிக்க வேண்டாம். பானுவுக்கு டெலிவரி ஆகி, ஏழெட்டு நாள் தனியாக நர்சிங் ஹோமில் இருக்கும் போது மெதுவாகச் சொல்லி கன்வின்ஸ் பண்ணலாம். சித்தி புரிந்து கொண்டு விட்டால் அம்மாவுக்கு அவளே எடுத்துச் சொல்வாள். அம்மா புரிந்து கொண்டு சம்மதம் சொல்வது கஷ்டம்தான். சித்தி சமாளித்து விடுவாள். பேச்சில் சித்தியின் சாமர்த்தியத்துக்கு இணையே இல்லை.

ராமலிங்கத்துக்கு என்ன? அழகு இல்லையா? படிப்பு இல்லையா? குணம் இல்லையா? நல்ல வேலை இல்லையா? ஒரு பெண்ணை வைத்துக் காப்பாற்ற சாமர்த்தியம் இல்லையா? எனக்குத்தான் வேலை இல்லையா? கையில் ஐந்தாயிரம் கொண்டு வா, பத்தாயிரம் கொண்டு வா. பதினைந்து பவுன் போடு என்று கண்டிஷன் போடப் போகிறாரா? "இந்துவின் அழகுக்கும் சமர்த்துக்கும் வேலைக்கும் பிள்ளையைப் பெற்றவர்கள் வந்து கெஞ்ச வேண்டும்" என்று எத்தனை தடவை சித்தி சொல்லியிருக்கிறாள்...?

ஜாதி குறுக்கே நிற்கும். ஜாதி சாப்பாடு போடுமா? ராமலிங்கம் போடுவார்."

நர்சிங் ஹோம். இறங்கி பரபரப்புடன் நடந்தார்கள். லேபர் வார்ட் வெளியே யாரும் இல்லை. அடுத்து இருந்த வராந்தா கோடி அறை திறந்திருந்தது. கதவைத் தள்ளிக் கொண்டு பார்த்தால் பானு சிரித்துக் கொண்டே கட்டிலில் உட்கார்ந்து அம்மாவுடன் பேசிக் கொண்டிருக்கிறாள். பக்கத்து வீட்டு மாமி எதிர் பெஞ்சிலும் அப்பா ஒரு நாற்காலியிலும் உட்கார்ந்திருக்கிறார்கள்.

இந்துவின் பரபரப்பு புஸ் என்று அடங்கியது. "என்னடி, வலி எடுக்கல்லே...?"

"விட்டு விட்டு வரதுடி..."

"அது ஆகும், ராத்திரி பன்னிரண்டு, ஒரு மணி. பாதி பிரசவம் ராக்கூத்துதான். இப்படித்தான் என் நாத்தனார் பெண்ணுக்கு..." என்று பக்கத்து வீட்டு மாமி ஆரம்பித்தாள்.







## சுவைமிக்கது

சுப்ரீம், மற்ற எண்ணெய்களைப் போலன்றி, உணவின் மணத்தையும் சுவையையும் மிஞ்சும்தன்மை இதற்கு இல்லை. எனவே, உணவின் இயற்கையான சுவையும் மணமும் பாதிக்கப்படாமல் அப்படியே இருக்கின்றன.

## பிசுக்கற்றது

சுப்ரீம், மற்ற எண்ணெய்களுக்கு மாறானது. நிறிதும் பிசுக்கற்றது. பொரித்த அப்பளம் அல்லது பூரியின்மீது எண்ணெயின் சுவடே தெரியாது. மொரமொரப்பும் சுவையும் ஓங்கி நிற்கும்.

## பல முறை பயன்படக்கூடியது

சுப்ரீம், மற்ற எண்ணெய்களைப் போலல்லாமல், எத்தனை முறை சூடாக்கினாலும் இதன் நிறம், மணம், சுவையில் குறிப்பிடத்தக்க மாறுதல் இருக்காது. எனவே இதை மீண்டும் மீண்டும் பயன்படுத்தலாம். ஆனால் மற்ற எண்ணெய்களையோ ஒரு முறை அல்லது புதிய எண்ணெயை சேர்த்துத்தான் உபயோகிக்கவேண்டும். எனவே இது சிறந்தது.

# சுப்ரீம்

இருமுறை சுத்திகரிக்கப்பட்ட சுத்தமான தாவர எண்ணெய்

கொலஸ்டரோலை குறைக்கிறது




சுப்ரீம், இந்த சமையல் எண்ணெய் விரைவில் சூடேறுகிறது. சூட்டை அதிக நேரம் தக்க வைக்கிறது. எனவே எரிபொருள் மிச்சம். இது தெள்ளத்தெளிவாக இருக்க இரு முறை சுத்திகரிக்கப்படுகிறது. இன்னொரு சிறப்பு: இதிலுள்ள உயர்தர பருத்தி விதைப் பருப்பின் சாறு கொலஸ்டரோலைக் குறைக்கிறது; புரதச் சத்தைப் பெருக்குகிறது. எனவே உங்கள் உணவு ஆரோக்கியமாகவும் இன்சுவையுடனும் இருக்கிறது.

**சிறந்தவை அனைத்தும் கொண்ட சிக்கன சமையல் எண்ணெய்**

ஸ்.எஸ்.டி. ஆயில் மில்ஸ் கம்பெனி (பி) லிட்.,
ஸ்லேஜ் ரோடு, ஐயப்பன்தாங்கல், சென்னை-56.

நியாய விலை : 35.25 (1 கிலோ கிராம்) வரிகள் உட்பட.
நியாய விலை : 61.25 (2 கிலோ கிராம்) வரிகள் உட்பட.
நியாய விலை : 150.00 (5 கிலோ கிராம்) வரிகள் உட்பட.

# வெகு விரைவில்
# உங்கள் குழந்தையின் தேவைகளும்
# உங்கள் செலவுகளும் அதிகரிக்கும்



**உங்களுக்கு உதவ யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவின் குழந்தைகள் பரிசு வளரும் நிதித்திட்டம்.**

உங்கள் குழந்தைச் செல்வத்துக்கு நீங்கள் அளிக்கக்கூடிய சிறந்த பரிசு. யூனிட் டிரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதித்திட்டத்தில்* குறைந்தபட்சமாக ரூ. 500/- முதலீடு செய்யுங்கள். உங்கள் கவலைகளுக்கு விடை கொடுங்கள்.

ஒவ்வொரு வருடமும் உத்தரவாதமான 12.5% டிவிடெண்டு மற்றும் ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை உற்சாகமூட்டும் போனஸ் டிவிடெண்டு.

உங்கள் குழந்தைக்கு 21 வயதாகும்பொழுது, நீங்கள் அளித்த பரிசுத் தொகை, உங்கள் குழந்தையின் தேவைகளையும் உங்கள் செலவுகளையும் சமாளிக்க தேவையான நேரத்தில் கணிசமான வளர்ச்சி அடைந்திருக்கும்.

மேலும் விவரங்களுக்கு யூனிட் டிரஸ்டின் அலுவலகங்களையோ, ஏஜெண்டுகளையோ, முக்கிய பிரதிநிதிகளையோ, ஸ்பென்சர் அண்டு கம்பெனியையோ அணுகுங்கள். அல்லது கீழ்க்கண்ட கூப்பனை யூனிட் டிரஸ்ட் அலுவலகத்துக்கு தபால் மூலம் அனுப்புங்கள்.

Please send me a FREE CGGF brochure.

Name ____________________

Address ____________________

____________________



**UNIT TRUST OF INDIA** H.O. Bombay

(A Public Sector Financial Institution)

**Regional Office :**
45, Second Line Beach,
Madras 600 001.
Phone : 587433/580938

**Our Chief Representatives in Tamil Nadu**

☐ COIMBATORE • **A. Dhanabal,** Ph: 34776 ☐ MADURAI • **M. Ramamoorthi,** Ph : 36661, 43179 ☐ THANJAVUR • **K. Muthusamy,** Ph: 20374 ☐ SALEM • **N.K. Inkarsal,** Ph : 66414, 51520 ☐ TRICHY • **M. Ramalingam,** Ph: 41282 ☐ NORTH ARCOT • **P. Narayanan,** Ph : 21575 (Vellore) ☐ SOUTH ARCOT • **S. Balakrishnan,** Ph : 546, 46 (Cuddalore) ☐ KANYAKUMARI • **S. Subhas Chandra Bose,** Ph : 4449 (Nagercoil) ☐ NILGIRIS • **M. Madhavan Nambiar,** Ph : 6253, 7037 (Coonoor) ☐ PERIYAR • **K. Jyothi Ramalingam,** Ph :74958, 74785 (Erode)

* 15 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு மட்டுமே CGGF பரிசு அளிக்க முடியும். பரிசுத்தொகை மற்றும் பெறும் குழந்தையின் வயது இவற்றைப் பொறுத்து இட்ட முறையில் அளிக்கப்படும் தொகை வேறுபடும்.

Sista's – UTI.1188.89.TM B



நாங்கள் தற்போது ''முதியோர் இல்லம்'' ஒன்று கட்டி முடித்துள்ளோம். மத்திய தரத்தைச் சேர்ந்த 20 ஆண் பெண் தங்கலாம். ஓர் அறைக்கு இரண்டு பேர் விதம் 10 அறைகள் பாத் அட்டாச்டு அறைகள் சகல வசதிகளுடன், ஒரு பொதுக் கூடடமும் உள்ளது. இங்கு டி. வி., படிக்க — பத்திரிகைகள், நூல்கள் முதலியனவையும் உள்ளன.

58 வயதுக்கு மேற்பட்ட ஆண், பெண் இரு பாலரும் தங்கலாம். இவர்களின் பழைய துன்பங்களை மறந்து புதிய அமைதியான வாழ்க்கையைத் தொடர நாங்கள் முயற்சிப்போம்.

உணவு, இருப்பிடம், மருந்து எல்லாம் சேர்ந்து மாதம் ரூ. 400/— எனக் கட்டணம் வைத்துள்ளோம்.

— ஷிரீன் ஹஸ்ரத்,
செயலாளர்,
காஜாமலை மகளிர் மன்றம், திருச்சி.

கட்டில் நடுவில் உட்கார்ந்திருந்த பானு ''அம்மா....!'' என்று மெதுவாகக் கத்தினாள். பற்களைக் கடித்துக் கொண்டாள். கண்களை மூடிக் கொண்டாள். முன்பக்கம் சற்றுச் சாய்ந்து கட்டிலின் கம்பியைப் பிடித்துக் கொண்டு கைகளை முறுக்கிக் கொண்டாள்.

''என்னடி பானு... ரொம்ப வலிக்கிறதாடி...'' என்று இந்து ஓடிப் போய் பானுவின் முதுகைப் பிடித்துக் கொண்டாள்.

''இப்படித்தான் இருக்கும். இன்னும் இருக்கே... இதுதானே ஆரம்பம்...?''

சித்தி பானுவின் அருகில் உட்கார்ந்து கொண்டு வயிற்றில் மெதுவாக நீவிக் கொடுத்தாள். அப்பா வெளியே போய் உட்கார்ந்து கொண்டார். ''நான் போய் டாக்டரைக் கூப்பிடட்டுமா?'' என்று இந்து எழுந்தாள்.

''இப்போ நர்ஸ்கூட வர மாட்டாள். இன்னும் நிறைய வலிக்கணும். நீ அப்படியே உட்கார்ந்துக்கோ...''

நாலைந்து நிமிஷ வேதனைக்குப் பிறகு பானு சாதாரணமானாள். மெதுவாகச் சிரித்தாள். ஐந்து நிமிஷத் துடிப்பும் அதற்கு ஐந்தாவது நிமிஷம் சிரிப்புமாக மாறி மாறி அரை மணிக்கு ஒரு தடவை வலி வந்து வந்து நின்றது. நர்ஸ் ஒருத்தி உள்ளே வந்து பார்த்து விட்டு ''ராத்திரி பத்து மணிக்கு மேலே ஆவும்மா'' என்றாள்.

''ராத்திரி பத்து மணிக்கு டாக்டர் இங்கேயே இருப்பாரா?''

''டாக்டர் வீடு அடுத்த காம்பவுண்ட் தானே? ஃபோனிலே கூப்பிட்டா உடனே வந்திடுவாங்க. எப்பக் கூப்பிடணும்னு எங்களுக்குத் தெரியும். நீங்க எல்லாரும் போய் சாப்பிட்டு விட்டு வந்துடுங்க. ராத்திரி இவங்க அம்மாவும் இன்னும் ஒருத்தரும் இருந்தா போதும்'' என்றாள் நர்ஸ்.

இந்து அறைக்கு வெளியே வந்தாள். அடுத்த அறைக் கதவு பாதி திறந்திருந்தது. பிரசவம் ஆன பெண் ஒருத்தி நைட்டியோடு கட்டிலில் உட்கார்ந்திருந்தாள். அருகில் உள்ள தொட்டிலில் சின்னக் குழந்தை தெரிந்தது.

அடுத்த அறை வாசல் பக்கம் நடந்து கொண்டிருந்த போது வெளியிலிருந்து பானுவின் மாமனாரும் மாமியாரும் பரபரப்போடு உள்ளே வந்து கொண்டிருப்பதை இந்து பார்த்தாள்.

''டெலிவரி ஆயிடுத்தா....?'' என்று கேட்டுக் கொண்டே கிட்டத்தட்ட ஓட்டமாக வந்தார்கள்.

''இன்னும் இல்லை. ராத்திரி பத்து மணி, பதினோரு மணி ஆகுமாம். நர்ஸ் சொன்னாள்.''

அவர்களோடு இந்துவும் திரும்பி உள்ளே வந்தாள். பேசிக் கொண்டிருந்த பானு, மாமனார் மாமியாரைப் பார்த்ததும் அந்த நிலையிலும் எழுந்திருக்க முயற்சி செய்தாள்.

''உக்காரும்மா, உக்காரும்மா. வலி இருக்கா? ரொம்ப வலிக்கிறதா....?''

''விட்டு விட்டு வரது. ராத்திரி பத்து மணி ஆகுமாம்...''

''ரொம்ப கவலையாக இருக்கு. தாயுமான சுவாமிதான் குழந்தையையும் தாயையும் காப்பாத்தித் தரணும்'' என்று சொல்லிக் கொண்டே மாமனார் சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்த சிறிய பொட்டலத்தைப் பிரித்து விபூதியை பானுவுக்கு இட்டார் மாமியார்.

''உக்காருங்கோ...'' என்று அப்பா சம்பந்தியை உபசாரம் செய்ய, ''இருக்கட்டும்'' என்று அவர் உட்கார்ந்தார்.

''இப்படித்தான் என் ஓர்ப்படி தங்கைக்குப் போன வருஷம் அட்மிட் பண்ணி ஒரு நாள் ராத்திரி முழுக்க இருந்து காலை நாலு மணிக்குப் பிறந்தது'' என்றாள் சம்பந்தி அம்மாள்.

பானு மறுபடியும் பல்லைக் கடித்துக் கொண்டாள். கண்களை அழுத்தமாக மூடிக் கொண்டு அம்மா என்றாள். கைகள் தாமாகக் கட்டிலின் பிடியை நாடின.

ஊறுகாய் பாட்டில்களில் சில சமயம் பூஞ்சைக் காளான் படிந்திருக்கும். இதை அகற்றிவிட்டுச் சாப்பிடுபவர்கள் நிறையப் பேர் உண்டு. இது கொடிய நச்சுத் தன்மையுள்ளது. எனவே, பூஞ்சைக் காளான் சுற்றிய எதையும் சாப்பிடக் கூடாது.

— ஆற்காடு எழிலன்.

''அம்மா... அம்மா...'' என்று நவித்துத் துடித்தாள்.

''அம்மாடி, ரொம்ப வலிக்கிறதாம்மா...? கொஞ்ச நாழி பொறுத்துக்கோ. நாங்களெல்லாம் பட்டதுதானேம்மா. நாளைக்குக் காலம்பற ராஜா மாதிரி குழந்தையைக் கொஞ்சலாம். இப்ப கொஞ்சம் பொறுத்துக்கோம்மா'' என்று ஆதரவுடன் பானுவின் முதுகைத் தடவிக் கொண்டே கன்னத்தையும் வழித்தாள் மாமியார்.

''பேரன்தான் பிறக்கும். முகம் களை கட்டியிருக்கு'' என்றாள் பக்கத்து வீட்டு மாமி.

''பேரனோ, பேத்தியோ, நல்லபடியா தாயும் குழந்தையும் வேறே ஆனால் போதும்...

''மாப்பிள்ளைக்கு ஃபோன் பண்ணிட்டேனோ...?''

''சந்துருவும் நேரே ஆபீசிலேருந்து வரான். நீயும் வாடா, பானுவுக்கு தைரியமாக இருக்கும்னேன். இதோ வந்துட்டானே...

மாப்பிள்ளை சந்துரு வந்தான். எல்லோரும் கூட்டமாக இருந்ததால் கொஞ்சம் தயங்கினான். பிறகு கட்டிலின் அருகில் போய் பானுவின் முதுகைத் தடவிக் கொடுத்தான்.

அரை மணி நேரம் கழித்து நர்ஸ் உள்ளே வந்தாள். பானுவின் கையைத் தொட்டுப் பார்த்தாள். அறையில் இருந்த கூட்டத்தைப் பார்த்து விட்டு ''எல்லாரும் இப்படிப் பேசிக்கிட்டிருந்தீங்கன்னா, பாப்பாவும் உம், உம்னு கேட்டுக்கிட்டே இருக்கும். கதை கேக்கிற சுவாரசியத்திலே தூங்கிப் போயிடும்! அப்புறம் நாளைக் காலையிலே தான் பிறக்கும்...!''

ஒவ்வொருவராக வெளியே வந்தார்கள்.

**ம**றுநாள் மாலை வரை சரியான வலி எடுக்கவில்லை. வலி எடுக்க வேண்டும் என்று இஞ்சக்ஷன் போட்டு விட்டுப் போனாள் நர்ஸ். ''இன்னும் கொஞ்ச நேரத்திலே உள்ளே அழைச்சிக்கிட்டுப் போய் ட்ரிப்ஸ் கொடுக்கப் போறோம்மா'' என்றாள்.

இந்து வீட்டுக்குப் போகவே இல்லை. அங்கேயே குளித்தாள். அப்பா கொண்டு வந்த சாப்பாட்டை வேண்டா வெறுப்பாகச் சாப்பிட்டு வைத்தாள். காலையா, பிற்பகலா, மாலையா என்று தெரியாமல் பானுவின் அருகிலேயே உட்கார்ந்து கொண்டு அவள் வலியைப் பாதி இவள் அனுபவித்தாள்.

ஆறு மணிக்கு பானுவை லேபர் வார்டுக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். ஒரே நாள் வலியில் பானுவின் முகம் களை இழந்து போயிருந்தது. நேற்று இருந்த வயிறு அடிப்பக்கம் சாய்ந்து, தொய்ந்து போய் ஒட்டிக் கொண்டு நின்றது. நடக்க முடியாமல் நடந்த போது ஒரு பக்கம் அம்மாவும் ஒரு பக்கம் மாமியாருமாகப் பிடித்துக் கொண்டார்கள். அவள் உள்ளே போய்க் கதவைச் சாத்தியான உடன் மாமியார் கண்களில் நீர் பொங்க ''தாயுமானவா! பக்கத்திலே இருப்பா. இந்த மாசமே சந்நதிக்கு வரேம்பா. தாயையும் குழந்தையையும் நல்லபடியாகக் காப்பாத்து'' என்று உருகினாள். இந்து அவரைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்து நாற்காலியில் உட்காரச் செய்தாள்.

அரை மணி... நிமிஷங்கள் ஓட மறுத்தன. அப்பாவும் மாமனாரும் நீண்ட வராந்தாவில் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடி வரை எதிரும் புதிருமாக நடந்து கொண்டே இருந்தார்கள். சந்துருவிடமிருந்து பேச்சே இல்லை. அம்மாவும் மாமியாரும் சுலோகம் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

கதவை வேகத்துடன் திறந்து கொண்டு ஒரு நர்ஸ் வந்தாள். உள்ளேயிருந்து திறந்த கதவு வழியாக ஒரு கணம் ''அம்மா... அம்மா...'' என்ற பானுவின் ஓலம் கேட்டது. வேகமாக வெளியேறிய நர்ஸ் அடுத்த அறைக்குச் சென்று எதையோ எடுத்துக் கொண்டு அதே வேகத்தில் வந்து கதவைத் திறந்து கொண்டு உடனே சாத்திக் கொண்டாள்.

அந்தக் கதவு மறுபடியும் திறக்கப்படப் போகும் கணத்தை எதிர்பார்த்தபடி அவர்கள் ஒவ்வொரு கணமும் உள்ளே இருப்பவளின் வேதனையைப்பட்டுக் கொண்டிருக்க,

கதவு திறந்தது. ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கும் ஐந்தாறு பேர்களையும் திரும்பிக் கூடப் பார்க்காமல் ஒரு நர்ஸ் வேகமாக டாக்டரின் அறைக்குச் சென்றாள். அவள் திரும்பிக் கையில் ஒரு மருந்துடன் அதே வேகத்தில் வரும் போது வழியை மறித்துக் கொண்டார் அப்பா. ''எப்படி இருக்கு சிஸ்டர்...?''

நர்ஸ் ஒரு கணம் தயங்கினாள். ''ரொம்ப சிரமப்படறாங்க. சிசேரியன் பண்ணலாமான்னு டாக்டர் நினைக்கிறார். அவரே வெளியே வந்து உங்ககிட்டே சொல்வார்...''

இடி விழுந்தது மாதிரி இருந்தது. ஆறு மாதங்களாக டாக்டர் மாற்றி டாக்டராகக் காண்பித்துக் கொண்டு வந்தபோதெல்லாம் ஒருவர் தவறாமல் ''பொசிஷன் எல்லாம்

சரியாக இருக்கு. கவலையேபடாதீங்க. நார்மல் டெலிவரிதான்'' என்று சொல்லி விட்டு இப்போது.... ''ஈசுவரா... கை விட்டு ருவியா....? வேண்டாம்பா... என்ன தப்பு பண்ணியிருந்தாலும் மன்னிச்சுக் குழந்தை யைக் காப்பாத்தப்பா...!''

கணங்கள் யுகங்களாயின. யாருமே பேச வில்லை. ஒருவர் முகத்தைக் கூட மற்றவர் பார்க்கவில்லை. எல்லோருக்குமே நெஞ்சம் முழுவதும் பயம் அப்பியிருந்தது.

கதவு திறந்தது. டாக்டர் மெதுவாக வந்தார். அவர் முகமே ஓய்ந்து போய்க் களைப்புடன் இருந்தது. ''பெண்ணோட ஃபாதர் யாரு? நீங்களா...? ஷி ஹேஸ் பீன் ஸ்ட்ரக்ளிங் பார் தி பாஸ்ட் ஒன் அவர்... குழந்தை வெளியே வர 'பாத்' போற வில்லை. சிசேரியன் பண்ணுவதுதான் தேவலை என்று நினைக்கிறேன்...''

''என்ன வேணும்னாலும் பண்ணுங்க டாக்டர்...! குழந்தையைக் காப்பாத்துங்க டாக்டர்...!''

டாக்டர் உள்ளே திரும்பினார். அப்பா நாற்காலியில் பொத் என்று விழுந்தார். கண்களில் கண்ணீர் தளும்பியது. இந்து அப்பாவின் கையைப் பிடித்துக் கொண் டாள். ''என்னப்பா இது. மெடிகல் சயின்ஸ் எவ்வளவு அட்வான்ஸ் ஆகியிருக்கு...? அடுத்த அறையிலே இருக்கிற பெண்ணுக் குக்கூடத்தான் சிசேரியன் பண்ணிக் குழந் தையை எடுத்திருக்கிறார்கள். நேற்றுதான்... இப்ப இது ரொம்பவும் சாதாரணம்ப்பா...''

''அவளுக்கெல்லாம் சிசேரியன்தான்னு முன்னாடியே தீர்மானம் பண்ணி அதற்கு ரெடியாக இருந்தாங்கம்மா. குழந்தை ரெண்டு நாளாக வலியால் தவிக்கிறாள் சார்...'' என்று அருகில் வந்த பானுவின் மாமனாரின் கையைப் பிடித்துக் கொண் டார் அப்பா.

அம்மா அருகில் வந்தாள். ''நீங்க என்ன குழந்தை மாதிரி இப்படி கலங்கறேள்...? நானே கலங்காம இருக்கேன்... தைரியமாக இருங்கோ...'' என்றாள்.

நேரம் ஊர்ந்தது. வெளியே கார் திறந்து மூடும் சப்தம் கேட்டது. ''அனஸ்தீஷியன் வந்து விட்டார்'' என்று யாரோ சொன் னார்கள். ஐந்தாவது நிமிஷம் ஆபரேஷன் போது கூட இருக்க இன்னொரு டாக்டர் அவசரம் அவசரமாக நடந்து வந்து உள்ளே போனார். அவரைத் தொடர்ந்து இன் னொரு டாக்டர்...'' சைல்ட் ஸ்பெஷ லிஸ்ட்...''

தொடர்ந்து ஆக்ஸிஜன் சிலிண்டரைத் தள்ளிக் கொண்டே உள்ளே போனார் உதவியாளர். அந்த ஒரு கணம் கதவு திறந் திருந்த வேளையில் உள்ளேயிருந்து பானு வின் குரல் அடங்கி ஒலித்துக் கொண்டிருந்த மாதிரி கேட்டது.

நாலைந்து டாக்டர்களையும் ஆக்ஸிஜன் சிலிண்டரையும், பச்சை நிற ஆபரேஷன் அங்கிகள் பூண்ட நர்ஸ்களையும் என்று பார்த்ததில் இத்தனை நேரமாக இருந்த கவலையும் பயமும் நூறு பங்காகப் பெரு கியது.

உள்ளே, ஒரு ஜீவன் உடலிலிருந்து வெளியே வர முடியாமல் தவிக்க, அதை வெளியேற்றும் முயற்சியில் தன் சக்தி போதாமல் தாய் ஜீவன் துடிக்க, அந்த வேதனைகளை இங்கே வெளியே ஐந்து ஜீவன்கள் சேர்ந்து ஒட்டு மொத்தமாக அனுபவித்துக் கொண்டிருந்தன.

இருபது நிமிஷங்கள்... இருபது யுகங் கள்...

கதவு மெதுவாகத் திறக்கிறது. பச்சை நிற முழு அங்கியில் மறைத்துக் கொண்ட ஒரு நர்சின் முகம் மாத்திரம் தெரிகிறது. அவள் முகம் மெலிதாகச் சிரிப்பது மாதிரி தெரிகிறது. ஆண்டவா...!

''குழந்தை பிறந்திடுச்சு... ஆம்பிளைப் பிள்ளை...!''

''அம்மா எப்படி இருக்குது சிஸ்டர்...? பயம் ஒண்ணும் இல்லையே...?''

''நல்லா இருக்குது. அழுவாதீங்க. ஏன் அழுவணும்? ஒண்ணுமில்லே.''

''குழந்தை எப்படி இருக்கு சிஸ்டர்....? சரியாக இருக்கா...?''

''நல்லா இருக்கு...'' நர்ஸ் கதவை மூடிக் கொண்டு விட்டாள்.

அப்பாவும் அம்மாவும் விக்கி விக்கி அழு கிறார்கள். இந்து மாற்றி மாற்றி அவர்கள் கைகளைப் பிடித்துக் கொள்கிறாள். சம்பந்தி அம்மாவும் அவரும் அம்மாவிட மும் அப்பாவிடமும் வந்து உட்கார்ந்து மெலிதாகச் சிரிக்கிறார்கள்.

ஐந்து நிமிஷம் ஆனதும் நர்ஸ் ஒரு துணியில் சுற்றி வைத்துக் குழந்தையை எடுத்து வந்து காண்பித்தாள். செக்கச் செவேல் என்று சின்னக் கைகளும் காலும்... தலையில் கொஞ்சமாகக் கறுப்பு ஒட்டம்... முனிபுங்கவர் தபஸ் செய்கிற மாதிரி கண்களை மூடிக் கொண்டு...

''குழந்தை பெரிசாக இருக்கு... அதுதான் அத்தனை சிரமம்பட்டிருக்கா.''

''குழந்தை அழுதுதோ சிஸ்டர்...?''

''ஓ... நல்லா....'' நர்ஸ் திரும்பி உள்ளே போய் விட்டாள்.

இரண்டு நாட்களாக ஊதிய பலூன் மாதிரி பெரிதாக வளர்ந்து கொண்டிருந்த பயமும் கவலையும் மனத்திலிருந்து இறங்க மனம் வெறுமையாகிறது. அரை மணி நேரம் கழித்து டாக்டர் கம்பீரமாக வெளியே வந்தார். கைகளைத் துடைத்துக் கொண்டே அவர் நடந்து வரும் போது ஒரு தேவதை பூமியில் இறங்கி நடந்து வருவது மாதிரி இருந்தது. இத்தனை நாட்களாகப் பார்த்திருந்த டாக்டரின் முகத்தில் இப்

பழைய நைலான் சாக்ஸ்களைப் பாத் திரம் தேய்க்க உபயோகித்தால், பாத்திரங் கள் கீறல் விழாமல் இருப்பதோடு, பளிச் சென்றும் இருக்கும்.

— கௌரி.

போது ஒரு அழகும் கம்பீரமும் வந்து உட்கார்ந்திருந்தது மாதிரி இருந்தது. வந்து கொண்டிருந்தபோதே அப்பாவைப் பார்த்து "யோத் மதர் அண்ட் சைல்ட் ஆர் கொயட் ஆல்ரைட்..." என்று சொல்லி விட்டு நடந்தார்.

"டாக்டர்... நீங்கதான் தெய்வம் மாதிரி..."

டாக்டர் மெலிதாகச் சிரித்தபடியே நடந்தார்.

சரியாக இருபத்து நான்கு மணி நேரம் சென்ற பிறகு மறுநாள் இரவு... முதல் நாள் இரவு முழுவதும் இன்றைய பகலிலும் இந்துவும் அம்மாவுமாக கட்டிலை விட்டு நகராமல் மாற்றி மாற்றி பானுவைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தார்கள். காலையில் மயக்கம் தெளிந்து விட்டாலும் இன்னும் ட்ரிப்ஸ் ஏறிக் கொண்டிருந்ததால் பானு மயக்க நிலையிலேயே இருந்தாள்.

மாலை ஆக ஆக, பானுவின் வீட்டிலிருந்தும் இந்த வீட்டிலிருந்தும் ஒவ்வொருவராக வர அறை முழுவதும் கூட்டம். எல்லார் முகத்திலும் மாற்றி மாற்றிச் சிரிப்பு. ஐந்து நிமிஷத்துக்கொரு தடவை ஒருவர் மாற்றி ஒருவர் சின்னத் தொட்டியில் தூங்கும் குழந்தையைப் பார்த்து விட்டு வந்து "மூக்கு எப்படித்தான் அப்படியே மாமனாரைக் கொண்டிருக்கோ.... கண் மாத்திரம் பானுவோடது மாதிரியே இல்லே....?"

முதல் நாள் இரவு அந்த நேரத்தில் இருந்த மனநிலை அத்தனை பேருக்கும் மறந்து போய் விட்டது.

எட்டுநாட்களும்நர்சிங் ஹோமிலேயே பானுவின் பக்கத்தில் உட்கார்ந்து படித்துக் கொண்டும், தூங்கிக் கொண்டும் இருந்தாள் இந்து. பொழுது போகாமல் சிந்தனை எங்கெங்கோ போய்த் தன்னைப் பற்றியும் ராமலிங்கத்தைப் பற்றியும் நினைத்த போது இதுவரை அவள் மனத்தைத் தொட்டிராத ஒன்று மனத்தில் புகுந்து அவளை ஆட்டி வைத்ததை உணர்ந்தாள். இரண்டு மூன்று நாள் யோசித்து விட்டு ராமலிங்கத்துக்கு எழுத ஆரம்பித்தாள்.

"இந்த லெட்டர் உங்களுக்கு ஆச்சரியமாகவும் அதிர்ச்சியாகவும் கூட இருக்கும். எனக்குச் சொல்லத் தெரிந்த முறையில் சொல்கிறேன். என்னைப் புரிந்து கொள்வீர்கள் என்று நினைக்கிறேன்.

போன வாரம் வரை என் மனசைத் தொட்டிராத ஏதோ ஒன்று இப்போது என்னை மாற்றி விட்டது, ராமலிங்கம். இதுவரை அப்பாவிடமிருந்து அன்பு, அம்மாவிடமிருந்து அன்பு, இப்போது புதிதாக உங்கள் அன்பு என்று அனுபவித்து வந்திருக்கிறேன். நம்மிடையே தோன்றியதாக நான் நினைத்த அன்பு, இந்த உலகத்தில் மற்ற எல்லோருடைய அன்பையும் வெறுப்பையும் கூடத் துச்சமாக நினைக்கக் கூடிய சக்தி வாய்ந்தது என்று நினைத்திருந்தேன். ஆனால் இவை எல்லாவற்றையும் விட மேலான ஒன்றை இப்போது கண்முன் பார்க்கிறேன். ஒப்பிட முடியாத அந்த அன்பு, தாய்மை. தாய்மை என்பது தாய்க்கு மாத்திரம் இருக்கக் கூடியதில்லை. பானுவின் வலியை எவ்வளவு பேர் தாங்கிக் கொண்டோம்! அப்பாவும் அம்மாவும் அன்றைக்கு முழுவதும் சரியாகச் சாப்பிடாமல் கூட, ராத்திரி தவித்த தவிப்பு பெரிதில்லை. பானுவின் மாமனாரும் மாமியாரும் தவித்த தவிப்பை ஒரு ஆச்சரியத்துடன் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். எத்தனை சுவாமிக்கு எத்தனை வேண்டுதல்கள்!

பானு பட்ட வேதனை இருக்கிறதே, அப்பா! — நரக வேதனை அவளுக்கு மாத்திரம் இல்லை. கூட இருந்த அத்தனை பேருக்கும். ஆனால் குழந்தையின் முகத்தைப் பார்த்தவுடன் அத்தனை பேரும் எப்படி மாறிப் போய் விட்டார்கள்! குழந்தை... அதை நீங்கள் பார்க்க வேண்டும், ராமலிங்கம். சின்னச் சின்ன கைகள். அதில் எத்தனை நீண்ட விரல்கள் தெரியுமா...?

குழந்தையை முதன் முதல் பார்த்ததும் எனக்குத் தோன்றியது, வாழ்க்கை என்பது இரண்டு பேர் மாத்திரம், அவர்களின் சந்தோஷம் மாத்திரம் சம்பந்தப்பட்டதில்லை. மூன்றாவது நபர் முழுமையாக ஆக்கிரமிக்கும் தாய்மைதான் வாழ்க்கை.

இந்த மாதிரி நான் வலியால் துடிக்கும் போது என் வலியில் பங்கு கொள்ள என் அம்மா வருவாளா? "உன் சந்தோஷம்தான் முக்கியம்னுதானேடி எங்களை லட்சியம் செய்யாமல் ஓடினே? இப்ப நான் வந்து என்ன பண்ணப் போகிறேன்?" என்று ஒதுங்கிக் கொண்டு விடுவாளோ? ஒரு நாள் முழுவதும் மனசுக்குள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்த அப்பாவின் உணர்ச்சிகள், என் அந்த நேரத்தில் இப்போது பானுவுக்கு இருந்த மாதிரியே இருக்குமா....? பானுவின் மாமனாரும் மாமியாரும் நாள் முழுவதும் நர்சிங் ஹோமிலேயே இருந்த மாதிரி உங்கள் அப்பா அம்மா இருப்பார்களா...?

இது மட்டுமேயில்லை. வளரும் அடுத்த சந்ததியினருக்கு அத்தை, மாமா, தாத்தா, பாட்டி என்ற சுவாதீனமான சொந்தம், பாசம் கிடைக்குமா? நம் சந்தோஷம் காரணமாக அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய குடும்ப அமைப்பு கிடைக்காமல் போய் விடுமா?

எனக்குத் திடீரென்று பயமாக இருக்கிறது ராமலிங்கம். நாம் செய்த தீர்மானம், இன்றைக்கு நமக்கு சந்தோஷமாக இருக்கலாம். நாளைக்கு இன்னொரு உயிர் வந்து என்னைக் கேள்வி கேட்டால்...?

என் மனம் கலங்கிப் போய் விட்டது. என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்.

இந்து

எங்களின்
இதயபூர்வமான
வேண்டுகோள்!
போலிகளினால்
நீங்கள்
ஏமாறாதீர்கள்!!

25வது
ஆண்டு
வெள்ளி
விழா!






டில்டிங் வெட்கிரைண்டர்கள்





தயாரிப்பாளர்கள் :

**ஸ்ரீ லக்ஷ்மி இண்டஸ்ட்ரீஸ்**

56, தேவாங்க உயர்நிலைப் பள்ளி ரோடு
(அர்ச்சனா தியேட்டர் அருகில்)
கோயமுத்தூர் - 641 002
போன் : 48689
தந்தி : "பெஸ்ட் கிரைண்ட்"

**அங்கீகரிக்கப்பட்ட எங்கள் டீலர்களிடம் மட்டுமே வாங்குங்கள்.**

**MADRAS**
- **VIVEK & CO.,** R.H. Road, Ph : 76923, 75661.
- **VIVEK & CO.,** P.H. Road, Ph : 662462
- **VIVEK & CO.,** T. Nagar, Ph : 444129
- **RATHNA STORES,** 47, Pondy Bazaar, Ph : 442952
- **SUGUNA AGENCIES,** 160, Linghi Chetty St., Ph : 585558
- **SARASVATHI AGENCIES,** 40, Sembudoss St., Ph : 527932
- **TOWER POINT,** Anna Nagar.

**PONDICHERRY**
- **DING-DONG ,** Ph : 23116

**VELLORE**
- **REJYO TRADERS,** Ph : 21646

**TANJORE**
- **NEW MODERN RADIO SERVICE,** Ph : 20688
- **MODERN RADIO SERVICE,** Kumbakonam, Ph : 20017

**TRICHY**
- **R.M.H. CORPORATION,** Ph : 26092
- **LAXMI CORPORATION,** Fort Station Road, Ph : 32792

**VILLUPURAM**
- **EAGAMMAI AGENCIES,** Ph : 2326

**KALLAKURICHY**
- **GANAPATHY CORPORATION,** 5-A, Salem Main Road

**TUTICORIN**
- **SHANTHI STORES,** Ph : 21081

**SALEM**
- **NIPPAN FURNITURE,** Ph : 63451.

**KARUR**
- **VEE VEE ENTERPRISES,** Ph : 22111

**MANAPARAI**
- **IDHAYAM ELECTRONICS,** Ph : 290

**TIRUVANNAMALAI**
- **VASAVI TRADERS,**

**COONOOR**
- **VARIETY HALL AGENCIES,** Ph : 6677

SASI / SLI / 2 / 89

# புக் ஷெல்ஃப்

**முத்துஸ்வாமி தீக்ஷிதர் கீர்த்தனைகள்**

479 கீர்த்தனைகளுக்குச் சுத்த சாஹித்யம், தமிழ் உரையுடன், வேங்கடமகி மேள கர்த்தா விவரங்களுடன் உள்ளது.

விலை ரூ. 100.00

(மியூசிக் புக் பப்ளிஷர்ஸ், 9, நடுத் தெரு, மைலாப்பூர், சென்னை — 4.)

**ஆனந்த இராமாயணம்**

பாராயண முறைகளுடன் — விவாஹ காண்டம், இரண்டாம் பாகம் (யாத்ரா, யாக, விலாஸ, ஜன்ம காண்டங்கள்), ஸார காண்டம், இராஜ்ய காண்டம், ஐந்தாம் பாகம் (மனோஹர, பூரண காண்டங்கள்). விலைகள் முறையே ரூ. 8.75, 23.00, 20.00, 20.00, 45.00.

(கிரி டிரேடிங் ஏஜென்ஸி, 10, திருக் கபாலீஸ்வரர் சன்னதி தெரு, மயிலாப்பூர், சென்னை — 4.)

**உயர் மனிதனை உருவாக்கும் குணங்கள்**

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தியின் உற்சாகமூட்டும் கட்டுரைகள்.

விலை ரூ. 10.00

(வானதி பதிப்பகம்).

**அணுவிற்குள் அதிசயங்கள்**

விஞ்ஞானத்தில் ஆர்வமுள்ளவர்கள், படிக்க வேண்டிய தமிழில் விஞ்ஞானக் கட்டுரைகள், ஆசிரியர் திரு. சம்பந்தம் (கங்கை)

விலை ரூ. 10.00

**அவசியமான 600 மருத்துவக் குறிப்புகள்**

காதில் புண், மாதவிலக்கு, வயிற்று வலி போன்றவற்றிற்கு மருந்து சொல்பவர் சம்பந்தம் (வானதி)

விலை ரூ. 12.00

(வானதி/கங்கை பதிப்பகம் — 13, தீன தயாளு தெரு, தி. நகர், சென்னை — 17.)

**அழகுக் குறிப்புகள் 1000**

யோசனைகளைக் கூறுபவர் ப்ரியா பாலு. (விசாலாட்சி).

விலை ரூ. 9.50

**ஸ்தோத்ர சுதம்பம்**

நித்ய பூஜைக்கு — தொகுப்பு: எஸ். நாகசாமி (விசாலாட்சி).

விலை ரூ. 6.00

(விசாலாட்சி நிலையம், 10, காசிம் சாகிப் தெரு, சென்னை — 14.)

**ஸ்ரீ ஆஞ்சனேய வைபவம்**

ஆஞ்சனேயரைப் பற்றிய கதைகள், நாமாவளி — தொகுப்பு: ஆர். ஜவந்திநாதன்.

விலை ரூ. 2.50

(பவானி புக் சென்டர், ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை — 33.)

**வேடர் குலத் தோன்றல்கள்**

வேடர் குலத்தில் பிறந்த பல பக்திமான்களின் கதைகள். தொகுப்பு: கே. சந்தானராமன்.

விலை ரூ. 7.50

(3, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை—4.)

**தேவி ஸ்தோத்திர மாலா**

ஐம்பத்து மூன்று ஸ்தோத்திரங்கள். தொகுப்பு: தெ. சி. தெய்வ சிகாமணி (பைலட்)

விலை ரூ. 10.00

**ஸ்ரீ துர்க்கா சந்திரகலா ஸ்துதி**

அருள் உரை ஸ்ரீ துர்க்கைச் சித்தர்

விலை ரூ. 6.00

(பைலட் பப்ளிகேஷன்ஸ், 309, லிங்கி செட்டித் தெரு, சென்னை — 1.)

**சித்திரவல்லி**

சோழர் ஆட்சிக் காலத்து நாவலைச் சிறப்பாக எழுதி இருப்பவர் விக்கிரமன் (விக்கிரமன் பதிப்பகம்)

விலை ரூ. 22.50

**சொல்காத்த சேதுபதி**

இலக்கிய, சமூக, சரித்திர, சாகச நாட

கங்கள். ஆசிரியர்: விக்கிரமன்.

விலை ரூ. 11.25

(விக்கிரமன் பதிப்பகம், 2, ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை — 33.)

**பல்வேறு வைபவங்களுக்கான வாழ்த்துக் கவிதைகள் எழுதுவது எப்படி?**

(மணிமேகலை)

விலை ரூ. 13.00

**புரட்சி இயக்குனர் பாரதிராஜா**

திரைப்படத் துறையில் முன்னேற விரும்புபவர்கள் படிக்க வேண்டிய புத்தகம் (மணிமேகலை).

விலை ரூ. 22.00

**சட்டச் சொல் அகராதி**

(மணிமேகலை)

விலை ரூ. 21.00

**வைட்டமின்களும் அவற்றைப் பெறும் முறைகளும்**

பெண்கள் படிக்க வேண்டிய புத்தகம் (மணிமேகலை)

விலை ரூ. 7.50

**தமிழ்நாட்டில் வீடு கட்டுபவர்களுக்கான புதிய விதிகள்**

விலை ரூ. 9.00

(ஐந்தும் — தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு — மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எண் 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை — 17.)

**உங்கள் குடும்பத்தைப் பராமரிப்பது எப்படி?**

அறிவுரை சொல்பவர் வைத்தியமணி இரத்தின சண்முகனார். (அருணோதயம்)

விலை ரூ. 8.00

**நோய் தீர்க்கும் உணவு முறைகள்**

ஆசிரியர் இரத்தின சண்முகனார். (அருணோதயம்)

விலை ரூ. 18.00

**தையற்கலை**

பெண்கள், சிறுவர், சிறுமியர் உடை ஆசிரியர் பி. மோகனாம்பாள். (அருணோதயம்)

விலை ரூ. 5.00

(அருணோதயம், 13, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை — 14.)

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்: பிற மாநில உணவு.** **கடைசித் தேதி: 15.9.89.**

## சமையல் கூப்பன்

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# பிஸ்கட் தயாரிப்பில் தனித்தன்மை
# அது ஆங்கிலேயப் பாரம்பரியத்தின் அருமை!
# அதைப் புதிதாக்கித் தந்திடும் திறமை
# கிஸானின் அரியதொரு இனிமை!



தேனீர் அருந்தும் மாலை வேளையில் பிஸ்கட்டுகள். இங்கிலாந்து 1880.



**கிஸானின் பிரத்யேகமான தர உத்திரவாதம்**

கிஸானிடமிருந்து எதிர்பார்க்கும் தரத்தை விட இந்த பிஸ்கட்டுகளின் தரம் குறைவாக இருந்தால் நீங்கள் வாங்கிய விலையின் தொகையை திரும்பப் பெறலாம். பாக்கெட்டுடன் பிஸ்கட்டுகளை கீழ்க்காணும் விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். கிஸான் புராடக்ட்ஸ் லிட்., பெங்களூர்-560 016

**பிரத்யேகமான சலுகை!**
**முந்துங்கள்!**

# ரூ.10/-மிச்சம் *

இதோ 20 கூப்பன்கள். ஒவ்வொரு கிஸான் பிஸ்கட் பாக்கெட்டுக்கும் 50 பை சலுகை பெற்று ரூ. 10/- மிச்சப் படுத்தலாம்.

* சலுகை 31.10.89 வரையிலுமே. கிஸான் பிஸ்கட்டுகள் சலுகை இல்லாமலும் கிடைக்கின்றன.

**பிரத்யேகமான சலுகை! முந்துங்கள்!**

Cut here

| | |
|---|---|
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |
| 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS | 20 50P. OFF அதிக பட்சம் தள்ளுபடி 50 பை. ஒரு பாக்கெட்டுக்கு மட்டுமே! KISSAN BISCUITS |

Cut here



பண்டைக் காலம்! ஆங்கிலேய இல்லத்தரசிகள் ஈடுபாட்டுடன் பிஸ்கட் தயார் செய்யும் அந்தக் காலம்... அவர்களுடைய பாணியே தனி. ருசியோ அலாதி. தலைமுறை தலைமுறைகளாக வழி வந்திடும் அவர்களின் அந்த வழிமுறையை இங்கிலாந்து நாட்டு மிட்செல்லிடமிருந்து இப்பொழுது பெற்றுள்ளது கிஸான். அதே தனித்தன்மை பொருந்திய செய்பொருட்கள், செய்விதம் மற்றும் செய்திறன் ஆகியவற்றைக் கூட்டித்திரட்டி, தின்னத் தின்னத் திகட்டாத பிஸ்கட் சுவையை ஒன்பது ஒப்பற்ற விதங்களில் அள்ளி வழங்குகிறது கிஸான்:

- கிஸான் சாக்கலேட் சகோட்டா (சாக்கலேட் கிரீம்)
- கிஸான் ஃபிளாரிடா ஃபேண்டஸி (ஆரஞ்சு கிரீம்)
- கிஸான் பைன்ஆப்பிள் ஹவாய் * கிஸான் சாக்மிண்ட் அலாஸ்கா (சாக்கலேட் மிண்ட் கிரீம்)
- கிஸான் எலாய்ச்சி பஞ்ச் * கிஸான் டெய்ரி ட்ரீம்
- கிஸான் மில்க் ட்ரீம் * மிட்செல்'ஸ் மாரி
- மிட்செல்'ஸ் ஆரோரூட்.

*சுவை இன்பம்...ராஜபோகம்!*

# கிஸான் பிஸ்கட்ஸ்




**பிரசித்தி பெற்ற கிஸான் வழங்கும் உயர்தர பிஸ்கட்டுகள்**





# நடித்துக் கொண்டே படித்தேன்!

திருவனந்தபுரத்தில் —

கிழக்குக் கோட்டையில் உள்ள பழவங்காடிக் கோவில். மாலை ஏழு மணி. கோவிலுக்குச் சென்ற நான் 'பளிச்'சென்று தெரிந்த ஒரு பெண்ணைப் பார்த்து பலரும் ஏதோ பேசிக் கொள்வதைக் கவனித்தேன். அவர் காரில் ஏறச் சென்ற போதுதான் அவர் நடிகை சாந்தி கிருஷ்ணா என்பது புரிந்தது. உடனே ஓடிச் சென்று 'மங்கையர் மலரு'க்காக ஒரு பேட்டி வேண்டும் என்று நான் கேட்க அவர் சம்மதித்து என்னை வரச் சொன்னார்.

சாஸ்தமங்கலத்தருகில் ஒரு வீடு. வீட்டின் முன் நடிகையைத் 'தரிசிக்க' வந்த கூட்டம் எதுவும் இல்லை. மிகவும் அமைதியாக இருந்தது. வாசலில் கூர்க்கா, நாய் எதுவும் இல்லை.

வீட்டின் காலிங் பெல்லை அழுத்தியதும் அவரே வந்து வரவேற்றார்.

வீட்டில் நுழைந்ததும் —

டி.வி.யின் மேல் வைத்துள்ள நடராஜர் சிலை, டெலிஃபோன் அருகே வைத்துள்ள நடராஜர் சிலை, சுவரில் தொங்கும் ஸ்வீட் ஹோம் என்ற பலகை. (அந்தப் பலகையின் வாசகங்களின் இடையில் உள்ள குடிசையின் படம் அவரது எளிமையையும் இனிமையையும் விரும்பும் தன்மையை வீட்டுக்கு வருபவர்களுக்கு நுட்பமாக உணர்த்துகிறது).

ஷோகேஸில் அவரது கணவர் ஸ்ரீநாத்துன் கழுத்தில் மாலையுடன் காட்சியளிக்கும் திருமண ஃபோட்டோ. மற்றபடி ஷோகேஸில் அவர் நடித்த படங்களுக்குக் கிடைத்த ஷீல்டுகள் எதுவும் இல்லை.

அண்மைக்காலம் வரை பிரபலமான நடிகையாக இருந்த ஒரு நடிகையின் வீடாக அது தெரியவில்லை.

''பிரபல நடிகை என்ற ஸ்தானத்திலிருந்து சாதாரண குடும்பப் பெண்மணிகளைப் போல வாழும் இன்றைய உங்களுடைய நிலைமைக்கு மாற உங்களால் எப்படி முடிந்தது?''

சிரித்துக் கொண்டே சொல்கிறார், ''ஒரே கேள்வியிலேயே பேட்டிக்குள்ள எல்லா கேள்விகளையும் அடக்கி விட்டீங்க. இதுக்கு என்னோட கடந்த கால வாழ்க்கை முழுவதையும் சொன்னாத்தான் முடியும்.

பூர்வீகம் பாலக்காடு. ஆனால் செட்டில்

ஆனது பம்பாயில். அங்குள்ள ராஜ ராஜேஸ்வரி கலாமந்திரில் நாட்டியப் பயிற்சி. தினத்தந்தியில் பிரசுரமான என்னுடைய படத்தைப் பார்த்து விட்டு டைரக்டர் பரதன் என்னைப் படத்தில் நடிக்கக் கூப்பிட்டார். நித்ரா முதல் படம். தமிழில் பன்னீர் புஷ்பங்கள். ப்ளஸ் டு படித்துக் கொண்டிருந்த போது நடித்தது. படங்களில் நடித்துக் கொண்டே கரஸ்பாண்டன்ஸ் கோர்ஸ் மூலம் பம்பாய் யூனிவர்சிடியில் பி.ஏ. ஹிஸ்டரி பாஸ் செய்து விட்டேன். தமிழில் சின்ன முள் பெரிய முள், மணல் கயிறு, சிவப்பு மல்லி, சிம்லா ஸ்பெஷல் போன்ற படங்களிலும், மலையாளத்தில் தாராட்டு. கேட்காத சப்தம், சில்லு, இது ஞங்களுடைய கதா போன்ற இருபது படங்களிலும் நடித்து இருக்கேன். மலையாளத்தில் நான் நடித்து முடித்த கடைசிப் படம் 'மங்களப் நேரின்னு!'

"படத்தோட பேரில் மங்களம்கிற வார்த்தை இருந்ததினாலே அறம் விழுந்து போய் உங்களுடைய சினிமா வாழ்க்கை முடிந்து போனதா?"

வாய்விட்டுச் சிரிக்கிறார்.

"அப்படியொன்றும் இல்லை. சின்ன முள் பெரிய முள் படத்தில் நடித்துக் கொண்டிருந்த போதுதான் நான் என் கணவர் ஸ்ரீநாத்தை சந்தித்தேன். அந்தப் படத்தில் அவரும் நடித்துக் கொண்டிருந்தார். எங்கள் காதல் மலர்ந்து திருமணத்தில் முடிந்தது. அப்போதே கைவசம் உள்ள





படங்களுக்கு மேல் ஒத்துக் கொள்வதில்லை என்று தீர்மானித்து விட்டேன்."

"ஏன் அப்படி? நிறைய பேர் திருமணம் முடிந்த பின்னும் நடிக்கிறார்களே...?"

"நான் படத்திலிருந்து விலகக் காரணம், கணவன் மனைவி இருவரும் சினிமாத் துறையில் இருந்தால் குடும்ப வாழ்க்கை பாதிக்கப்படும் என்பதுதான். அவருக்கு ஷூட்டிங் முடிந்து வீட்டில் இருக்கும் போது நான் எங்கேயாவது ஷூட்டிங்கிற்குப் போய் இருப்பேன். அப்புறம் குடும்ப வாழ்க்கை என்று என்ன இருக்கிறது? உண்மையிலேயே நான் நடிக்க எதற்காக ஒப்புக் கொண்டேன் தெரியுமா? என்னுடைய நாட்டிய நிகழ்ச்சிகளுக்கு சான்ஸ் வாங்கத் தான்."

"கொஞ்சம் விரிவாகத்தான் சொல்லுங்களேன்"

"ஆமாம். நாட்டியம் என்றால் எனக்கு உயிர். என்னுடைய லட்சியம் என்னவென்றால் சிறந்த நாட்டிய மணியாகத் திகழ்வதே. பத்மா சுப்ரமணியத்தைப் போல நடன உலகில் எனக்கென்று ஒரு தனிப் பெயரை நிலைநாட்டிக் கொள்வதே. அதை அடைய சினிமாவில் கிடைக்கும் 'பாப்புலாரிடி' உதவி செய்யும் என்றே சினிமாவில் நடிக்க சம்மதித்தேன். என்னுடைய ஆரம்ப கால நாட்டிய அனுபவங்கள் மிகவும் கசப்பானவை. நாங்களே கையில் இருந்து செலவு செய்து, பக்கவாத்தியக்காரர்களுக்

குக் கொடுத்து, விளம்பரங்களுக்குச் செலவு செய்து... இது போல எத்தனை கச்சேரிகள் நடத்த முடியும்?''

''ஏன் சபாக்காரர்கள் பணம் தர மாட்டார்களா?''

''அவர்கள் நாட்டியம் ஆடுபவர்களுக்காகக் கொடுக்கும் பணம் மிகவும் சொற்பம். பெரும்பாலும் ஸ்டேஜையும், லைட்டையும், மைக்கையும் மாத்திரம் ஏற்பாடு செய்து விட்டு மற்ற செலவுகளை நாட்டியமாடுபவர்களையே ஏற்றுக் கொள்ளச் சொல்வார்கள். இந்தக் கசப்பான அனுபவங்கள் அடிக்கடி ஏற்பட்டே எப்படியாவது புகழ் பெற வேண்டும் என்ற வெறி ஏற்பட்டது. சினிமாவில் நடித்தாலாவது புகழ் கிடைத்து அதன் மூலம் எனக்கு நிறைய நாட்டியக் கச்சேரிகள் கிடைக்கும் என்ற நம்பிக்கை தோன்றியது. அதனாலேயே சினிமாவில் நடிக்க ஒப்புக் கொண்டேன்.''

''நாட்டியத்தால் கிடைக்கும் பணத்தைவிட நடிகையாக இருப்பதால் பணம் அதிகமாகக் கிடைக்குமே.''

''உண்மைதான். ஆனால் நான் என்றைக்குமே பணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்ததில்லை. என்னுடைய லட்சியமே ஆரம்ப காலத்தில் இருந்து ஒரு சிறந்த நடனமணியாகத் திகழ வேண்டும் என்பதுதான். சினிமாவில் நடித்த போது கூட என்னை ஒரு நாட்டிய நடிகை என்றுதான் குறிப்பிட்டார்களே தவிர, வெறும் நடிகை என்று யாரும் குறிப்பிடவில்லை. மேலும் நான் சினிமாவை ஒதுக்கக் காரணம் என்னை





வைத்துப் படம் எடுப்பவர்களுக்கு எந்த விதமான சிரமங்களையும் கொடுக்க விரும்பாததுதான்.''

''என்ன சிரமங்கள்?''

''படம் டைரக்ட் செய்யறவங்க ஒரு நடிகை இப்படி இப்படி நடிக்கணும்னு நினைச்சிருப்பாங்க. அவங்க நினைக்கிற படியெல்லாம் என்னால் நடிக்க முடியாது. அவங்களுக்கு ஏன் சிரமம் தரணும்? அதனாலதான் நடிக்க விரும்பலை.''

''பிசியா இருந்துட்டு இப்ப உங்களாலே வீட்டிலே ஓய்வாக இருக்க முடிகிறதா?''

''இந்த நிலைமை நானாக விரும்பித் தேடிக் கொண்டதுதானே. நாட்டியப் பள்ளி நடத்தி வருகிறேன். நடன நிகழ்ச்சிகளை ஒத்துக் கொள்கிறேன். வீட்டு வேலைகள்... நினைத்த போது ஓய்வு... தற்சமயம் என்னுடைய நேரங்கள் எனக்கே சொந்தம்.''

''நீங்கள் வெளியே செல்லும் போது உங்களுடைய சினிமா இமேஜ் உங்களைப் பாதிக்கிறதா?''

''நிச்சயமாக. கோவிலுக்குச் சென்றால் கூட அங்குள்ள குருக்கள் 'நீங்கள் நடித்த படத்தை நான் பார்த்திருக்கிறேன்' என்று சொல்லி விட்டே பிரசாதம் தருகிறார். ஆனால் கேரளத்தில் ஒரு வித்தியாசம். பொது இடங்களில் சினிமா நடிகர்களைக் கண்டால் தூர நின்று பார்த்து விட்டுத் தங்கள் வேலைகளைக் கவனிக்கப் போய் விடுகிறார்கள். தமிழ் நாட்டைப் போல கேரளத்தில் நடிகர்களுக்கு அந்த அளவு இமேஜ் கிடையாது.''

இவருடைய கணவர் ஸ்ரீநாத் மலையாளத்தில் பிரபல நடிகர். இவருடைய சகோதரர் சுரேஷ் கிருஷ்ணா தெலுங்கில் பிரபல டைரக்டர். இவர் டைரக்ட் செய்த 'பிரேமா' என்ற படம் ஆந்திரப் பிரதேசத்தின் சிறந்த டைரக்டர் அவார்டைப் பெற்றுத் தந்தது.

பேட்டி: **கமலநாதன்.**

அழகு படைப்புகள்




சீ-மார்ட்

தாராபூர் டவர்ஸ்
அண்ணா சாலை
சென்னை - 600 002

வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன

# என் காலை எடுக்க வேண்டாம்!





**ப**ம்பாய் டாட்டா நினைவு ஆஸ்பத்திரியை நோக்கிக் கார் போய்க் கொண்டிருந்தது. காரில் அமர்ந்திருந்த ஸ்ரீமதி லக்ஷ்மி கண்ணன், "யாருக்கு என்ன கஷ்டம் வேண்டுமானாலும் வரலாம்! ஆனால் கான்ஸர் கொடிய எமன். பற்றிக் கொண்டாலோ அவர் பாடு நரகவேதனைதான்! இந்த ஆஸ்பத்திரியின் பாதையோரங்களைப் பாருங்கள். எத்தனை கிராமப்புறக் குடும்பங்கள் 'டேரா' போட்டிருக்கின்றன. ஒரு கிராமப்புறப்பெண்ணுக்குநோய்பற்றிக்கொண்டால் குடும்பமே பாதையோரங்களில் சமைத்துச் சாப்பிட்டு, வியாதியையும் தீர்க்கப் பாடுபடுகிற கண்ணீர்க் கதை உண்டு. எனக்குத் தெரிந்த ஒரு வேலைக்காரப் பெண்மணி நாற்பது கிலோமீட்டர் தூரத்திலிருந்து தன் கணவனை இந்த ஆஸ்பத்திரிக்கு அழைத்து வந்து காட்டுவதோடு தன் வேலைகளை நிறைவேற்ற ஓடும் துயரக் கதையையும் கேள்விப்பட்டேன்!" என்று நெஞ்சுருகச் சொல்கிறார்.

பாதையோரங்களில் நூற்றுக்கணக்கான குடும்பங்கள் 'ரொட்டி' சுட்டுக் கொண்டு, நோயாளியின் இலவச சிகிச்சைக்குக் 'கியூ' வில் நுழையக் காத்திருக்கின்றன.

பிரும்மாண்டமான அடுக்கு மாடிக் கட்டடங்களின் வாயில் தூணில் எழுதப்பட்ட வாசகம் நம்மைக் கவர்கிறது: "இந்த ஆஸ்பத்திரி ஸர் டி. ஜே. டாட்டா அறக்கட்டளையால் நிறுவப்பட்டது. மறைந்த தொழில் மன்னர் ஸர் டோராப்ஜி டாட்டா தம் பெரும் நன்கொடையினால் இதனை நிறுவியிருக்கிறார். 1941 – ஆம் வருஷம் பிப்ரவரி 28 – ந் தேதி மாட்சிமை தங்கிய பம்பாய் கவர்னர் ஸர் ரோகர் லும்லே இந்த ஆஸ்பத்திரியைத் தொடங்கி வைத்தார்!

ஏழை மக்களின் 'கியூ' பகுதி குழுமியுள்ள சமூகசேவகியின் அறைக்குள் நுழைகிறோம். சமூகசேவகி... புற்றுநோய் நோயாளியிடம் கனிவாக விவரங்களைச் சேக

மிக்ஸியில் துவையல் அரைக்கும் போது, புளி மசியாமல் தங்கி விடுவதைத் தவிர்க்க, சின்னக் கிண்ணத்தில் புளியைத் தண்ணீர் தெளித்துச் சூடாக இருக்கும் குக்கர் மீது வைத்து விடுங்கள். ஐந்து நிமிடங்கள் கழித்து அரைக்க உபயோகித்தால் நன்றாக மசியும்.

— கௌரி.

ரித்துக் கொண்டிருந்தார். சிறிது நேரம் கழித்து நமக்குப் பேட்டி தர இசைகிறார்:

"கான்சர் வியாதி ட்ரீட்மெண்டுக்கு ரொம்ப செலவாகும். இங்கே டாட்டா நினைவு ஆஸ்பத்திரியில் நாற்பது சதவிகிதம் இலவசமாகவே சிகிச்சையளிக்கப்படுகிறது. 1941—இல் டாட்டா நிறுவிய இந்த ஆஸ்பத்திரியை இப்பொழுது பம்பாய் அணுசக்தி கமிஷனின் நிர்வாகம் ஏற்றுச் சிறப்பாக நிர்வகித்து வருகிறது!

சமூகசேவகியிடம், "பாதையோரங்களில் இத்தனை நோயாளிகள் குவிந்திருக்கிறார்களே. இவர்கள் தங்குவதற்கு வசதி செய்து தரக் கூடாதா?" என்று கேட்கிறோம்.

"இங்கு வரும் புற்றுநோய் நோயாளிகளைப் போக்குவரத்து வேனில் ஏற்றிப் புறநகர்ப் பகுதிகளில் அமைந்துள்ள சென்டர்களுக்கு அனுப்பி வைக்கிறோம். பல நோயாளிகளுக்கு ஆஸ்பத்திரிக்கு அருகிலேயே இருந்து சிகிச்சையைப் பெற்றுவிட வேண்டும் என்ற ஆசை!" என்று விளக்குகிறார்...

"உங்கள் நெஞ்சை உருக்கிய சம்பவங்களைச் சொல்ல முடியுமா?"

"எட்டு வயது இருக்கும், ஒரு பள்ளிச் சிறுமி. அவளுக்குக் கான்ஸரினால் கால்களை அகற்ற வேண்டிய நிர்ப்பந்தம். அந்தச் சிறுமியோ 'ஓ' வென்று அழுது தன் கால்களை எடுக்கக் கூடாதென்று அலறினாள். நான் அவளைத் தேற்றி, 'உனக்கு 'ஜெய்ப்பூர் அணி'கள் உள்ளன. இதை அணிந்து கொண்டு நடக்கலாம்', என்று கூறிச் சம்மதிக்க வைத்தேன். பிறகு பல தடவை அந்தச் சிறுமி ஜெய்ப்பூர் அணிகளை அணிந்து கொண்டு வந்து, 'ஸிஸ்டர்! நான் ஸ்கூலுக்கு ஒழுங்காகப் போய் விட்டு வருகிறேன். நான் தான் ஃபர்ஸ்ட் ராங்க்' என்று கூறி மகிழ்ந்த போது என்னால் மகிழ்ச்சியை அடக்க முடியவில்லை.

"மற்றொரு சம்பவம். அவன் இளைஞன். நடை பாதை வியாபாரி. அவனுக்குப் புற்று நோய் பற்றிக் கொண்டு விட்டது. அவனுக்கு நோயைக் குணப்படுத்திய பின், 'நான் மணம் செய்து கொள்ளலாமா?' என்று கேட்டு, தனக்கு வரப் போகும் மனைவியை அழைத்து வந்து அறிமுகப்படுத்தினான். அவ



னுக்கு உணவு விஷயத்தில் சந்தேகம் வந்தாலும் உடனே டெலிபோனில் பேசிச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வான். எனக்குக் குடும்பத்தில் ஒரு சகோதரன் போலவே பழகி வருவது என்னை நெகிழ்த்தி விட்டது.

"டாட்டா நினைவு ஆஸ்பத்திரியில் சமூக சேவகியின் பங்கு என்ன?"

"ஒவ்வொரு புற்றுநோயாளியைப் பற்றிய ஜாதகக் குறிப்புக்களைத் தயாரிக்கிறோம். எந்தெந்தப் பகுதியில் அந்த நோயாளி சிகிச்சைப் பெற வேண்டும் என்பதைக் கூறி அவரை அந்தப் பகுதிக்கு அழைத்துச் சென்று சேர்க்கிறோம். பல சேவை நிறுவனங்களிடமிருந்து இலவசச் சத்துணவு, பால் பெற்று அவர்களுக்கு வழங்குகிறோம். பல நோயாளிகள் புற்றுநோய் கொடூரத்தினால் வேலை இழந்து அவஸ்தைப்பட்டால் அவர்கள் புனர்வாழ்வுக்குப் பல கைத்தொழில், கைவினைப் பொருட்கள் தயாரிக்கும் பகுதிகளில் சேர்த்துப் பணம் சம்பாதிக்க வழி வகுக்கிறோம். ஆஸ்பத்திரி டாக்டர்களுக்கும் நோயாளிகளுக்கும் இணைப்புப் பாலமாக இருந்து சிகிச்சைகளினைப் பதிவு செய்து சாதக பாதகங்களைக் கண்டறிந்து விளக்குகிறோம்.

"டாட்டா நினைவு ஆஸ்பத்திரியில் வருமுன் காக்கும் பணிக்கும் பாடுபடுகிறார்களா?"

"பம்பாய்ச் சுற்றுப்புறப் பகுதிகளுக்குச் சென்று மொபைல் ஆஸ்பத்திரி டாக்டர்களுடனும், பணியாளர்களுடனும் குடிசைப் பகுதி மக்களுக்குக் கான்ஸர் வந்துள்ளதா என்று பரிட்சிப்பதோடு, கான்ஸர் வராமலிருக்க எடுக்க வேண்டிய பாதுகாப்பு நடவடிக்கைகளையும் சொல்லித் தருகிறோம்!"

சேவை மனப்பான்மையுடன், முகம்சுளிக்காமல், அன்போடு தொண்டு செய்யும் அவர்களைப் பார்க்கும் போது மனம் நெகிழுகிறது.

— பி. எஸ். எம்.

வெண்ணெய் எடுத்த மோரை வீணாக்காமல், சப்பாத்தி மாவு பிசையும் போது நீருடன், சிறிது மோரையும் விட்டு அதனுடன் இஞ்சி, பச்சை மிளகாய், கொத்துமல்லி இவற்றைப் பொடிப் பொடியாக நறுக்கி, மாவுடன் சேர்த்துப் பிசைந்தால் சப்பாத்தி மிருதுவாகவும், சுவை மிக்கதாகவும் இருக்கும்.

— சித்ரா.

# டீ... மசாலா டீ

டில்லி வாலா டீ தயாரிப்பது பற்றி ஒரு சகோதரி குறிப்பிட்டிருந்தார். அதே ருசியுடன் தயாரிக்க எப்போதுமே ஒரு டீ மசாலா பௌடரை மாதா மாதம் குஜராத்தியினர் தயாரிக்கிறார்கள். இது இன்னும் சுலபமான வழியில் தயாரிக்கலாம். பஞ்சாபியினர் லான்ஸ் என நாம் குடிக்கும் கெட்டி மோரை மசாலா வாசனையில் தயாரிக்கிறார்கள். கறி (வெஜிடேபிள் பாஜி) மசாலா பௌடரும் உள்ளது.

### டீ மசாலா

ஜாதிக்காய் — ½
சுக்கு — 10 கிராம்,
மிளகு — 5 கிராம்,
ஏலக்காய் — 5,
பிரிஞ்சி இலை — 1 சிறு துண்டு.

நல்ல வெய்யிலில் உலர்த்தி மொறு மொறுவென உள்ளபோதே இடித்து நைஸ் பௌடராக தயாரிக்கவும். 3 கப் டீ தயாரிக்க 2 கப் தண்ணீரை சுட வைத்து சர்க்கரை போட்டு, ½ டீஸ்பூன் (சிறிய ஸ்பூன் அளவு) மசாலா பொடி தூவி ஒரு நிமிடம் கொதித்ததும் டீ தூள் போட்டு மூடி வைக்கவும். 5 நிமிடம் விட்டு 1 கப் பாலை சூடாக்கி அத்துடன் சேர்த்து மூடி வைக்கவும். பின் வடிகட்டி குடிக்கலாம்.

### லான்ஸ் மசாலா

சீரகம் — 10 கிராம்,
மிளகு — 5 கிராம்,
பட்டை — சிறு துண்டு,
சுக்கு — 1 துண்டு.

இதையும் வெய்யிலில் வைத்து நைஸ்
இதையும் வெய்யிலில் வைத்து நைஸ்
பொடி செய்யவும். புளிக்காத தயிரை கடைந்து குடிக்கும் போது ஒரு சிட்டிகை அளவு இந்த பொடியைத் தூவி குடிக்கவும்.

### ஸப்ஜி மசாலா

பெரிய சோம்பு — 100 கிராம்,
தனியா — 50 கிராம்,
மிளகு — 5 கிராம்,
லவங்கம் — 5,
ஏலக்காய் — 2,
சுக்கு — 10 கிராம்,
மிளகாய் வற்றல் — 5,
உப்பு — 1 டீஸ்பூன்.

எல்லாவற்றையும் எண்ணெயில்லாமல் வறுத்து நைஸ் பொடியாக இடித்து காலிஃப்ளவர், கிழங்கு, ஆலு மட்டர், எல்லா காய்களுடனும் சமைக்க உபயோகப்படுத்தலாம்.

— பிரேமாராவ், ஹுப்ளி.



# விமர்சனங்கள்

* டாக்டர் கே. எம். செரியன் அவர்களின் பேட்டி, மிகவும் பயனுள்ளதாகவும், தெளிவாகவும், எங்கள் சந்தேகங்களை நீக்கும் வகையிலும் அவரிடமே நேரில் உரையாடியது போலவும் அமைந்துள்ளது. அவருக்கும், மங்கையர் மலருக்கும் எங்கள் இதயம் நிறைந்த நன்றி கலந்த வணக்கங்கள்!

மடிப்பாக்கம், திருமதி நாமகிரி ராமன், செல்வி விஜயபாரதி.

* மங்கையர் மலரில் வரும் வீட்டுக் குறிப்புக்கள் ஒவ்வொன்றும் மிகச் சிறப்பாக இருக்கின்றன. அவற்றைத் தொகுத்து வருவதனாலும், தக்க சமயங்களில் பயன் அளிக்கின்றது. பாராட்டுக்கள்.

புதுவை — 3, கே. லீலாவதி கிருஷ்ணவேலு.

* என்ன, உங்கள் பையன்க்ள் இருவரும் ஒல்லியாகவே இருக்கின்றனரே? நீங்கள் சாப்பாடு போடுவதில்லையா? டாக்டர் மகன் நோயாளி என்பது சரியா?'' என்ற கிண்டலான கேள்விகள் ஓர் அன்னை என்ற வகையில் நிறைய முறை பாதித்திருக்கிறது. (கேட்பவர்களுக்குத் தெரியாது என் மகன்களின் பலம்!) டாக்டர் செரியன் அவர்களின் பேட்டி, என் பாதிப்பை நீக்கி விட்டது. குண்டாக இருந்தால்தான் ஆரோக்கியம் என்று அர்த்தமல்ல. வெறும் நெய், வெண்ணெய் போதாது என்று புரிந்து கொண்டேன், மொத்தத்தில் இப்பேட்டி (very precious one!) மிக மதிப்பான ஒன்று.

ஆட்டையாம்பட்டி, திருமதி தேன்மொழி சந்திரசேகரன்.

* சுபா தனக்கே உரிய அழகான நடையில் கதையை நகர்த்தி, தாய் என்ற ஸ்தானத்தை அடைந்தால் எந்தப் பெண்ணுமே ஆசா பாசங்களை விட்டுக் கொடுத்துப் பெண்மைக்குரிய இலக்கணங்களோடுதான் இருப்பாள் என்று பளிங்குச் சிறை கதையின் மூலம் விளக்கி விட்டார்.

சென்னை — 42, சீர்காழி ராஜ. நடராஜன்.

* 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்பார்கள். தன் ''குழந்தை மனசுதான்!'' சிறுகதையில்மாமியாரையும்மருமகளையும்நல்ல சினேகிதிகளாகப் படைத்திருக்கிறார் ஜெயந்தி சுந்தரம். இதை வாசிக்கிற எந்தப் பெண்ணும் ஒரு நியாயமான பாதிப்புக்குள்ளாவார் என்பதில் சந்தேகமில்லை.

பாபனாசம், ப. விஜயா.

* ''தேடித் தேடி இளைத்தேன்'' சிறுகதை மிகவும் வித்தியாசமான, வழக்கத்திற்கு முற்றிலும் மாறுபட்டதாகவும் இருந்தது. தன்னை அந்த நிலைக்கு ஆளாக்கிய அவனைக் கண்டுபிடிப்பது என்னும் பகீரதப் பிரயத்தனத்தில் மகோன்னதமான வெற்றியடைவது அதிர்ஷ்டவசமானதுதான். எனினும், ஒரு குடிகாரனின் ஒழுங்கீனத்தை நியாயப்படுத்துவது போலச் சிறுகதையின் முடிவில் அவனுக்குக் கணவன் என்னும் அங்கீகாரம் அளிப்பதும் ''என்னைத் திருமணம் செய்து கொள்; அல்லது சட்டப்படி தண்டனையை அனுபவி'' (இரண்டுமே சமமானதுதான் என்று கதாநாயகி எண்ணுகிறாளோ என்னவோ?) என்று நிபந்தனை விதிப்பது வியாபாரத்தனமானது. பெண்ணுக்குப் பெருமை சேர்ப்பது அல்ல.

சென்னை — 15, பிரேமா சேதுநாராயணன்.

* மகளின் மீது அதிக பாசம் வைத்திருக்கிறேன்.என்பிள்ளையாண்டான் நான்கிழித்த கோட்டைத்தாண்ட மாட்டான் என்று பேசிக் குடும்பத்தின் அமைதியைச் சிதறச் செய்து விடும் அம்மாக்களை நிச்சயம் சிந்திக்கச் செய்து திருத்தும், சிறப்பானதொரு கட்டுரை வரைந்த மீனாட்சிக்கு நன்றி.

திருநெல்வேலி — 1, எஸ். சுந்தர்.

* கதைகள், கட்டுரைகள் மற்றும் துணுக்குச் செய்திகளுக்குக் கூட தலைப்புக்களை வித்தியாசமாய்த் தருகின்ற மங்கையர் மலருக்குப் பாராட்டுக்கள்!

சென்னை — 14, ஐயாறு எஸ். வாசுதேவன்.

* திருமண விடியலை நோக்கிக் காத்திருக்கும் ஒவ்வொரு கன்னிப் பெண்ணும் அவசியம் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய அற்புதத் தொகுப்பு 'தாமதமாய் நடக்கும் திருமணங்கள்' பற்றிய கட்டுரை!

மதுரை — 1, பி. எல். பரமசிவம்.

* ஆகஸ்ட் '89 மங்கையர் மலர் படித்தேன். அட்டைப்பட மருத்துவக் கட்டுரை சிறுவர் முதல் பெரியவர்கள் வரை அனைத்துத் தரப்பட்டவர்களுக்கு ஓர் அரிய பயனுள்ளதாக, வரப்பிரசாதமாக அமைந்திருந்தது! அருமையாக மருத்துவ விஷயங்களை அலசி எடுத்துரைத்த டாக்டர் அவர்களுக்கு இந்த வாசகியின் நன்றி கலந்த பாராட்டுக்கள்!

சீர்காழி — 10, ஐஸ்வர்யா.



# சங்கடமான சமையலை விட்டு...



• "மாஸ்கோவுக்குப் போனதும் என் சிநேகிதி 'லியூபாவை' சந்தித்து இந்தப் பொருட்களை அவளிடம் தந்துவிடுங்கள்" எனக்கூறி வழி அனுப்பி வைத்தார் ரஷ்ய மொழியை சொல்லிக் கொடுக்கும் திருமதி ஜானகி கிருஷ்ணன். நானும் ரஷியாவிற்கு சென்ற கையோடு லியூபவ் என்ற அந்த பெண்மணிக்கு போன் செய்து விவரத்தை சொன்னேன். அந்த பெண்மணி நான் தங்கியிருந்த ஹோட்டலுக்கு நேராக வருவதாகக் கூறினாள்.

சொன்னபடியே வந்தார். வந்த நேரம் என்ன தெரியுமா? இரவு 11.00 மணி. வந்தவர் தனியாக என்னுடைய அறையில் அமர்ந்து ½ மணி நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு நான் கொடுத்த பையை வாங்கிக் கொண்டு சென்றார். நடுநிசியில் ஒரு இளம் பெண் சர்வ சுதந்திரமாக முன் பின் தெரியாத ஒரு அயல் நாட்டுக்காரனை சந்திக்க முடிகிறது என்றால் அது ரஷ்யாவில் தான் சாத்தியம் போலும். இப்படி பெண்கள் எந்தவிதக் கவலையுமின்றிச் சுதந்திரமாக தங்கள் பணிகளை ஆற்றுவதை ரஷ்யாவில் எங்கும் எப்போதும் காணலாம்.

பல்வேறு துறைகளிலும் ஆண்களுக்கு இணையாக பெண்கள் வேலை செய்கின்றனர். சாலையில் ஓடுகின்ற பஸ்களின் ஓட்டுநர்களெல்லாம் பெண்கள் தான்.

"நீ பெண்பிள்ளை, இருட்டிய பிறகு வெளியே சுற்றிவிட்டு வரலாமா?" என்ற

சுடுசொற்கள் கேட்டுப் பழகிய நமக்கு, உண மையிலேயே 'பெண்' என்ற வித்தியாசமே இல்லாத நிலையைக் காண ஆச்சரியமாகத் தான் இருக்கிறது.



• கலிபா என்ற பெண் எங்களை 'புருன்சே' என்ற நகரத்துக்கு அழைத்துச் செல்வதற்காக மாஸ்கோவுக்கு வந்திருந்தாள். 25 ஆண் களை வழி நடத்திச் செல்லும் பொறுப்பை யும் மொழிபெயர்க்கும் பணியையும் அவள் ஏற்றிருந்தாள். மாஸ்கோவிலிருந்து 4000 கிலோமீட்டர் தொலைவிலிருந்து தனியே வந்து, நாங்கள் தங்கியிருந்த விடுதியிலேயே இரண்டு நாள் தங்கியிருந்து எங்களை அவர் களுடைய குடியரசான கிர்கீசியாவுக்கு அழைத்துச் சென்றாள் அந்த கெட்டிக்கார பெண் இத்தனைக்கும் அவளுடைய தொழில் இதுவல்ல. விசாரித்துப் பார்த்ததில் 'புருன் சே' நகரில் ஒரு கல்லூரியில் பேராசிரியை யாக அவள் பணியாற்றி வருகிறாள் எனத்



தெரிந்தது. இந்த விஷயத்தைக் கூட அந்தப் பெண் எங்களிடம் சொல்லவில்லை எங்க ளுடன் ஆங்கிலத்தில் பேசிப் பழக வேண் டும் என்ற ஆவலில் எங்களைப்பார்க்க வந்த அவளுடைய மாணவிகள் தான் இதைத் தெரியப்படுத்தினார்கள்.

• ரஷியாவில் டாக்டர்கள், ஆசிரியைகள், ஊர்தி ஓட்டுனர், அலுவலக ஊழியர், கடை களில் பணியாற்றுபவர் எல்லாம் பெண்கள் தான். உண்மையிலேயே பெண்கள் ராஜ்யம் நடக்கிறதோ என்ற ஐயமே ஏற்படும். அந்தப் பெண்கள் சுதந்திரமாக ஆண்களுக்கு இணை யாக பணிசெய்கிறார்கள் அங்கே.

• எவ்வளவுதான் பெண்களுக்குச் சம உரிமை தந்திருந்தாலும் ஒரு ஆணும், பெண்ணும் சேர்ந்து செல்லும் போது சுமையை ஆண்தான் தூக்குகிறான், பெண் களுக்கு உரிய கௌரவத்தைக் கொடுப் பதில் ஆசிய காலாசாரத்தின் வாசனை அடிக்கிறது.

• கிர்கீஸிய குடியரசில் உள்ள 'சோகோ லுக்' என்றகூட்டுப்பண்ணைக்குச் சென்றிருந் தோம். அங்கே உள்ள தொழிற்சங்கத் தலைவர் ஒரு பெண்மணி. அந்த கூட்டுப் பண்ணையைப்பற்றிய சகலவிதமான விவ ரங்களையும் அத்துப்படியாய் தெரிந்து வைத்திருந்தார். அவர் சொன்ன வாக்குக்கு அங்கே அப்பீலே இல்லை எனலாம். கொஞ்சம் கிண்டலாக எங்களுடன் வந் திருந்த இந்திய தொழிற்சங்கத் தலைவர்



# ஒளிமயமான எதிர்காலத்திற்கு...



உங்கள் வாழ்வில் ஒளி வீசிடவும், எதிர்காலம் சிறப்பாக அமையவும், சிறுசேமிப்புத் திட்டங்களில் முதலீடு செய்யுங்கள். அதிக லாபத்தையும், யாரும் கொடுத்திர முடியாத அதிகபட்ச வட்டித் தொகையையும், நீங்கள் சேமிக்கும் தொகைக்கு வாரிசுதாரர்களையும் நியமிக்க முடியும். உங்கள் முதலீட்டிற்கு அரசு பாதுகாப்பு மற்றும் முழு உத்திரவாதத்தையும் அளிக்கிறது.

சிறுசேமிப்புத் திட்டங்களின் மூலம் கிடைக்கும் மூலதனத்தை அரசாங்கம் மக்களின் பல்வேறு சமுதாய நலத்திட்டங்களுக்கு பயன்படுத்துகிறது. இதனால் நாடும் வீடும் நலம் பெறும்.

**சிறுசேமிப்பு உங்கள் வாழ்வில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தும்.**

**ஒளிமயமான எதிர்காலத்திற்கு கீழ்க்கண்ட திட்டங்களில் முதலீடு செய்து பயனடையுங்கள்.**

- தேசிய சேமிப்பு பத்திரம் 8வது வெளியீடு
- தேசிய சேமிப்புத் திட்டம்
- விவசாயிகள் சேமிப்பு பத்திரம்
- இந்திரா சேமிப்பு பத்திரம்
- மாதாந்திர வருமானத் திட்டம்
- 5 ஆண்டு அஞ்சலக ரெக்கரிங் டெபாசிட்
- 15 ஆண்டு பப்ளிக் பிராவிடண்ட் பண்ட்
- 10 ஆண்டு சமூகப் பாதுகாப்பு பத்திரங்கள்
- அஞ்சலக குறித்தகால முதலீடு
- அஞ்சலக சேமிப்பு வங்கி கணக்கு

இயக்குநர், சிறுசேமிப்புத்துறை,
143, அண்ணா சாலை, சென்னை-600 002.
தொலைபேசி: 840223/840003/846209

DIPR/1654/MS/89/ARIES



கூட்டுப் பண்ணைத் தலைவரைக் கேட்டார்,

''இந்தப் பெண்மணி தொழிற்சங்கத் தலைவியாக இருப்பது தங்களுடைய அதிருஷ்டமா! துரதிருஷ்டமா?''

''இந்த அழகான பெண் தொழிற்சங்க தலைவியாயிருப்பது சந்தேகமில்லாமல் அதிருஷ்டம் தான்!'' என தயங்காமல் பதிலளித்தார் அந்தக் கூட்டுப் பண்ணையின் தலைவர். பெண்கள் முக்கிய பதவி வகிப்பதில் ஆண்கள் மகிழ்ச்சி அடைவதோடு மதிப்பும் தருகிறார்கள்.

• டைனிங் ஹாலில் உணவு பரிமாறிக் கொண்டிருந்த ஒரு இளம் பெண் இந்தியாவைப்பற்றி நிறைய தெரிந்து கொள்ள ஆசைப்பட்டாள். இந்திய சங்கீதங்களில் மிகவும் ஆர்வம் காட்டினாள். நம் லால்குடி ஜெயராமன் முதல் ரவிசங்கர் வரை அனைவரையும் தெரிந்து வைத்திருந்தாள் 'இசையில் இவ்வளவு ஆர்வம் காட்டுகிறாயே. நீ





எவ்வளவு படித்திருக்கிறாய்? எனக்கேட்டேன். அறிவியல் பட்டம் பெற்று முதுநிலை பட்டத்திற்காகப் படித்துக் கொண்டிருப்பதாகக் கூறினாள். சர்வர் வேலை செய்தாலும் இவ்வளவு அறிவிருக்கிறதே என நினைத்தேன். அறிவியல் பட்டதாரிக்கு அறிவிருப்பதில் என்ன விந்தை?

• ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் அனைவரும் வேலை செய்தாக வேண்டும் என்ற சட்டம் சோவியத் நாட்டில் இருக்கிறது. எல்லோருக்கும் வேலை தரப்படுகிறது. வேலை என்பது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் படி அனைவருக்கும் தரப்படவேண்டும். இருந்தாலும் தாய்மார்களுக்குப் பல்வேறு சலுகைகள் தரப்படுகின்றன. எங்களுக்கு மொழிப் பெயர்ப்பாளராக இருந்த தான்யா என்ற



பெண் தன்னுடைய இரண்டு வயது மகளை கூட இருந்து கவனித்துக் கொள்வதற்காக வேலையை விட்டுவிட்டதாக சொன்னாள். ஐந்தாண்டுகள் வரைவிடுப்பில் சென்றாலும் மீண்டும் அதே வேலையில் சேர உத்தரவாதம் தரப்படுகிறதாம். தாய்மார்களுக்கு மட்டும் இந்த சலுகையாம். அதே நேரத்தில் விடுப்பில் இருக்கும் போது இஷ்டப்பட்டால் 'மொழிபெயர்ப்பாளர்' போன்ற 'டெம்பரரி' வேலைக்குச் செல்லத் தடையில்லை. இஷ்டம் போல் வேலை செய்து சம்பாதிக்கலாம். இயலாத நேரத்தில் விடுப்பும் எடுத்துக் கொள்ளலாம்.

• ரஷ்யாவில் எல்லாவற்றையும் விட பெண்களுக்கு மிகவும் சௌகர்யமான விஷயம் சமையல் எனலாம். இவர்களுடைய சமையல் முறையே சுலபமானதாகவும் விஞ்ஞான ரீதியாக உடலுக்கு ஏற்றதாகவும் உள்ளது. (நமக்குத்தான் காரம், புளி இல்லாமல் சாப்பிட என்னவோ போல் இருக்கிறது.) எல்லா பொருள்களையும் அரை வேக்காட்டில் சாப்பிடுகிறார்கள். காய்கறிகளைப் பெரும்பாலும் பச்சையாகவே சாப்பிடுகிறார்கள். மேலும் மதியத்தில் பெரும்பாலும் பணிபுரியும் இடத்திலேயே உணவு கிடைக்கிறது. அது மட்டுமில்லாமல் சமையல் 'காஸ்' குழாய் வழியாக தண்ணீர் போல் வீட்டுக்கு வருகிறது. மின்சார அடுப்பும் எல்லாவீடுகளிலும் உள்ளது. எனவே சமையல் என்பது ரஷிய பெண்களுக்கு ஒரு சுமையல்ல. சுவையான காரியம் தான்.

**— எஸ். செல்வத்தரசு.**

படங்கள்: **சோவியத் தகவல் மையம்.**

சின்ன வெங்காயம் 20, தக்காளி 6, இவற்றை வாணலியில் சிறிது நல்லெண்ணெய் விட்டு நன்றாக வதக்கி, இத்துடன் ½ மூடித் தேங்காயைத் துருவி, மிக்ஸியில் ஒன்றாக அரைக்க வேண்டும். தனியாக ½ டீஸ்பூன் வெந்தயம், 10 மிளகு, 1 டீஸ்பூன் கொத்துமல்லி வரை இவற்றை எண்ணெய் விடாமல் வறுத்து, மிக்ஸியில் பொடி பண்ணி, இப்பொடியை சட்னியில் போட்டு ஒரு கொதி இறக்கிவிட வேண்டும். இந்த சட்னி தோசை, இட்லி, சப்பாத்தியுடன் தொட்டுக் கொள்ள மிகவும் ருசியாக இருக்கும்.

— ஒக்ரா.

விருந்துகள், மற்றும் பண்டிகை நாட்களில் தயிர்ப் பச்சடி செய்து அதைப் பரிமாறுவதற்கு முன்பு அதில் காராபூந்தி, கறிவேப்பிலை, கொத்துமல்லி, நறுக்கிய தக்காளியுடன் கலந்து பரிமாறுங்கள். இது ஒரு புது மாதிரியானதுடன் சுவையும் தனிதான். விருந்தாளிகளிடமிருந்து பாராட்டு வாங்கத் தவற மாட்டீர்கள்.

— ஜெயஸ்ரீ.

அன்னையின்
அரவணைப்பைப் போன்ற
இதமான
ஜிங்க்லர்ஸ்

ஈரமாகி நாளடைவில் கடினமாகி
விடும் மெத்தையோ, ரப்பர்
ஷீட்டுகளோ உங்கள் குழந்தைக்கு
இனி வேண்டாம்.

ஜிங்க்லர்ஸ் மெத்தைகள்
சர்வதேசத் தரம் கொண்ட
ஃபைபர் ஃபில்லிங்கினால்
விஞ்ஞான முறையில் அரை
கிலோவிற்கும் குறைவான
எடையில், காற்றோட்ட
வசதியுடன், உங்கள் குழந்தையின்
மிருதுவான மேனிக்காகவே மிகுந்த
கவனத்துடன் தயாரிக்கப்பட்டது.

எளிதில் துவைக்கலாம்.

வெகு விரைவில் ஈரம் உலரும்
தன்மையுடையது. சுகாதாரமானது.

ஜிங்க்லர்ஸ் உங்கள் குழந்தைக்குகந்தது.
பல வண்ணங்களிலும்,
டிசைன்களிலும் கிடைக்கின்றன.

அன்பளிப்புக்கும்
ஏற்றது

# Jinglers

## வாஷபிள் பெட்ஸ்

தயாரிப்பாளர்கள்:

**யுடிலிடி டெக்ஸ்டைல்ஸ்**
6 ப்ரகதாம்பாள் சாலை, நுங்கம்பாக்கம்.
சென்னை-600 034 போன் - 864307

கிடைக்குமிடங்கள்:

சென்னை :



வீட்டிலிருந்தே சம்பாதிக்கலாமே

# ஒரு மணி நேரத்தில் 900 பூரிகள்!

**இந்தக் கட்டுரையில் மூன்று பேர் வீட்டையடுத்து வேறோர் இடத்தில் தங்கள் பணியைச் செய்வது பற்றி வருகிறது. இதே தொழிலை வீட்டிலிருந்தும் செய்யலாமே!**

**அ**ந்தக் குடும்ப நண்பர் அங்கலாய்த்துக் கொண்டிருந்தார். 'என்ன சம்பாதிச்சு என்ன சார் பிரயோஜனம், மத்தியானம் சுடச் சுட ஒரு நல்ல சாப்பாடு உண்டா?'' டக்கென்று என் கணவர் சொன்னார், ''டெஸ்க் லஞ்சிற்கு போன் பண்ண வேண்டியதுதானே?'' என்று. ''டெஸ்க் லஞ்ச்சா?'' என்று நண்பர் ஆச்சரியமாக வினவிய அதே கணம், என்னுள்ளும் ஆர்வம் பிறந்தது. மறுநாள் தகவல்களைச் சேகரிக்கப் புறப்பட்டேன்

வீட்டைத் தேடிய சமயம் காற்றில் மிதந்து வந்த உணவின் மணம் எனக்கு வீட்டைக் காட்டிக் கொடுத்தது. உள்ளே சென்று அறிமுகப்படுத்திக் கொண்டேன். திருமதி லலிதா ஸ்ரீனிவாஸன், ஷீலா மாதவன் மற்றும் திரு. என். விஸ்வநாதன் மூவரும் படு பிஸியாக உணவைப் 'பேக்' செய்து கொண்டிருந்தார்கள். அப்போது நேரம் காலை 11.30. என் கேள்விகளுக்கான பதில்களைக் கூறிக் கொண்டிருந்த போதே அவர்கள் காரியத்தில் கண்ணாக ஈடுபட்டிருந்தது பாராட்டப்பட வேண்டிய விஷயம்.

திருமதி லலிதா அவர்களின் சகோதரியின் பிள்ளைதான் திரு. விஸ்வநாதன். திருமதி ஷீலா மற்றொரு சகோதரியின் மகள். பெண்கள் இருவருமே பட்டப்படிப்பு படித்தவர்கள். திரு விஸ்வநாதன் மாலைக் கல்லூரியில் எம். பி. ஏ. படிக்கிறார்! இவர்கள் மூவருக்குமே ஏதாவது சுய தொழில் செய்ய வேண்டும் என்ற தீராத ஆர்வம் நீண்ட காலமாகவே இருந்து வந்திருக்கிறது. என்ன தொழில் என்று யோசித்த போது அலுவலகத்தில் வேலை செய்பவர்களுக்குச் சுவையான, சூடாக மதிய உணவு கிடைப்பதில்லை என்பது தெரிய வந்தது. சுமார் ஆறு மாத காலம் பஸ் ஸ்டாண்ட், புகைவண்டி நிலையம், அலுவலகங்கள் இப்படிப் பல இடங்களில் சுமார் 500 பேர்களைச் சந்தித்து சர்வே செய்து 'டெஸ்க் லஞ்ச்' சர்வீஸ் ஆரம்பித்தார்கள். இப்பெயரையே ஒரு வாடிக்கையாளர்தான் சூட்டினாராம்.

ஆரம்பத்தில் ஐ. ஓ. பி. வங்கி பதினையாயிரம் ரூபாய் கடன் வழங்கியதாம். இவர்கள் மூவரும் குறிப்பிட்ட தொகையை மூலதனமாகப் போட்டு வாடகைக்கு வீடு எடுத்து. தேவையான அடுப்பு, பாத்தி

* உணவு வகைகள் டிரேயில் நிரப்பப்பட்டு பாக் செய்யப்படுகிறது...

* கிரிஜா * ஷீலா * லலிதா





* அலுவலகங்களை நோக்கி......

ரங்கள், பாக் செய்வதற்கான பொருட்கள் இவைகளை வாங்கினார்கள். விளம்பரம் செய்தார்கள். மலிவு விலை காண்டீன் இல்லாத அலுவலகங்களுக்கு நேரில் சென்று ஆர்டர்களைப் பெற்றார்கள். எல்லா முயற்சிகளையும் முடித்தபின் செப்டம்பர் முதல் தேதி 30 பேர்களுக்கான டெஸ்க் லஞ்ச்சைத் தயாரித்துத் தொழிலை ஆரம்பித்தார்கள்.

''உங்களுடைய டெஸ்க் லஞ்ச்சின் சிறப்பு என்ன?''

என் கேள்விக்குத் திரு விஸ்வநாதன் பதில் சொன்னார்: ''நாங்கள் தரமான உணவுப் பண்டங்கள், நல்ல பால், வெண்ணெய், ரீஃபைண்ட் ஆயில், அன்றாடம் புதிதாக வாங்கும் காய்கறிகள் இவற்றால் மிகச் சுகாதாரமான முறையில் தயாரிக்கிறோம். எங்கள் குக் திருமணி சமைப்பதிலும் இனிப்பு, கார பட்சணங்கள் தயாரிப்பதிலும் கெட்டிக்காரர். தவிர தயாரித்த உணவைச் சிறப்பாகப் பேக் செய்கிறோம்.

சிபாரிசு செய்த பாலிஸ்டெரின் என்ற பொருளாலான மோல்ட் ட்ரேயில் உணவை வைத்து அலுமினியத் தாளால் மூடி விடுகிறோம். எனவே உணவு தூசு, அழுக்குப் படாமல், சுடச்சுட, மிகச் சுகாதார முறையில் வாடிக்கையாளரை அடைகிறது.''

**நீங்கள் என்ன விதமான உணவு வகைகளை அளிக்கிறீர்கள்? ஒரு 'பாக்'கின் விலை என்ன?**

''நாங்கள் வாரத்தில் ஆறு நாட்களுக்கான மெனு ஒன்றைத் தயாரிக்கிறோம். இதை வாடிக்கையாளரிடமும் கொடுக்கிறோம். இதன்படி ஒவ்வொரு நாளும் ஒரு கலவை சாதம், (புளி சாதம், பிஸிபேளா பாத், வாங்கி பாத் போன்றவை) தயிர்

* பாக் செய்யப்பட்ட உணவு அனுப்பப்படுவதற்குத் தயார் நிலையில்...



சாதம், காய்கறி வகை ஒன்று, வடை, போண்டா போன்ற வகை ஒன்று என்பதாக இருக்கும். இதற்கு நாங்கள் வைத்திருக்கும் விலை ரூ. 8/— தவிர தயிர் சாதம் வேண்டாம் என்பவர்களுக்குச் சப்பாத்தியும், ஸ்பெஷல் டெஸ்க் லஞ்ச் (ரூ. 12) வேண்டுபவர்களுக்கு ஒரு ஸ்வீட் வகையும் வைக்கிறோம். பாக்கிங் மெடீரியல் விலையே இரண்டு ரூபாய் ஆகிவிடுகிறது. எனவே உணவுக்காக நாங்கள் பெறும் தொகை ரூ. 6 மட்டுமே.'' திருமதி லலிதா ஆர்வமுடன் விளக்கினார்.

**நீங்கள் இல்லத் தலைவிகளாக இருக்கிறீர்களே. இப்பணியால் உங்கள் குடும்ப வேலைகள் பாதிக்கப்படாதா?**

''நிச்சயமாக இல்லை. காலை ஒன்பது மணி வரை நாங்கள் எல்லாப் பெண்களையும் போலச் சமைத்து கணவன், குழந்தைகளைப் புறப்பட வைத்து, அவர்களுக்கு உணவளித்து எங்கள் வேலைகளைச் செய்கிறோம். பிறகு இங்கு வருகிறோம். பிற்பகல் ஒரு மணி வரைதான் இங்கு வேலை. பிறகு மீண்டும் வீடு சென்று மாலைச் சிற்றுண்டி, இரவு உணவு தயாரித்து, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து, எங்கள் கடமைகளைச் செய்கிறோம். சமையல் செய்பவருக்கு முதல் நாள் மாலையே அடுத்த நாள் மெனுவைக் கூறி விடுவோம். அவர் காலை 5.30 மணிக்கு வந்து சமையல் வேலையைத் துவங்கி விடுவார். எங்கள் வீடுகளிலும் பெரியவர்கள், குழந்தைகள் எல்லோரையும் நாங்கள் கவனித்துக் கொள்வதால் எங்கள் கணவன்மார்கள் இப்பணிக்குப் பூரண ஒத்துழைப்புத் தருகிறார்கள்,'' என்று சொல்லுகையிலேயே ஷீலாவின் முகத்தில் சந்தோஷம் மின்னுகிறது.

**உங்களுக்கு ஆர்டர்கள் எப்படி வருகின்றன? சரியான சமயத்திற்கு எப்படி அனுப்புகிறீர்கள்?**

உணவு பேக் செய்யப்பட்ட ட்ரேயை அடுக்கிக் கொண்டே திரு விஸ்வநாதன் பதில் கூறினார்: ''தினமும் காலை 11.30 மணி வரையில் நேரிலும், போன் மூலமும் பல அலுவலகங்களிலிருந்து ஆர்டர்கள் வரும். அதற்கு மேல் வரும் ஆர்டர்களை நாங்கள் எடுப்பதில்லை. தற்போது தினமும் சராசரி 90 ஆர்டர்கள் வருகின்றன. 12 மணிக்கு பேக் செய்ய ஆரம்பிப்போம். 12.50க்கு அலுவலகங்களை உணவு அடைந்து விடும். எங்களிடம் த்ரீ வீலர் வண்டி ஒன்றும் சைக்கிள் ஒன்றும் உள்ளது. இரண்டு பையன்கள் எழும்பூர், மயிலாப்பூர், நந்தனம், லஸ், ஆழ்வார்பேட்டை ஆகிய பகுதிகளுக்கு உணவைப் பெட்டிகளிலும், வண்டியிலும் வைத்து எடுத்துச் செல்வார்கள். குறித்த நேரத்தில் உணவு அலுவலகங்களை அடைய வேண்டுமென்பதில் நாங்கள் மிகவும் கவனமாக இருப்போம்.''

**உங்கள் முயற்சி வெற்றியடைய என்னென்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளுகிறீர்கள்?**

''நான் முன்பே குறிப்பிட்டபடி உணவு வகையின் தரமும், நேரம் தவறாமையும் எங்களது கொள்கை. தாமதமாக உணவு சென்றால் பின்னாலேயே நான் ஸ்கூட்டரில் சென்று மன்னிப்புக் கேட்பேன். அதிக ஆர்டர் வரும் நாட்களில் குறிப்பிட்ட கம்பெனிக்கு 'நன்றி' என்று கார்டு அனுப்புவோம். அவ்வப்போது வாடிக்கையாளர்களிடம் சென்று மெனுவில் மாற்றம் செய்ய வேண்டுமா, புதிய ஐட்டம் சேர்க்க வேண்டுமா என்று கருத்துக்களைக் கேட்பேன்.

## உலக அரங்கில் உயர்ந்தவர்



ஒரு பெண் உயர் கல்வி கற்பதன் பொருட்டு உலகில் அரை பங்கு பிரயாணத்தை மேற்கொண்டு பக்ஸ்டன்ஸ் டிவான்ஷயன் ரயில் மருத்துவமனையில் கற்றுத் தேர்ந்து, உலகிலேயே உயர்ந்த விருதினையும் பெற்றுள்ளார்.

திருமதி. சரஸ்வதி வைத்தியநாதன் வாதநோய் நர்சுப் பயிற்சியின் ஆறு மாதப் பயிற்சியினைத் திறம்பட செய்து முடித்துள்ளார். வாத நோய் சம்பந்தப்பட்ட துறையில் உலகளாவிய வகையில் இந்த ஒரே பயிற்சி உள்ளது. இதை வெற்றிகரமாக முடித்து, அகில உலக மருத்துவத் துறையினருக்கான மிக உயர்ந்த நான்காம் உலக பூட்ஸ் விருதினைப் பெற்றுள்ளார். இந்த விருது அகில உலக வாதநோய் மருத்துவ சிகிச்சையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு வழங்கப்படுவதாகும்.

புதிய!

# ஸிபாகா சுப்ரீம் டூத்ப்ரஷ்கள்
## பேபி மற்றும் ஜூனியர்

உலகிலேயே
மிருதுவான
மற்றும்
மென்மையான
ப்ரிஸில்
கொண்டது.

உங்கள் இரு
சின்னஞ்சிறு
கண்மணிகளுக்காக.

ஸிபாகா சுப்ரீம் பேபி மற்றும் ஜூனியர் டூத்ப்ரஷ்கள் மிருதுவான உருண்டை வடிவமுள்ள ப்ரிஸில்கள் கொண்ட இவை அமெரிக்கா ட்யூபாண்டிலிருந்து பிரத்யேகமாக இறக்குமதி செய்யப்பட்ட டைனெக்ஸ் நைலானினால் ஆன விசேஷமாக வளைத்த ஹாண்டில்கள் ப்ரஷ் செய்வதை எளிதாக்குகிறது.

ஸிபாகா சுப்ரீம் உலகத் தரம் வாய்ந்த டூத்ப்ரஷ்கள். ஏனென்றால், உங்கள் செல்லக் கண்மணிகளுக்கு சிறந்தவை மட்டுமேதான் தேவை.






Cibaca*




Sista's-HCGL-702/8

இதனால் வாடிக்கையாளர்கள் நெருங்கிய உறவினர் போலப் பழகுகிறார்கள். அவர்கள் மனத்தையும், வயிறையும் திருப்தி செய்வதே எங்கள் முயற்சி வெற்றி பெறுவதற்கான சரியான வழி என்று நினைக்கிறேன். ஆரம்பித்து நான்கே மாதங்கள் ஆனாலும் பப்ளிக்கில் நல்ல வரவேற்பு இருக்கிறது'' என்று சொல்லிச் சிரித்தார் திரு. விஸ்வநாதன்.

இதைத் தவிர இவர்கள் மூவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பதால் குடும்பத்திலுள்ள மற்ற உறுப்பினர்களும் இவர்களுக்கு உதவுவதுண்டாம். மூவருக்கும்ஸ்கூட்டர் ஓட்டத்தெரிந்திருப்பது மற்றொரு சிறப்பம்சம்.

**இந்த நான்கு மாதங்களுக்குள் நீங்கள் பெற்ற பாராட்டுக்கள், சந்தித்த பிரச்னைகள் உண்டா?**

''தாராளமாக. ஸ்வர்ணதாரா க்ரெடிட் கார்ப்பரேஷனின் ஜி.எம். திரு. ஆர். வைத்ய நாதன் எங்களுடைய ரெகுலர் கஸ்டமர். திருமணமான இத்தனை வருடங்களுக்குப் பிறகு சுவையான உணவை இந்த நான்கு மாதங்களாகத்தான் சாப்பிடுகிறேன் என்று தன் மனைவியிடம் கூறிக் கொண்டே இருப்பாராம். இதை அவர் மனைவியே என்னிடம் கூறினார். தவிர குக் வராத நாட்களில் நாங்களே சமைத்துப் பேக் செய்ததும், பையன்கள் வராத போது, டெலிவரி செய்ததும் உண்டு.

இதைவிடச் சுவையான விஷயம், திடீரென்று ஒருநாள் மெடிகல் கான்ஃபரன்ஸ் ஒன்றிற்காக 450 பேர்களுக்கு உணவு பேக்குடன் 900 பூரிக்கான ஆர்டரும் வந்தது தான். 11 மணிக்கு சமையலை முடித்தபின் பூரி ஆர்டர் வந்தபோது பிரமித்துப் போய் விட்டோம். அப்போது 85 வயதான என் தாய் அனைவரையும் இங்கு வரச் செய்து, பூரி இட வைத்து ஒரு மணி நேரத்தில் 900 பூரியைச் செய்து விட்டார். இந்நிகழ்ச்சிகளை எங்களால் மறக்க இயலாது'' லலிதா மலரும் நினைவுகளில் மூழ்கினார்.

இவர்கள் தற்போது கிரகப்பிரவேசம், ஆண்டு நிறைவு, அலுவலகங்களில் நடக்கும் பார்ட்டிகள் இவற்றிற்கும் விருந்து தயாரித்து அனுப்புகிறார்கள். விசேஷ நாட்களிலும், தனியாக வரும் ஆர்டர்களின் பேரிலும் ஸ்வீட் கார வகைகளைத் தயாரிக்கிறார்கள்.

**இவர்களுடைய எதிர்காலத் திட்டங்கள் என்ன?**

இச்சேவைக்கு நல்ல வரவேற்பு இருப்பதால் தொழிலில் முன்னேற்றமும், லாபமும் நிச்சயமாக உண்டு என்கிறார்கள். எதிர்காலத்தில் வயதான தம்பதிகள் தனியாக இருந்தால், அவர்களின் வீட்டிற்கே கேரியரில் சாப்பாடு அனுப்புதல், பள்ளிக் குழந்தைகளுக்கு மாலைச் சிற்றுண்டி தயாரித்தல் போன்றவை இவர்களது எதிர்கால லட்சியங்கள்.

**உங்களைப் போலவே லஞ்ச் தயாரித்து அளிக்க விரும்புகிறவர்களுக்குத் தாங்கள் கூறும் ஆலோசனைகள் என்ன?**

இதில் ஈடுபடுபவர்களுக்குத் தொழிலில் ஆர்வமும், பிரச்னைகளைச் சமாளிக்கும் தைரியமும், தொழிலை முன்னேறச் செய்யும் சாமர்த்தியமும் இருக்க வேண்டும். தவிர இணைந்து தொழிலை நடத்தினால் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பும், புரிந்து கொள்ளும் தன்மையும் உடையவர்களாய் விளங்க வேண்டும். இவை இருந்தால் வெற்றி நிச்சயம்.''

— லக்ஷ்மி சங்கர்

---

சோள மாவின் பயன்கள்:

நம்மில் பலருக்கு 'கான்ப்ளவர்'
பொடியின் அருமை தெரியவில்லை.
குழம்பிற்குக் கரைத்து விடும் போது
அரிசி மாவை விட சோள மாவு கரைத்
தால் குழம்பு சீக்கிரம் சேர்ந்து விடும்.
உருளைக்கிழங்கு 'ப்ரை' வாழைக்
காய் வதக்கல் இவற்றிற்குச் சிறிது
கான்ப்ளவரைத் தூவி விடுங்கள். மொறு
மொறு என்றிருக்கும்.
தக்காளி சூப்பிற்கு நான்கு தக்காளி
போட வேண்டிய இடத்தில் மூன்று
தக்காளி போட்டுச் சிறிது கான்ப்ளவர்
(சோள மாவு) கரைத்து விடுங்கள்.
திக்காக நான்கு தக்காளி போட்ட சூப்
போலிருக்கும். சோள மாவு சத்து நிறைந்
ததும் கூட.

— வசந்தி மாதவன்..

---

பால் பவுடர்களை அவசர காலங்
களில் டீ, காப்பி கலப்பதற்கு மட்டு
மில்லாது வேறு வகைகளிலும் உப
யோகப்படுத்தலாம். இதோ சில அனுப
வக் குறிப்புகள்:
காலை வேளை அவசரத்திற்கு, ஒரு
200 கிராம் சர்க்கரையை மாவாக மிக்ஸி
யில் பொடித்து ஒரு காற்றுப்புகாத
டப்பாவில் போட்டு வைத்துக் கொள்
ளுங்கள். பள்ளி செல்லும் சிறுவர்
களுக்கு பிரட் ஸ்லைஸ்களுக்கு நடுவில்
பால் பவுடரையும் பொடித்த சர்க்கரை
யும் சற்றுச் சூடான பால் ஊற்றி கூழ்
போல் ஒரு கிண்ணத்தில் குழைத்துக்
கொண்டு இந்தக் கூழை பிரட்டில் தடவி
ஸாண்ட்விச்சாக டிபனுக்கு தரலாம்.
இது போல் சப்பாத்தி, பூரி இவற்றிற்
கும் இவற்றைத் தடவி டிபன் பாக்ஸில்
வைத்து அனுப்பலாம். குழந்தைகள்
விரும்பிச் சாப்பிடும். உடலுக்கும்
நல்லது.

— ராஜலட்சுமி.

# நெஸ்டம் பேபி ஸிரியல்.
# ஆரம்பத்திற்கு பொருத்தமானது.
# வளர்ச்சிக்கு உன்னதமானது.

**நெஸ்டமும் பாலும்—முழுமையான போஷாக்கு உணவு.**

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதங்களாகும்பொழுது அவனுக்கு பாலுடன் திட உணவும் தேவை. அவனுடைய ஜீரணத்திற்கு உகந்த நெஸ்டம் கொடுங்கள்.

நெஸ்டத்தை கொதிக்க வைத்த வெதுவெதுப்பான பாலில் கலக்குங்கள். முழுமையான போஷாக்கு உணவு தயார். இது குழந்தை ஆரோக்கியமாக, துறுதுறுவென்று வளர உதவுகிறது.

**நெஸ்டம் குழந்தை உணவு பலவித சுவைகளில்**

உங்கள் குழந்தை வளர வளர அவனுக்கு புதிய சுவைகளை அறிமுகப்படுத்துங்கள். உதாரணமாக, மசிய வைத்த காய்கறிகள், வேக வைத்த பழங்கள் மற்றும் பருப்பு வகைகள் முதலியன. இது அவன் விரைவில் பெரியவர்களுடன் உணவை பகிர்ந்துகொள்ள உதவும்.

## நெஸ்டம்®
## ரைஸ்

இரும்புச்சத்து மற்றும் வைட்டமின்கள் அடங்கியது. பாலுடன் கலக்கவும்.

**இலவசம்**

உங்கள் குழந்தை அவள் உணவில் பலவித சுவைகளை விரும்புவாள். எனவே இலவச நெஸ்டம் உணவு வகை செய்முறை புத்தகத்திற்கு எழுதவும்.

நெஸ்டம்,
தபால் பெட்டி எண். 6016,
புது தில்லி-110 008.









குழந்தைகளிடம் சென்று 'விடமின் ஏ' சக்தி இதில் இருக்கிறது, இரும்புச் சத்து இதில் இருக்கிறது, அதனால் நீ இதைச் சாப்பிட வேண்டும்' என்று விஞ்ஞானத்தை எடுத்துச் சொன்னால் அதன் மனத்தில் பதியாது. ஆனால் அந்தச் செய்தியையே கதைகளின் மூலமாகவோ, பாடல்களின் மூலமாகவோ, டீ. வி. நிகழ்ச்சிகளின் மூலமாகவோ புகுத்தினால் நிச்சயம் பலன் கிடைக்கும்.

# முத்தான குழந்தைகளுக்கான சத்தான கதைகள்!

தலைமுறைதலைமுறைகளாகநல்ல ஆகாரங்களாகக் கருதப்படும் பல உணவுப் பண்டங்களும், காய்கறிகளும் இன்றைய மாடர்ன் குழந்தைகளால் ஒதுக்கப்பட்டு, அது ஏதோ தீண்டத்தகாத உணவு போலவோ அல்லது சமுதாயத்தில் வசதி குறைந்தவர்கள் மாத்திரம் வேறு வழியின்றி உண்ணும் உணவு போலவோ கருதப் பட்டுவருகிறது. இந்தத்தவறான அபிப்பிராயத்தை மாற்றவும், குழந்தைகள் உண்மையான சத்தான உணவுப் பொருட்களை அடையாளம் கண்டு கொண்டு அதனை விரும்பிச் சாப்பிட வைக்கவும், சத்தான உணவுகளைப் பற்றி முத்தான கதைகளை உருவாக்கிச் சொல்லலாம்.

இதோ சில மாதிரி கதைகள். மிகச் சுருக்கமாக சொல்லப்பட்டிருக்கின்றன. இதனை விரிவாக்கிச் சொல்லலாம். கற்பனை வளம் படைத்த பெற்றோர்களும், டீச்சர்களும் இதுமாதிரியான எத்தனையோ கதைகளை உருவாக்கலாம்.

துளசி ஒரு செருப்புத் தைப்பவரின் மகள். வயது எட்டு. தினமும் ஐந்து கிலோ மீட்டர் தூரம் நடந்து அவள் பள்ளிக்குச் செல்ல வேண்டும். அவள் வீட்டுக்குத் திரும்பி வரும் போது பெரும்பாலும் இருட்டத் தொடங்கி விடும். சில நாட்களில் அவள் தன்னுடைய கண்களில் வலி எடுக்கிறது என்று சொல்லுவாள். அவளுடைய பெற்றோர்கள் அதனைப் பொருட்படுத்தவில்லை.

ஒருநாள் —

பள்ளிக் கூடம் முடிந்து வீட்டிற்குப் பயத்துடன் துளசி ஓடி வந்தாள்.

வழியில் ஒரு இடத்தில் ஒரு பெரிய பேயைக் கண்டதாகச் சொன்னாள். மறு நாள் முதல் பள்ளிக்கூடம் போக மாட்டேன் என்று அடம் பிடித்தாள்.



துளசியை சமாதானப்படுத்தி அவளுடைய தாயார் அவளை ஸ்கூலுக்கு அனுப்பி வைத்தாள்.

அன்றைய தினம் துளசியின் தாயார் அவளை ஸ்கூலில் இருந்து அழைத்து வந்தாள்.

வரும் வழியில் துளசி ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பார்த்ததும் 'பேய் நிற்கிறது' என்று பயந்து அலறினாள். அப்போது இருட்டத் தொடங்கி இருந்தது.

துளசியின் தாயாருக்கு அவளது அலறல் அதிசயமாக இருந்தது. ஏனென்றால் துளசி காட்டிய இடத்தில் சில மரங்களே நின்றிருந்தன.

திரும்பத் திரும்ப அதைப் பார்த்து பயப்படவே துளசியின் தாயாருக்குப் புரிந்து போயிற்று. துளசியின் பார்வையில் கோளாறு என்று.

மன வருத்தத்துடன் தனது கணவனிடம் அவள் அதைப் பற்றிச் சொன்னாள்.

அவன் துளசியை ஒரு மந்திரவாதியிடம் அழைத்துச் சென்றான்.

அவளைப் பேய்ப் பிடித்து இருப்பதாகச் சொல்லி சில சடங்குகளைச் செய்தான் அவன்.

துளசியின் பார்வையில் மாற்றம் இல்லை.

ஒரு நாள் —

அந்தக் கிராமத்திற்கு ஒரு டாக்டர் வந்தார். துளசியைப் பரிசோதித்து விட்டு துளசியின் ஆகாரங்களில் போதுமான சத்துக்கள் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டு அதனால் ஏற்பட்ட விடமின் குறைவால் கண் பார்வை பாதிக்கப்பட்டு இருக்கிறது என்றார்.

''டாக்டர்... நாங்கள் ஏழைகள். சத்தான உணவுகள் வாங்கிச் சாப்பிட எங்களிடம் பணம் இல்லை'' என்று அவர்கள் சொன்னதற்கு டாக்டர்,

''சத்தான உணவுகள் என்றால் அதிக பணம் செலவழித்து வாங்கிய ஆகாரம் என்று அர்த்தமில்லை. மிகவும் மலிவான கீரை வகைகளை தினசரி ஆகாரத்தில் சேர்த்துக் கொண்டால் அவளது கண் பார்வை சரியாகும். இந்தக் கீரையை ஆகாரத்தில் சேர்க்கவில்லையென்றால் அவளது



பார்வை நாளடைவில் குறைந்து அடியோடு பார்வையே போய் விடும்'' என்றார்.

துளசி டாக்டர் சொல்லியபடி கீரைகளைச் சாப்பிட அவளது கண் பார்வை சரியாகியது.

இந்தக் கதையைக் கேட்கும் குழந்தை, தாய் கீரையைச் சாதத்துடன் பிசைந்து கொடுத்தால் வேண்டாம் என்று சொல்லாது.

சிறு வயதிலேயே கீரையைச் சாப்பிட்டு வந்தால் வயதானால் கூட கண்ணாடி போட வேண்டிய அவசியம் இருக்காது. பத்துப் பன்னிரண்டு வயது குழந்தைகள் கண்ணாடிகளைப் போட்டுக் கொண்டு இருக்க வேண்டிய பரிதாபத்தை ஆகாரத்தின் மூலம் தவிர்க்கலாமே! இன்றைய அவசர, நாகரீக உலகத்தில் பெரும்பாலான குடும்பங்களில் கீரை என்ற ஆகாரமே உணவில் சேர்க்கப்படுவதில்லை.

## இதோ இன்னொரு கதை —

தாஜ்மகாலைக் கட்டியவர் ஷாஜஹான். டெல்லியில் உள்ள செங்கோட்டையும், ஜும்மா மசூதியும் இவரால் கட்டப்பட்டதே. இத்தகைய ஷாஜஹான் ஒரு காலத்தில் தன்னுடைய மகனான ஔரங்கசீப்பால் சிறை வைக்கப்பட்டார். சிறையில் இருந்த ஷாஜஹானுக்கு ஏதேனும் ஒரு உணவுப் பொருளையே உதாரணமாக அரிசியையோ, கோதுமையையோ அல்லது வேறு ஏதேனும் உணவுப் பொருளையோ மாத்திரமே தேர்ந்தெடுக்க அனுமதி கொடுக்கப்பட்டது. சிறையில் இருக்கும் வரை அந்த உணவுப் பொருளைக் கொண்டு மாத்திரமே ஆகாரம் தயார் செய்து தரப்படும் எனக் கட்டளை. பாவம் ஷாஜஹான்!



எப்பேர்ப்பட்ட கொடுமைக்கு உள்ளானார், என்ன உணவை அவர் தேர்ந்தெடுக்க முடியும்? என்று எல்லோரும் வருத்தப்பட்டனர்.

ஷாஜஹான் வருத்தப்படவில்லை. தான் கொண்டைக் கடலையை முழு உணவாகத் தேர்ந்தெடுத்து இருப்பதாகச் சொன்னார்.

அதில் இருந்தே சப்பாத்தி, கறி எல்லாம் செய்து தரப்பட்டன. லட்டு போன்ற




காரசார சண்டையிலும் லிம்கா
மௌனச் சண்டையிலும் லிம்கா

காரசாரமாக விவாதித்து விவாதித்து அல்லது
மௌனமாக இருந்து இருந்து களைத்து நீங்கள்
தாகத்தால் தவிக்கும் பொழுது...
ஐசோடானிக் சால்ட் அடங்கிய கிருமிகள்
அற்ற லிம்கா அருந்தி தாகம் தணிப்பீர்.

RADEUS/PE/L/5-89-TAM







ARTIFICIALLY FLAVOURED. CONTAINS NO FRUIT JUICE OR FRUIT PULP
® THE REGISTERED TRADEMARK OF PARLE (EXPORTS) LTD., BOMBAY.

ஸ்விட்டுகளும் அதில் இருந்து செய்து தரப்பட்டன. கொண்டைக் கடலையைக் கொண்ட ஆகாரங்களைச் சாப்பிட்டே பல வருடம் உயிர் வாழ்ந்து வந்தார் ஷா ஜஹான். இதனால் உடலுக்குத் தேவையான சக்தி கிடைத்தது. ஆனால் பற்களின் ஈறுகளில் போதுமான வலு இல்லை. அதற்காக கொண்டைக் கடலைகளை இரவில் ஊற வைத்து மறுநாள் முளைவிட்ட பின் அதனைச் சாப்பிட்டார். அதனில் விட்டமின் 'சி' இருந்தது. பற்களின் ஈறுகளுக்குத் தேவையான ஒன்று அது.

அதனைக் கேட்கும் குழந்தையின் மனத்தில் கொண்டைக் கடலையின் உபயோகம் அப்படியே பதியும்.

உடலின் வலுவுக்கு இந்தக் கொண்டைக் கடலை செய்யும் உதவி மகத்தானது. கேரளத்தினர் அதிக வலுவுடனும் அதிக ஆரோக்கியத்துடனும், நீண்ட நாட்கள் உயிர் வாழ்வதுவும் இந்தக் கொண்டைக் கடலையின் துணை கொண்டே. அவர்களது தினசரி ஆகாரத்தில் புட்டும், கொண்டைக் கடலையும் அல்லது வேறு முழுப் பயிறு வகைகளும் நிச்சயம் இருக்கும்.

நாற்பது வயதைத் தாண்டி டயபடீஸ் வந்தவர்களுக்கு டாக்டர்கள் அட்வைஸ் செய்வது — இந்தக் கொண்டைக் கடலையைச் சாப்பிடச் சொல்லியே.

இத்தகைய கொண்டைக் கடலையை சிறு வயது முதல் சாப்பிட்டு வந்தால் வலுவான உடம்பு கிடைக்குமே!

இதோ இன்னொரு கதை —

பிரகாஷ். வயது எட்டு. பெற்றோருக்கு ஒரே பிள்ளை. அதனால் செல்லப் பிள்ளை. எல்லோருக்கும் அவனைப் பிடிக்கும். அப்பா வீட்டிற்கு வரும்போதெல்லாம் அவனுக்குச் சாக்லேட் வாங்கிக் கொடுப்பார். அவன் வீட்டில் சாப்பிடுவதெல்லாம் வெறும் பால் சாதம். ஸ்வீட்ஸ். வேறு காய்கறியோ பழங்களோ எதுவும் சாப்பிட மாட்டான். அல்லது பால் சாதத்திற்கு தொட்டுக் கொள்ள பொறித்த அப்பளத்தைக் கேட்பான்.

"என்னோட குழந்தை ஒரு காய்கறியைத் தொடுவதில்லை" என்று பெற்றோர்கள் பெருமையாகப் பேசிக் கொள்வார்கள்.

அவன் எங்கேயாவது விருந்திற்குச் சென்றால் பிரச்னை.

ஒரு சமயம் ஒரு கிராமத்தில் இருந்த தனது உறவினர் வீட்டிற்குச் சென்றான்.

மற்றக் குழந்தைகள் எல்லாம் பரிமாறிய உணவை ரசித்துச் சாப்பிட இவன் மாத்திரம் எதையும் தொடவில்லை.

இவனுக்காகப் பால் ஸ்பெஷலாக வரவழைக்கப்பட்டுப் பால் சாதம் தரப்பட்டது.

மறுநாள் மற்ற குழந்தைகள் இவனுடன் விளையாடும் போது கையில் விளையாட்டாகக் கிள்ள, அந்த இடம் அப்படியே நீல நிறமாகிப் போய் விட்டது.

இவன் குளிக்கும் போது அந்த இடத்தில் தேய்க்க வலியால் அலறினான்.

டாக்டரிடம் அவனை அழைத்துச் சென்றார்கள்.

டாக்டர் உடனே புரிந்து கொண்டார், அவன் காய்கறிகளோ பழங்களோ சாப்பிடுவதில்லை என்று.

"காய்கறிகளும், பழங்களும் சருமத்திற்கும், பற்களின் ஈறுகளுக்கும் அவசியம் தேவை. இல்லாவிட்டால் இப்படித்தான் தோலின் நிறம் நீலநிறமாகிப் போய் விடும். ஈறுகளில் ரத்தம் கசியும்'' என்றார்.

அது முதல் அவன் காய்கறிகளையும் பழங்களையும் சாப்பிடத் தொடங்கினான். இந்தக் கதையைக் கேட்கும் குழந்தை — அது வரை தினமும் பால் சாதம் மாத்திரமே சாப்பிட்டு வந்த குழந்தை — நிச்சயமாகத் திருந்தி அன்று முதல் காய்கறிகளையும், பழங்களையும் சாப்பிடத் தொடங்கும்.

இந்த விஷயங்களையே க்விஸ் மூலமாகவும், பாடல்கள் மூலமாகவும், விளையாட்டுக்கள் மூலமாகவும் குழந்தைகளின் மனத்தில் பதிய வைக்கலாம்.

இன்றைய நிலையில் விளம்பரங்கள் செய்யும் கெடுதல்கள் ஏராளம். குழந்தைகள் மனங்களில் தவறான அபிப்பிராயங்களை ஆழமாகப் பதிய வைக்கிறது. அதிலும் விளம்பரங்களில் காட்டப்படும் பொருள்களை குழந்தைகள் பயன்படுத்துவது போல காட்டும் போது அந்த விளம்பரங்களில் காணப்படும் பொருள், உடம்புக்கு நல்லது, தேவையானது. அது இல்லா விட்டால் ஆரோக்கியம் கிடைக்காது என்றே நம்பத் தொடங்குகிறது. விதம் விதமான வண்ணங்களில் ஒரு நிமிட ஆகாரம், இரண்டு நிமிட ஆகாரம் என்று விளம்பரப்படுத்தி, டப்பாக்களிலும், பாட்டில்களிலும் அடைத்து விற்கப்படுகிறது. பெற்றோர்களின் பர்சுகளை இளைக்க வைக்கும் விளம்பர யுகத்தில் உண்மையிலேயே சத்தான உணவுகள் எது என்பதை குழந்தைகளின் மனத்தில் ஆழப் பதிய வைப்பது தாய்மாரின் கடமையாகும்.

— கமலநாதன்.

தேங்காய் சாதம் செய்யும் போது ஒரு ஸ்பூன் சர்க்கரைப் பொடியைத் தூவுங்கள். தேங்காய்ச் சாதம் கூடுதல் ருசியுடன் இருக்கும்.

— அலமேலு.

# “என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தது ஏன்.”



நினைவுக்கு வருகிறது — அந்த நாளில் நான் என் மகளின் வயசில் இருந்தபோது வீட்டுத் தயாரிப்புக் கச்சைகள்தான் எங்கள் காலத்து 'சுகாதாரம்'. சமயங்களில் சங்கடமாகத்தான் இருக்கும்.

**ஆனால், காலம் மாறிப்போச்சே**

இன்றோ என் மகள் ஓடியாடித் துடியான வாழ்க்கை நடத்துகிறாள். அதனால்தான் நான் அவளுக்கு கேர்ஃப்ரீ சேனிட்டரி நேப்கின்களைத் தேர்ந்தெடுத்தேன்.



இந்த நீலநிற பிளாஸ்டிக் ஷீல்டு இலைகெடு நேராதபடி பாதுகாப்பு

அணியத் தயார்நிலையில் உள்ள அவை சௌகரியமானவை, சுகாதாரப் பாங்கானவை.

**கேர்ஃப்ரீ முழுமொத்தப் பாதுகாப்புத் தருகிறது என் மகளுக்கு.**

கேர்ஃப்ரீ — சிற்றடக்கமானது, ஒப்பற்ற 'ஒண்டர்ராப்' வெளிப்புற உறையும், 3-வழி பிளாஸ்டிக்ஷீல்டு நீலக் கவசமும் உடையது. ஆகவே, கசிவு உறிஞ்சிக்கொள்வதில் மேம்பட்டது, பாதுகாப்பதில் மேம்பட்டது.

கறைபடியும் சங்கடத்திற்கு வழியே இல்லை. கேர்ஃப்ரீ என்மகளுக்கு சுகவசதியோடு காப்புறுதியையும் அளிக்கிறது. உபயோகித்துப் பார்த்து நம்பிக்கை பெற்ற கேர்ஃப்ரீ பாதுகாப்பை என் செல்விக்குக் கொடுக்க முடிகிறதே என மகிழ்கிறேன்.

**மாறிவரும் இக்காலத்திற்கான கேர்ஃப்ரீ வகைகள்**




| ரெகுலர் | டியோடரன்ட் | எக்ஸ்ட்ரா லார்ஜ் |
|---|---|---|
| சகஜமான பாதுகாப்புக்கு, பத்திர உறுதிக்கு | சகஜமான பாதுகாப்புடனே மணம் கமழும் புத்துணர்ச்சிக்கு. | பலத்த கசிவுகளின்போது கூடுதல் பாதுகாப்புக்கு. இரவோடிரவான உபயோகிப்புக்கு. |

**கேர்ஃப்ரீ.***

**சுகம் மற்றும் பாதுகாப்பு உங்களுக்கு மிகவும் தேவைப்படும் அந்த நாட்களுக்கு.**

*கேர்ஃப்ரீ — ஜான்ஸன் & ஜான்ஸன் யூ.எஸ்.ஏ.-வுடைய ட்ரேட் மார்க் ஆகும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

O&M/4070 TAM

# நீ சும்மா இரு!

## ஜெயம்மா பேசுகிறார்

**நா**ம உயர்றதுக்கும், தாழுறதுக்கும் நாம தான் காரணம்னு சொல்லுவாங்க. ஆனா நமக்குக் கிடைக்கற நண்பர்கள் காரணமாகக் கூட பல மாறுதல்கள் நமக்கு வர்றதுக்கு சான்ஸ் உண்டு இல்லியா?

அந்தக் காலத்துல ஜட்ஜ் சதாசிவ ஐயர்னா ரொம்ப ஃபேமஸ். அவரோட பொண்ணு பார்வதி நாங்கள்ளாம் பாப்பக்கான்னு கூப்பிடுவோம். அவங்க என்னை விட பெரியவாதான். ஆனா அவங்களோட பழக்கம் ஏற்பட்டு, பல ஊர்களுக்கும், ஏன் வெளிநாடுகளுக்கெல்லாம் கூட போய் வந்திருக்கேன். அடேங்கப்பா, அந்தம்மாவோட குணாதிசயங்கள்!

இந்தக் காலத்துல புதுமைப் பெண், தன்னம்பிக்கை, தைரியம்னு என்னென்னவோ சொல்றாளே, அப்போ அவங்களைப் பாத்தா இதுக்கெல்லாம் ஒரு உருவமா அவங்க தெரிவாங்க.

ஸ்டாக் ஹோம்ல ஒரு மேடை நிகழ்ச்சி நடக்க இருந்தது. அந்தக் கலையரங்கம் முழுக்க முழுக்க மரத்தில ஆனது. அதனால எங்க பார்த்தாலும் 'நோ ஸ்மோக்கிங்'னு போர்டு இருக்கும். கூட்டமான கூட்டம் கூடியிருந்தது. மேடையிலே ஒரே ஒருத்தன் சிகரெட் பிடிச்சுண்டு இருந்தான். நான் பாப்பக்கா கிட்ட, ''பாருங்கக்கா, இவங்களே 'நோ ஸ்மோக்கிங்'னு போர்டு போட்டுட்டு இவங்கள்ளயே ஒருத்தன் சிகரெட் பிடிக்கறான். யாரு இவங்களுக்கெல்லாம் சொல்றது'' என்றேன் கிசுகிசுப்பாக.

''ஏன், நான் சொல்றேன்...!'' என்று விறுவிறுப்பாகக் கிளம்பி விட்டார். நான் தடுப்பதற்குள் போயே போய் விட்டார். ஆயிரக்கணக்கான மனிதர்களிடையே அந்த மடிசார் புடைவை கட்டிய பெண்மணி நடந்து சென்றது 'பளிச்'சென்று தெரிந்தது. (அவர் அத்தனை வெளிநாடுகள் பயணத்திற்கும் மடிசார்தான் கட்டிக் கொண்டு வருவார். யார் வியப்பாகப் பார்த்தாலும் கவலைப்பட்டதேயில்லை!)

மேடையில் ஏறி ஓரமாகப் போய் அவன் காதில் குனிந்து பேசியதையும், அவன் உடனே சிகரெட்டை அணைத்து விட்டதையும் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அதே போலத்தான் ஸான் பிரான்ஸிஸ்கோவிலிருந்து ஜப்பானுக்குக் கப்பலில் போய்க்கிட்டு இருந்தோம். ஒவ்வொரு நாள் மாலையும் விருப்பமுள்ளவங்க கலை நிகழ்ச்சி கொடுக்கலாம்னு போர்டு இருக்கும். அதில் அவங்கவங்க கையெழுத்துப் போட்டுப் போயிடுவாங்க. ஒரு நாளைக்குப் பாத்தா பாப்பக்கா பேரு இருந்தது!

''என்னக்கா செய்யப் போறீங்க?''னு கேட்டேன்.

''நீ சும்மா இரு. பாரேன் வேடிக்கையை'' என்றார்.

அன்றைக்கு மாலை ஐநூறுக்கும் மேல வெளிநாட்டவங்க கூடியிருக்கிற அந்தக் கப்பல் மேல் தளத்துல இவங்க எழுந்தாங்க. கடகட'னு சுலோகம் சொல்ல ஆரம்பிச்சுட்டாங்க. அவங்களுக்கு பாஷை புரியலைனாலும் அந்த ராகம், மொழியோட உச்சரிப்புல மயங்கி ஒரே கைதட்டல்!

இப்பல்லாம் நாம யாரு என்ன நெனப்பாங்களோன்னு பயப்பட்டு பயப்பட்டு காரியங்கள செய்யறோம். ஆனா நல்லதை செய்யறதுக்குப் பயப்படவே வேணாம்'னு கத்துக் கொடுத்தது அவங்கதான்.

நம்ம கலாசாரமோ, பண்பாடோ எதையும் அவங்க விட்டதில்லை. ரஷ்யாவில ஒன்பது கெஜ மடிசார் புடைவையை பாத்டப்பில அலசி நீளமா ஜன்னலுக்கு ஜன்னல் கட்டறதை அவங்க வெட்கப்படற விஷயமாவே நினைச்சதில்லே! அதே சமயத்துலே தனக்குத் தெரிந்த இங்கிலீஷ்லேயே எல்லாரிட்டேயும் பேசிடுவாங்க. மனுஷாளோட அவ்வளவு சிநேகிதம், அவ்வளவு பரிவு, அன்பு!

என்னை அவங்க மூத்த பொண்ணுன்னே சொல்லுவாங்க. சும்மா வாயளவுக்கில்லே. மத்தவங்க இது எப்படி நெசமா இருக்க முடியும்னு யோசிக்கிற அளவுக்கு அழுத்தமா சொல்லுவாங்க.

உலகம் பூராத்தையும் அவங்க நேசிச்சாங்க. எங்கேயும் தைரியமா நாங்க போயிட்டு வந்துடுவோம். அவங்களைப் பாத்துத்தான் நான் ஒரு பொண்ணுன்னா எவ்வளவு தைரியம் தன்னம்பிக்கை துணிவோட இருக்கணும், அதே சமயத்துல பாசம், பரிவு அன்போட இருக்கணும்னு கத்துக்கிட்டேன்.

**(இன்னும் வரும்)**



# ஆண்களுக்கும் ஏமாற்றங்கள் உண்டு!

**த**ங்களது இதழில் 18 வயது பெண்மணி ஒருவர் 30 வயது ஆணை மணந்து அதனால் தான் படும் அன்றாட துன்பங்களை/துக்கங்களை தங்களது வாசகர்களிடையே பகிர்ந்ததை, சந்தோஷமே இல்லாமல் சமுதாயத்திற்காக ஒரு 'குடும்ப நாடகம்' போட்டுக் கொண்டு இருக்கும் என்னிடம் என் மனைவி எடுத்து வந்து காட்டினாள். அதற்குரிய விசேஷ காரணம், என் மனைவிக்கும், எனக்கும் ஒன்பது வருட இடைவெளி. வயதில் மட்டுமல்ல. அறிவிலும், எண்ணத்திலும், பிரச்னைகளை அணுகும் முறையிலும் இடைவெளி.

அந்தப் பெண்மணி தன்னுடைய 'குழந்தைத்தனமான' ஆசைகளைக் கூட நிறைவேற்றவில்லை என கணவனை குற்றம் சாட்டுகிறார். எங்கள் பிரச்னையும் ஏறக்குறைய இதே போலத்தான்.

இதில் நான் குறிப்பிட வேண்டியது என்னவென்றால் 30 வயதுக்காரன் 20 வயதுக்காரன் போல் நடந்தால் அது அபத்தமாக இருக்காதா? ஆனால், 20 வயது 30 வயது நபர்க்குரிய மெண்டல் மெசூரிடியோடு நடந்தால் அது பாராட்டுக்குரியதாய் இருக்காதா?

திருமணம் ஆகும் போதே மணமகன் தன்னை விட ஒன்பது, பத்து வயது பெரியவன் என்றால், பெண்ணைப் பெற்றவர்கள், பெண்ணிடம் சொல்ல வேண்டும் 'இவர் மரத்தைச் சுற்றி ஓடிப் பாட மாட்டார்' என்று. அந்தப் பெண் எந்த அளவுக்கு அனுதாபத்துக்கு பாத்திரமானவரோ அதே அளவு என்னைப் போன்ற கணவர்களும் சிறிது புரிந்து கொள்ள வேண்டியவர்களே.

நான் வேண்டிக் கொள்வது என்னவென்றால் Romantic Ideas வைத்திருக்கும் பெண்களே தயவு செய்து தங்களுக்குப் பார்க்கும் மணமகன்கள் அதற்கு ஏற்றார் போல் வருவார்களா எனத் தெரிந்து கொண்டு சம்மதியுங்கள். இல்லா விட்டால் என்னைப் போன்ற கணவன்மார்கள் தினம் தினம் அனுபவிக்கும் அவமானம், வேதனை, இருக்கிறதே நரகம்தான். எங்களின் மனைவிகளுக்கு ஏற்படும் ஏமாற்றம், கோபம், வெறுப்பு காரணமாக குடும்ப வாழ்க்கையே சூன்யமாகி விடும். இல்வாழ்க்கையில் பாதிக்கப்படுவது பெண்கள் மட்டுமல்ல, ஆண்களும் கூட; அதுவும் புரிந்து கொள்ளாத, குற்றம் கண்டுபிடிக்க சந்தர்ப்பம் பார்க்கும் சந்தேக மனைவி கிடைத்தான் என்றால் நாங்கள் எங்கு போய் முட்டிக் கொள்வது? எங்களுக்கு விமோசனம் இல்லை. காரணம் சட்டம் உங்கள் கையில்.

— பாதிக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான ஆண்களின் சார்பாக.

கண்ணன் தேவன் செழுமலைச்
சாரலிலே இயற்கை படைக்குதே
ஒரு மகத்தான தேயிலை.



இயற்கையின் படைப்பில் விளைந்த அற்புதங்களில் ஒன்று: ஓர் அரும்பெரு
சுவையமுதம்—இது கண்ணன்-தேவன் மலைச்சாரல்களுக்கு மட்டுமே
உரித்தான தனிப் பெருமை; கண்ணன்-தேவன் டீ. விளையுமிடம்
தென்னிந்தியாவில் கண்ணன்-தேவன் செழுமலைச் சாரல்—அங்கே...

இயற்கையின் மாயக் கரங்களால் இலட்சிய நிறைவாகக் கலவை
செய்யப்பட்ட தேயிலைச் செல்வம்...இதம்கனிந்த சீதோஷ்ணச் சூழலும்
பனி வானைத் தழுவும் மலைத் தொடரின் பசுமையும், பொன்வெய்யிலில்
குளித்த மண்வளமும் ஒருங்கிணைந்த இயற்கை வரம்...

விளையுதே அதில் இணையிலா வீரிய திடமும் மணமும் பூரிக்கும் இயற்கைக்
கலவைத் தேயிலை: ஒப்பற்ற கண்ணன்-தேவன் ஒன்றுதான்.

பறித்த தோட்டத்திலேயே பசுமையோடு உடனுக்குடன் அடக்கமிட்டு
வருகுது நேராக உங்களிடம்—பதினைந்தே நாட்களில் வருகுது.
அப்படியே முழுமையான புத்தம்புது மண ருசி ததும்ப—உறுதி தரும்
கண்ணன்-தேவன் ஒன்றுதான்.




# கண்ணன்-தேவன் டீ

இயற்கை செய்திட்ட கலவை,
டாட்டா செய்திட்ட பொதிவு.



டாட்டா டீ லிமிடெட்



# குறிஞ்சி மனிதர்கள்

ஜூன் மாதத்துச் சூரியன் கொஞ்சம் கொஞ்சமாய் உக்கிரமாகிக் கொண்டிருந்தான்.

பத்து மணி ஆபீசுக்கு அன்று அநேகம் பேர் எட்டரை, ஒன்பது மணிக்கே வந்து இருக்கையில் அமர்ந்து விட்டனர்.

டெலிஃபோன்கள் உற்சாகமாய் கிணி கிணித்துக் கொண்டிருக்க, டாய்லெட்டில் அரை மணி நேரம் நின்று தலைவாரிக் கொள்கிறவர்கள் கூட ஸீட்டில் கொஞ்சம் தவிப்பாய் உட்கார்ந்திருந்தனர்.

அன்று ஜூன் முப்பதாம் தேதி.

அந்தக் கம்பெனியின் பதவி உயர்வுகளுக்கான ஆர்டர் மற்றும் இன்க்ரிமெண்டுப் பட்டியல் ஒவ்வொரு வருடமும் ஜூன் முப்பது அன்றுதான் வெளியாகும்.

பிரைவேட் கம்பெனியாதலால் மனதுக்குத் தோன்றியபடி இன்க்ரிமெண்ட் போடுவார்கள். சிலருக்கு ஒரு குறிப்பிட்ட தொகை ஒவ்வொரு வருடமும் கூட்டலாய், சிலருக்குப் பெருக்கலாய்...

பரீட்சை முடிவுகள் மாதிரி அதிகாரிகள் டெல்லி தலைமை அலுவலகத்திலிருந்து டெலக்ஸில் பெயர் பட்டியல் வரக் காத்திருந்தார்கள்.

அதிலும் ஹாலின் வலது மூலையில் பெரிய கேபினுக்குள் கிருஷ்ணமூர்த்தி மிகவும் நெர்வஸாக இருந்தான்.

என்றுமில்லாத திருநாளாய் இன்று ஒன்பது மணிக்கே ஆபீசுக்கு வந்து விட்ட எரிச்சல் அவனுக்குள் பரவியிருந்தது.

தனக்கு மிகப் பெரிய அளவில் பிரமோ



ஷனை எதிர்நோக்கியிருந்தான் அவன். வந்ததிலிருந்து புகைத்துப் புகைத்து ஒரு பாக்கெட் சிகரெட் காலியாகி விட்டது.

தன்னை மாதிரியே மானேஜர் நிலையில் இருப்பவர்கள் கேபினுக்குள் ரகசியமாய் நகத்தைக் கடித்துத் துப்பிக் கொண்டிருப் பார்கள் என்று நினைத்துக் கொண்டான்.

அறையில் உட்கார முடியாமல் கதவை சர்ரென்று திறந்து கொண்டு வெளியே வந்தான்.

பெரிய ஹாலில் கிசுகிசுப்பாய் வதந்தி கள் உலாவின. சில பேர் ஜாடையாய் அவனைப் பார்த்து கண்களால் சிரித்துக் கொள்கிற மாதிரியும் அவனுக்குத் தோன்றி யது.

''பிரமோஷன் ஆர்டர் கையில வரட் டும்... அப்புறம் பாருங்கடா... என்னைப் பார்த்துச் சிரிக்கிறவன் அத்தனை பேரும் ஒழிஞ்சிங்க... தீர்த்துக் கட்டிடறேன்.. ராஸ்கல்ஸ்!''

அவன் மனசு பொருமியது. ஹாலைச் சுற்றி வட்டமடித்துக் கொண்டு கேதரீனின் அறைக்குப் போனான்.

கேதரீன் டிவிஷனல் மேனேஜரின் ஸ்டெனோ.

பட்பட்டென்று மிஷினைத் தட்டிக் கொண்டிருந்தவள் அவன் வரவால் பாதிக் கப்பட்டவளாய் தலைநிமிர்ந்தாள்.

''யெஸ் மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி... வாட் கேன் ஐ டு ஃபார் யூ?''

கிருஷ்ணமூர்த்தி தவிப்பைக் காட்டிக் கொள்ளாமல் சிரித்தான். அவள் அறையின் மூலையில் டெலக்ஸ்மெஷின் இருந்தது.

''குட்மார்னிங் மிஸஸ் கேதரீன்... ஜஸ்ட் லைக் தட் வந்தேன்... தாத்தா வந்தாச்சா?''

டிவிஷனல் மானேஜர் செல்வராஜன் அறுபது வயதைத் தொட்டவர். அவரை கிருஷ்ணமூர்த்தி மட்டும் தனிச் சலுகையு டன் 'தாத்தா' என்று கிண்டலாகக் குறிப்பிடு வான்.

கேதரீன் பளிச்சென்று சிரித்தாள்.

''ஓ யெஸ் மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி. அவர் வந்து விட்டார். ஆனால் டெலக்ஸ் வரலை.''

''ஊஃப்... பெரிய டெலக்ஸ்... ஐ ஆம் நாட் பாதர்ட்... நான் சும்மாதான் வந் தேன்.''

விருட்டென்று திரும்பியவனைப் பார்க்க கேதரீனுக்கு உதட்டில் கேலிச் சிரிப்பு பூத்தது. இந்தக் கிருஷ்ணமூர்த்தி சரியான அலட்டல் என்று நினைத்துக் கொண்டாள்.

கிருஷ்ணமூர்த்தி தன் கேபினுக்குத் திரும் பினான். அவன் பெயருக்குக் கீழே ''ஸேல்ஸ் மானேஜர்'' என்ற பித்தளை எழுத்துக்கள் அறைக் கதவில் மின்னியது.

அதன் முகத்தில் ஓங்கிக் குத்த வேண்டும் போலிருந்தது அவனுக்கு. சில விநாடிகள் அந்த எழுத்துக்களை வெறித்தான்.

''டெபுடி டிவிஷனல் மானேஜர்'' என்ற எழுத்துக்கள் அங்கே வர வேண்டும். அதோடு இந்த வருட இன்க்ரிமெண்ட் நூறு ரூபாய்க்குக் குறைவாக இருக்கக் கூடாது. இந்த இரண்டில் ஒன்று நடக்கா விட்டாலும்....

நினைக்கவே கிருஷ்ணமூர்த்திக்கு ஆத் திரத்தில் உடம்பு எரிந்தது.

படாரென்று அறைக் கதவை அறைந்து சாத்தி விட்டுத் தன் இருக்கையில் போய் உட்கார்ந்தான்.

''கிழத்திடம் இந்த இரண்டு விஷயத்தை



ஆர்.கே.பத்மா

யும் நிறைய தடவை சொல்லி ஒப்புக்கொண்டும் விட்டது.. ஆனால் கடைசி நிமிஷத்தில் எதையாவது குறைத்திருக்குமோ?''

கிருஷ்ணமூர்த்தியின் மனம் செல்வராஜனை எடை போட்டது.

அந்தக் கம்பெனிக்கு லட்சக்கணக்கில் ஆர்டர் பிடித்துத் தர தன்னை விட்டால் செல்வராஜனுக்கு வேறு ஆள் இல்லை என்ற கர்வம் அவனுக்கு. அதனாலேயே மிக விரைவில் மிகப் பெரிய அளவில் தன்னை செல்வராஜன் உயர்த்த வேண்டும் என்று அவன் மனது கணக்கிட்டது.

செல்வராஜனின் பரிந்துரைகளின் அடிப்படையில்தான் டெல்லி தலைமை அலுவலகம் பதவி உயர்வோ இன்க்ரிமெண்டோ கொடுக்கும்.

செல்வராஜின் நடத்தையிலேயே சந்தேகம் வந்ததும் கிருஷ்ணமூர்த்திக்குத் தான் தன் ஆயுதத்தைக் கூர்மையாக்கிக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

விறுவிறுவென்று தன் நண்பர்கள் ரெட்டிக்கும், மல்ஹோத்ராவிற்கும் ஃபோன் செய்தான்.

''கிருஷ்ணமூர்த்தி ஹியர்... அங்கே யாரு?''

எதிர்முனை ''ரெட்டி'' என்றது.

''கிரீன் சிக்னல் வரலை இன்னும்... புரிஞ்சுதா?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

''யெஸ்.... புரிஞ்சது'' டக்கென்று டெலிஃபோன் வைக்கப்பட்டது. இதே சங்கேதம் மல்ஹோத்ராவையும் அடைந்தது.

ஒவ்வொன்றும் இருபத்தி ஐந்து லட்ச ரூபாய்க்கான ஆர்டரைத் தரும் பார்ட்டிகள். கிருஷ்ணமூர்த்தி சொல்லும் வரை ஆர்டரைத் தராமல் செல்வராஜனை இழுத்தடிக்க இயலும்.

இவற்றைப் . பெருமளவு நம்பித்தான் செல்வராஜன் தலைமை அலுவலகத்துக்கு விற்பனைத் தொகையை அறிவித்திருந்தார்.

''கிழவா... ஐம்பது லட்சத்துக்கான ஆர்டர் என் கையிலே... என்னை நீ கவனிக்கலேன்னா உன்னை டெல்லி துரத்தும்.''

மனதுக்குள் செல்வராஜனை மிரட்டியதும் திருப்தியாக இருந்தது.

இன்னொரு சிகரெட் உதட்டில் உயிர் பெற்றது.

டிவிஷனல் மானேஜர் செல்வராஜன் தன் அறையில் அமைதியாக உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்தார்.

எதிரே அட்மினிஸ்ட்ரேஷன் நாராயணசாமி. அவர் கையில் செல்வராஜனிடம் கையெழுத்து வாங்க வேண்டிய காகிதங்கள் இருந்தன.

அந்த அலுவலகத்திலேயே பிரமோஷன், இன்க்ரிமெண்ட் பற்றிக் கவலை இல்லாமல் இருந்தவர்கள் அவர்கள் இருவரும்தான்.

செல்வராஜன் வயது வரம்பைத் தாண்டி ஒப்பந்த அடிப்படையில் வருடத்திற்கு அறுபதாயிரம் ஊதியம் என்ற நிலையில் அங்கே இருந்தார். அவரது கான்டிராக்ட் இன்னும் இரண்டு வருடங்களுக்கு நீடிக்கப்பட்டு ஒப்பந்தம் கையெழுத்தும் ஆகி விட்டது.

நாராயணசாமி தன் இருபதாவது வயதிலிருந்து அந்தக் கம்பெனியில் ஊழியர். அடுத்த வருடம் ஓய்வு பெறப் போகிறவர். அவருக்கு வழக்கமான உயர்வுத் தொகை தடங்கலின்றி வந்து விடும். பிரமோஷன் பற்றிய கனவுகள் அவருக்குள் சுத்தமாக இல்லாததால் கவலையற்ற மனிதர்.

''நேத்து ராத்திரி ஷா வீட்டுக்கு ஃபோன் பண்ணிப் பேசினான்'' என்றார் செல்வராஜன் முறுவலோடு.

தன் வயதுக்கு ஏற்றவர் என்பதால் நாராயணசாமியிடம் அவர் எப்போதாவது மனம் விட்டுப் பேசுவார்.

மோதிலால் ஷா கம்பெனியின் எம்.டி. மற்றும் சேர்மனாக இருந்தாலும் செல்வராஜின் வயதில் பாதியைக்கூடத் தாண்டாத இளைஞன் என்பதால் ஷாவை 'அவன்' என்றுதான் குறிப்பிடுவார்.

''பிரமோஷன் லிஸ்டுல விசேஷமா எதுவும் இல்லை. இன்க்ரிமெண்ட் கூட சாதாரணமாத்தான் போட்டிருக்கேன்னான்...'' நாராயண சாமிக்குப் புரிந்தது.

கிருஷ்ணமூர்த்தி கனவு காணும் உதவி டிவிஷனல் மானேஜர் பதவி அவனுக்குக் கிடைக்காது.

''ஆமாம் சார்.... ஆர்டர் பொஸிஷன் டல்லாயிருச்சி... உற்பத்தி ஆளுங்க பாதி நேரம் தூங்கறாங்க... ஷா எல்லாம் கவனிச்சுத்தானே செய்வார்.''

நாராயணசாமிக்கு சமயத்துக்கு ஏற்றபடி பேசுவது கை வந்த கலை.

''நீர் ஒண்ணும் இதைக் காதிலே போட்டுக்க வேணாம்.. டெலக்ஸைப் பார்த்ததும் கிருஷ்ணமூர்த்தி தாதைன்னு குதிக்கப் போறான் பாருங்க'' செல்வராஜின் குரலில் எச்சரிக்கை தெரிந்தது. கூடவே இழையோடிய கிண்டலும்..

''ஆங்... ஆமா... அவன் குதிக்கிறது என்ன புதுசா... வேலையிலே நுழைஞ்சதும் பத்தாவது வருஷமே டிவிஷனல் மானேஜராயிடணும் இந்தக் காலத்துப் பசங்களுக்கு... வேலையிலே முன்ன பின்ன இருந்தாலும்.''

நாராயணசாமி கையெழுத்து வாங்கிய

---

சில நேரங்களில் வெண்ணை உருகும் பொழுது பொங்கி வரும். சிட்டிகை வெந்தயம் தூவிப் பாருங்கள் வழியாது அமுங்கி விடும்.

— ராஜம்.

---

கடிதங்களுடன் நகர்ந்தார்.

செல்வராஜ் சட்டென்று நினைவு வந்தவராய்த் தன் டைரியைப் புரட்டினார். ஜூன் மாத இறுதியில் வந்து சேர வேண்டிய ஐம்பது லட்சரூபாய்க்கான ஆர்டர் பற்றிய குறிப்பைப் பார்த்ததும் அவருக்குச் சொரேலென்றது.

ஆர்டர் இதோ வந்து விடும் என்றானே கிருஷ்ணமூர்த்தி. நாளைக் கழித்ததில் ஜூலை வந்து விட்டது.

செல்வராஜன் அவசரமாக இன்டர்காமில் மூன்றாம் எண்ணை அழுத்தினார்.

"என்னப்பா கிருஷ்ணமூர்த்தி, ரெட்டி; மல்ஹோத்ராகிட்டேயிருந்து வர வேண்டிய ஆர்டர் என்ன ஆச்சு?" என்றார்.

"ம்ம்.... பார்க்கணும்... அப்புறம் என்ன, நியூஸ் ஏதும் தெரிஞ்சுதா டெல்லியிலேர்ந்து?" கிருஷ்ணமூர்த்தி விஷயத்துக்கு வந்தான்.

"நியூஸா... டெலக்ஸைத்தான் எதிர்பார்த்திட்டிருக்கேன்.. எல்லாம் நான் சிபாரிசு செஞ்ச மாதிரியே கொடுத்திருவான்.. நீ முதல்ல ரெட்டியோட பேசப்பா."

செல்வராஜ் டக்கென்று இன்டர்காமை வைத்து விட்டு அவசரமாக டெலிஃபோனை எடுத்து ஆபரேட்டர் ராமனைக் கூப்பிட்டார்.

"கிழம்... அழுத்தக்காரக் கிழம்... விஷயம் தெரியாதுன்னு சொன்னா நான் நம்பிடுவேன்னு நினைப்பு... ஆர்டர் வேணுமா... வாங்கித் தரேன் இரு."

கிருஷ்ணமூர்த்தி படாரென்று இன்டர்காம் ரிஸீவரை அறைந்து வைத்தான்.

ஆயாசத்தோடு நாற்காலியில் சாய்ந்து கொண்டான்.

ராமன் அந்தக் கம்பெனியின் டெலிஃபோன் ஆபரேட்டர். செல்வராஜின் வீட்டுச் சமையல்காரரின் மகன் என்பது யாருக்கும் தெரியாது. செல்வராஜன் தனக்கு சாதகமாக அவனை அங்கே போட்டிருந்தார் அவர்.

"ரெட்டி, மல்ஹோத்ராவோட யாராவது பேசினாங்களா?" கேட்டதும் ராமன், கிருஷ்ணமூர்த்தி மிகச் சுருக்கமாகப் பேசியதைச் சொன்னான்.

"ஒரு மணி நேரம் கழிச்சு மறுபடியும் சொல்லு" என்றார் செல்வராஜன்.

ராமன் அந்தக் குறிப்பைப் புரிந்து கொண்டு வெளியேறினான்.

செல்வராஜன் பலமுறை முயன்றும் ரெட்டியும், மல்ஹோத்ராவும் அவரிடம் அகப்படவேயில்லை.

சோர்ந்து போனார். நெற்றி விண்விண்ணென்று தெறித்தது. ஆர்டர் ஏற்கெனவே கிடைத்த மாதிரி டெல்லிக்கு கணக்கு காண்பித்தாகி விட்டது. இந்த அளவுக்கு வேறு புதிய ஆர்டர்களையும் தேற்ற முடியாது.



குழந்தைகளுக்கு வயிறு உப்புசமாக இருந்தால், சுக்குத் தட்டிப் போட்ட வெந்நீரில் சர்க்கரை கலந்து வெதுவெதுப்பாகக் கொடுத்தால், வாயு கலைந்து மோஷன் ஆகி சரியாகி விடும். வாரத்துக்கு இருமுறை இவ்வாறு தினம் மூன்று வேளை கொடுத்தால், குழந்தை அஜீரணம் இல்லாமல் கலகலப்பாக இருக்கும்.

— பார்வதி.

ஒரு மணி நேரக் கணக்கு முடிந்ததும் ராமனைக் கூப்பிட்டு கிருஷ்ணமூர்த்தி ஃபோன் ஏதும் செய்யவில்லை என்பதை உறுதி செய்து கொண்டு மீண்டும் இன்டர்காமில் அவனைப் பிடித்தார்.

"என்னப்பா... ரெட்டி என்ன சொல்றான்?"

"ரெட்டி ஊர்ல இல்லை சார்... ஹைதராபாத் போயிருக்கான்னு அவன் ஆபீசில சொன்னாங்க. இப்பத்தான் அஞ்சு நிமிஷம் முன்னாடிதான் தகவல் கிடைச்சது."

"எப்ப வருவானாம்?" என்றார் செல்வராஜன் சாதாரணமாக.

"தெரியலையே... மல்ஹோத்ராவும் எங்கேயோ காணும்."

செல்வராஜனுக்குத் தன் கணிப்பு கச்சிதமாய் இருப்பதைக் குறித்து கர்வம் ஏற்பட்டது. கூடவே சன்னமாய்க் கோபமும்.

"பையா... நீ என்னையே டபாய்க்கிறியா?" தனக்குள் சொல்லிக் கொண்டார்.

ரெட்டி, மல்ஹோத்ரா, கிருஷ்ணமூர்த்தி மூவரும் முக்கோணமாய்ச் சேர்ந்திருப்பது அவர் அனுபவக் கண்களிலிருந்து தப்பவில்லை. மூவரும் ஒரே இஞ்ஜினீயரிங் காலேஜ். மூன்று பேரும் ஒன்றாய்ச் சேர்ந்து சாப்பிடுவது, குடிப்பது பற்றி அவர் கேள்விப்பட்டிருந்தார்.

துரதிருஷ்டவசமாக ரெட்டியும், மல்ஹோத்ராவுமே அவர் கம்பெனிக்குப் பெரிய அளவில் ஆர்டர்களைத் தரும் வாடிக்கையாளராய் அமைந்து விட்டார்கள். தான் கோரியிருந்த பிரமோஷன் வராவிட்டால் செல்வராஜனை இழுத்தடிக்கவே கிருஷ்ணமூர்த்தி திட்டம் போட்டிருப்பது செல்வராஜனுக்கு பளிச்சென்று புலனாகியது.

"கிருஷ்ணமூர்த்தி... உன் கொட்டத்தை அடக்கறேன் பாரு... பையா... நீ என்னையா அலைக்கழிக்கப் பார்க்கிறே?" செல்வராஜனின் மனம் கறுவியது.

கேதரீன் கதவைத் திறந்து கொண்டு அவசரமாக உள்ளே வந்தாள். அவள் கையில் டெலக்ஸ் படபடத்தது.

அவர் அதில் கண்களை ஓட்டினார். கிருஷ்ணமூர்த்திக்குப் பிரமோஷன் இல்லை. இன்கிரிமெண்ட் வழக்கமான இருநூறு ரூபாய்தான்.

அவருக்குள் திருப்தி பரவிற்று. கொக்கி யிட்டு அதை கேதரீனிடம் நீட்டினார்.

''அட்மினிஸ்ட்ரேஷன்ல கொடும்மா.''

கேதரீன் தன் பெயருக்கு நேரே இருந்த ஐம்பது ரூபாய் இன்க்ரிமெண்டைப் பார்த்த படி அகன்றாள்.

பர்ச்சேஸ் மானேஜர், புரொடக்ஷன் மானேஜர் பதவியில் இருப்பவர்கள் வாங்கும் சம்பளத்திற்கு அக்கறையாய் உழைத்து விட்டு அமைதியாய் இருக்கும் போது கிருஷ்ணமூர்த்தி மட்டும் பதவி உயர்வுக்குப் பறப்பது எரிச்சலூட்டியது.

''பயல் கொஞ்சம் அசந்தால் என்னையே உருட்டி விட்டு என் இடத்திற்கு வந்து விடுவான்'' முணுமுணுத்துக் கொண்டார். ''கொஞ்சம் மண்டையில் தட்டினால்தான் சரி.''

செல்வராஜன் யோசனையாக இண்டர்காமில் கிருஷ்ணமூர்த்தியை அழைத்தார். சுரத்தில்லாமல் ''ம்ம்'' என்றான்.

''இங்கே வாப்பா சொல்றேன்'' என்றார் கனிவாக.

''ஒண்ணும் வேண்டாம்.''

''ச்சூ... என்ன இது சின்னக் குழந்தை யாட்டம்... இங்கே வா ஒரு விஷயம்'' என்றார். கிருஷ்ணமூர்த்தி கையிடுக்கில் புகையும் சிகரெட்டுடன் அறையில் நுழைந்தான்.

முகத்தில் வெறுப்பு மண்டியிருந்தது. செல்வராஜன் முந்திக் கொண்டு ஷாவைத் திட்டித் தீர்த்தார்.

''கஞ்சப்பயல்... இன்கிரிமெண்ட் நான் ஒண்ணு சொன்னா இவன் ஒண்ணு போடறான்.. லாபம் மட்டும் நாம கொட்டிக் குடுக்கணும்.'' டேபிளைச் சுற்றி வந்து கிருஷ்ணமூர்த்தியின் தோளைத் தட்டினார்.

''உன்னோட அருமை புரியாதவன்... நீ ஆர்டர் கொண்டு வரலேன்னா ஏதுப்பா நமக்கு லாபம்... எவ்வளவு சொல்லியும் சுத்த நன்றி கெட்ட பசங்கடா இந்த முதலாளி வர்க்கமே'' லெக்சரடித்தார்.

கிருஷ்ணமூர்த்தி ஆயாசத்தோடு எழுந்து போனான். கோபத்தில் அவன் கண்கள் ஜொலித்தன. 'கிழம் நடிக்கிறதா உண்மையாய்ப் பேசுகிறதா தெரியவில்லையே' குழம்பினான்.

செல்வராஜன் மதிய உணவிற்காக வீட்டிற்குக் கிளம்பினார். பதவி உயர்வு பெற்ற சில குமாஸ்தாக்களையும், அதிகாரிகளையும் அவர்கள் இடத்திற்கே சென்று வாழ்த்தினார். அளவோடு நடந்து கொள்கிறவர்களை அவருக்கு எப்போதும் பிடிக்கும்.. ஆனால் கிருஷ்ணமூர்த்தி!



கிருஷ்ணமூர்த்தியை மட்டம் தட்ட அவர் மனதுள் ஒரு திட்டம் விரிந்தது...

(2)

"மிஸ்டர் ஷா... நான் செல்வராஜ் பேசுகிறேன்... ஒரு வேண்டுகோள்" என்றார் செல்வராஜ் தன் வீட்டிலிருந்து எம்.டி.யை டெலிஃபோனில் அழைத்து.



"சொல்லுங்க செல்வராஜ் ஜீ, என்ன விஷயம்?"

"இந்தக் கிருஷ்ணமூர்த்தி இருக்கானே... அவனைக் கொஞ்சம் அடக்கி வைக்கணும். கொஞ்சம் ஸ்னப் பண்ணணும்.. நல்லா பளிச்சுனு ஒரு சேல்ஸ் ஆபீசரை நியமிச்சு, வளர்த்து, அவன் அளவுக்குக் கொண்டு வரணும்."

ரெட்டி, மல்ஹோத்ரா ஆகிய வழக்கமான ஆர்டர் தரும் பார்ட்டிகளுடன் சேர்ந்து, தாமதப்படுத்தி, பதவி உயர்வுக்காக அவன் ஆட்டம் போடுவதை வர்ணித்தார்.

"அச்சா... செல்வராஜ் ஜீ! நான் பார்த்துக்கறேன்.. அவனுக்கு ஒரு சரியான பாடம் கற்பிக்கலாம். ஷ்யூர்... உங்க கான்டிராக்ட் நீட்டிப்பு கிடைச்சிடுச்சா?"

"ஓ! கிடைச்சுதே... தாங்க்யூ மிஸ்டர் ஷா" என்றார் செல்வராஜ் திருப்தியோடு. அவர் முகத்தில் வெற்றிப் புன்னகை மின்னியது.

பதினைந்து நாள் டூர் கிருஷ்ணமூர்த்தியைக் கொஞ்சம் உற்சாகப்படுத்தியிருந்தது.

கொச்சின், பெங்களூர் கிளைகளில் வாடிக்கையாளர்களிடமிருந்து வர வேண்

டிய பாக்கி மிகவும் குறைவாகவே வசூலாகி யிருப்பதை டெல்லி பிடித்து டோஸ் விட்டிருந்தது.

இன்க்ரிமெண்ட் பாதியாகக் குறைந்து விட்டிருந்ததும், எதிர்பார்த்த பதவி உயர்வு கிடைக்காததும் கிருஷ்ணமூர்த்தியை ஏறக்குறைய வெறியனாக்கி விட்டிருந்தன.

எடுத்ததற்கெல்லாம் கோபப்பட்டு விசாகப்பட்டினத்திலிருந்து வந்த ஒரு வாடிக்கையாளரிடம் மோதி வர வேண்டிய ஆர்டர் ஒன்றைக் கெடுத்து விட்டான்.

'பையனை சாந்தப்படுத்த வேண்டும்... எதிர்த் திசையில் போய்க் கொண்டிருக்கிறான்...' என்று நினைத்த செல்வராஜன் கிருஷ்ணமூர்த்தியை பெங்களூருக்கும், கொச்சிக்கும் அனுப்பினார். கலெக்ஷனைச் சீராக்கி விட்டு வரும்படி சொன்னார்.

இந்த இரண்டு கிளைகளிலும் இருந்த விற்பனை அதிகாரிகளுக்குக் கிருஷ்ணமூர்த்தியை எப்படி கவனித்துக் கொள்வது என்பது தெரியும்.

அவனுக்குப் பிடித்தமான 'சரக்குகளை' கம்பெனி செலவிலேயே வரவழைத்து திருப்திப்படுத்தி விட்டார்கள். 'ப்ளடி பிரமோஷன்... இல்லையென்றால் என்ன, ப்ளடி இன்க்ரிமெண்ட்... அதுகூடத்தேவையில்லை.. மாசம் ஒரு தடவை இந்த ட்ரிப் கிடைச்சாலே போதும்! திருப்தியாக நாக்கைத் தடவிக் கொண்டான்.

டூரை முடித்துக் கொண்டு அன்று ஆபீசுக்கு வந்த போது அவனுக்கு ஒரு புதிய செய்தி காத்திருந்தது.

டெல்லியிலிருந்து ஷா வந்திருந்தார். ஏதோ இன்டர்வியூ எல்லாம் வைத்து ஒரு புதிய மார்க்கெடிங்க் ஆபீசரை நியமித்திருக்கிறார்கள்.

அவனுக்குள் பொறாமை அமிலமாய் வயிற்றில் சுரக்க ஆரம்பித்தது.

சிகரெட்டைத் தேடிப் பற்ற வைத்துக் கொண்டான். இன்டர்காமில் ஒன்றாம் எண்ணை அழுத்த.

''யெஸ், செல்வராஜன்'' என்ற குரல் மிருதுவாய் ஒலித்தது.

''என்ன புதுசா ஆள் எல்லாம் எடுக்கிற மாதிரி இருக்கு?'' என்றான்.

''ஆமாம்ப்பா... டெல்லிலேயிருந்து ஷா வந்திருந்தான் திடீர்னு. ஹெட் ஆபீஸ்ல பர்ஸனலா செலக்ட் பண்ணியிருக்கான். இங்கே ஃபார்மலா ஒரு இன்டர்வியூ பண்ணிட்டு சேர சொல்லிட்டான்'' என்றார் நிதானமாக.

சோமாகப் பூரணத்தில் சுக்குப் பொடி கலந்து செய்தால் வாசனை இருப்பதுடன் வாயுத் தொல்லையும் ஏற்படாது.

— பார்வதி.

''ஓஹோ! என்ன படிச்சிருக்கான் அவன்... பெரிசா மார்க்கெடிங்க் ஆபீசர்னு குடுத்திருக்கீங்க?'' கிருஷ்ணமூர்த்தியின் குரலில் ஆதங்கம் ஒலித்தது.

''...அவன் இல்லைப்பா... அவள்... எம்.பி.ஏ. மார்க்கெட்டிங்க்.. கோல்ட் மெடலிஸ்ட்... ஷாவோட செலக்ஷன்.''

கிருஷ்ணமூர்த்தி ''ம்ம்'' என்று உதட்டைக் கடித்தபடி இன்டர்காமை வைத்தான். செல்வராஜன் மனதுக்குள் சிரித்துக் கொண்டான.

மார்க்கெட்டிங்க் எக்ஸிக்யூடிவ் என்ற பதவி சேல்ஸ் ஆபீசர் என்பதை விடப் பிரகாசமாய்த் தோன்றியது.

பெண் வேறு... பளிச்சென்று தூக்கி விட்டுவிடுவான். பிரைவேட் கம்பெனியில்... அவனுக்கே போட்டியாகக் கூட வந்து விடலாம் அவள்..

நினைக்கவே கசந்தது. போயும் போயும் ஒரு பெண் அவனுக்கு எதிரியாக...

அவனுக்கு வயிற்றில் அமிலம் மேலும் சுரந்தது.

''வந்து விடுவாயா நீ... வர விட்டு விடுவேனா... வாடி என் முகம் தெரியாத எதிரியே... எம்.பி.ஏ.வா நீ கண்ணா... நான் வெறும் பி.ஈ.தான்... உனக்கு எங்கே கொம்பு முளைத்திருக்கிறது என்று பார்க்கிறேன்... எங்கேயாவது கல்யாணம் பண்ணிக் கொண்டு ஸ்டேட்சுக்கு ஓடிவது தானே... எனக்கு என்ன போட்டியாய்...''

கிருஷ்ணமூர்த்திக்குக் கசந்தது. ஒரு வேளை தன்னை மட்டம் தட்டவே கிழம் ஷாவோடு சேர்ந்து இப்படி ஒரு திட்டம் போட்டிருக்குமோ என்று யோசனையாய் இருந்தது.

எப்படியானால் என்ன... அவளை வளர விட்டால்தானே இங்கே அவள் பிரகாசிக்க முடியும்... ஓடித்து நசுக்கி விடுகிறேன் பார்... ஆம்பிளைகளே திணறுகிறார்கள். இந்தத் துறையில்... பூச்சி மாதிரி... நீ ஒரு பெண்... எம்மாத்திரம்' மனது அலைபாய்ந்தது.

ச்சீ... எவள் வந்தால் என்ன... உதறி விட்டு இருக்க நினைத்தானே தவிர முடியவில்லை.

கேதரீனின் மேஜையின் மேல் அந்தப் பெண்ணின் நியமன உத்தரவுக் காப்பி இருந்தது.

சென்னையைச் சேர்ந்தவளாகத்தான் இருந்தாள். ஆரம்பச் சம்பளமே இவனுக்குக் கம்பெனியில் ஆபீசராய் நியமனமான போது கிடைத்ததை விட அதிகம்.

கேதரீன் வருவதைக் கண்டு சட்டென்று நகர்ந்தான்.

அடுத்த ஒரு வாரத்தில் அவனுக்கு ஏராளமான வேலை இருந்தது.

தினமும் உள்ளூரில் நாலைந்து வாடிக்கையாளர்களைப் போய்ச் சந்திக்க வேண்டி

# கோலாகல வரவேற்பு!

வீடு நோக்கி வருவோருக்கு
நல்வரவளிக்க...சின்னதாய் ஒரு
யோசனை போதும். சின்னதாய்
உதவி புஷ் தரும்.

ீட்டுக்குள் நுழையும்போதே
ணம் மூக்கைத் துளைக்கிறது.
த்தம் புதிதாய் செய்த கேக்...
த்தம் நாவில் நீரூரச் செய்யும்
இளஞ்சிவப்பு-மஞ்சள் நிறம்
ணையாக பதாம், வெனிலா
ணம். அடடே! அருமையான
தங்காய் பர்ஃபி (தெவிட்டாத
ஞ்சுவை). வாயில் போட
வண்டியதுதான் பாக்கி! இளஞ்
ிவப்பு-பச்சை வண்ணத்தில்
வெனிலா சுவையுடன் ஏலக்காய்
ணமும் கூடியது.

**BUSH**

புஷ் ஃப்ளேவர்ஸ்
மற்றும் கலர்களில்
சர்வதேசப்புகழ்
பெற்ற பெயர்




18 ஃப்ளேவர்-களுக்கும் மேல்

BUSH BOAKE ALLEN
(INDIA) LIMITED
St. Thomas Mount
Madras 600 016.

*Marketed by Parry's.*

ஆரஞ்சு சிகப்பு மஞ்சள் பச்சை

BBAL-520/87 TAM D

யிருந்தது.

அரசு நிறுவனங்கள் இரண்டிலிருந்து அவர்கள் கம்பெனி சப்ளை செய்த பொருட்களின் தரம் ஆர்டரில் குறிப்பிட்டதற்கு பொருத்தமாக இல்லை என்று புகார் வந்திருந்தது.

அந்தநிறுவனங்களுக்குப் போய் சம்பந்தப் பட்ட அதிகாரிகளைச் சந்தித்து, அவர்களிடம் வளைந்து, குழைந்து எல்லாவற்றையும் சீர் செய்ய வேண்டியிருந்தது.

தொழிற்சாலைக்குச் சென்று ''ஸேம்பிள் டெஸ்ட்டை'' சரிபார்க்காமல் அரசு நிறுவனங்களுக்குச் சப்ளையை அனுப்பிய டெஸ்பாட்ச் அதிகாரியைப் பிடித்து அர்ச்சனை செய்து விட்டு மிகக் களைத்துப் போய் அலுவலகம் வந்தான் கிருஷ்ணமூர்த்தி.

ஜூலை வெய்யிலில் வதங்கியிருந்தான். மாலை மணி மூன்றாகியிருந்தது.

வழக்கம் போல் தன் அறைக் கதவை படாரென்று காலால் உதைத்துத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தவன் திடுக்கிட்டான்.

அவன் ஸீட்டுக்கு எதிர் நாற்காலியில் அந்தப் பெண் உட்கார்ந்திருந்தாள்.

ரோஸ் ஷிஃபானும், கையில்லாத சட்டையின் விளிம்பில் தெரிந்த தோளின் பளபளப்பும் முகத்தில் அறைந்தன. மெல்லிய ஸெண்ட் மணம் பரவியிருந்தது. ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

கிருஷ்ணமூர்த்தி கதவை உதைத்துத் திறந்து வந்த சத்தத்தில் அதிர்ந்து புத்தகத்திலிருந்து நிமிர்ந்திருந்தாள்.

கிருஷ்ணமூர்த்தி இருக்கையில் அமர்ந்து ஆசுவாசப்படுத்திக் கொண்டான். ''ஐ யாம் ஸாரி'' என்று சொல்லலாம் போலத் தோன்றியது.

ஆனால் ஏதோ ஒன்று அவனைச் சொல்ல விடாமல் தடுத்து விட்டது.

அவள் முகத்தில் பரவியிருந்த சாந்தமும், கண்களின் கூர்மையும், உடம்பின் வசீகரமும் அவனை ஒருவித எரிச்சலுக்கு உட்படுத்தின.

''ஐ யாம் வினிதா... இந்த கம்பெனியில மார்க்கெடிங் எக்ஸிக்யூடிவா சேர்ந்திருக்கேன்'' என்றாள் மென்மையாக.

அவனுடைய எரிச்சல் பூரணமானது.

எழிலான, பளபளப்பான பெண்கள் என்றாலே அவனுக்கு எரிச்சல்தான்.

'சந்தோஷம்' என்று கூட சொல்லாத அந்தக் கரிய முகத்தை வினிதா ஏறிட்டாள்.

கலைந்த தலையும், சிவப்பான கண்களும், சரியாக மடிக்கப்படாத முழுக்கைச் சட்டையும், பொருத்தமில்லாத கலர் பேண்ட்டும் உள்ள அவன் ஏதோ அசுரன் மாதிரி தோன்றினான்.

''முதல்ல கொஞ்ச நாளைக்கு உங்ககிட்டே ஓரியெண்டேஷன்... பயிற்சிக்கு வந்திருக்கேன்.''



தவறிக் கூட கத்தரிக்காய் வாங்கி வந்தால் பீன்ஸோடு சேர்த்து வைத்து விடாதீர்கள். பீன்ஸில் உள்ள நீர்ப்புச் சக்தியால் கத்தரிக்காயும் அழுகி விடுகிறது.

— ராஜம்.

[redacted]

அவனுக்குப் பேசும்போதே இயல்பாய் புன்னகை வந்தது.

ஆனால் அவனுடைய கடுமையை ஊடுருவ முடியாமல் அந்தப் புன்னகை தோற்றுப் போனது.

''ஐ'யம் வெரி டயர்ட்... இன்னைக்கு முடியாது. முடிஞ்சா நாளைக்குப் பார்க்கலாம்...'' பட்டென்று மேஜை டிராவைத் திறந்து சிகரெட் பாக்கெட்டைப் பிரித்து பளிச்சென்று லைட்டரால் பற்ற வைத்துக் கொண்டான்.

'நீ போகலாம்' என்ற பாவனையில் புகையை இழுத்து விட்டபடி அவனைப் பார்த்தவளைப் புரிந்து கொள்ள முடியாமல் வினிதா எழுந்து கொண்டாள்.

''சரி... நாளைக்கு வர்றேன்'' போய் விட்டாள். ஒரு பதவியிலிருப்பவன்... கொஞ்சம் கூட நாகரீகம் இல்லாமல் இப்படித்தான் நடந்து கொள்வானா என்ன... இவனுக்குள் ஏதோ ஒன்று சரியில்லை...

வினிதா யோசித்தபடி தன் இருக்கையில் வந்து அமர்ந்து கொண்டாள்.

அவளைப் பார்த்தவுடனே பல்லைக் காட்டும் ஆசாமிகளைத்தான் இதுவரை கண்டிருக்கிறாள்.

விரட்டியடிக்கிறானே! இவன் மிகவும் வித்தியாசமானவன்.

கிருஷ்ணமூர்த்திக்கு சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த நேரத்தில் ஒரே ஒரு விநாடி தன் செயல் அநாகரீகமோ என்று பட்டது.

சட்டென்று இறுகிக் கொண்டான்.

அழகான பெண்கள்... டெவில்ஸ்... யாருக்கு அனுதாபப்பட்டாலும் இவர்களுக்கு மட்டும் பாவமே பார்க்கக் கூடாது.

அடுத்த வினாடி அவன் மனத்தில் கவிதா தோன்றி மறைந்தாள். அனல் போல ஆத்திரம் அவனுக்குள் பரவியது. எப்படி தூக்கி எறிந்து விட்டுப் போனாள் அவனை... ராட்சசி... கிருஷ்ணமூர்த்தியின் உதடு ஆத்திரப்பட்ட பற்களின் இடையில் சிக்கிக் கொண்டது.

பாவி... வெள்ளைத் தோலைக் காட்டியே அவனை எப்படி ஏமாற்றினாள். ஸ்கூட்ட

# இன்னிசை பாடும் நேரம்




மிராக்கிள் ஐ
—நள்ளிரவில் இன்னிசை ஒலிக்காது.



நேரத்தை நினைவூட்டும்
மணிக்கொருமுறை நினைவூட்டும்
அனைவருக்கும் ஆனந்தம்
தொல்லையற்ற உறக்கம்.




மியூசிகல் கடிகாரங்களிலே இந்தியாவில் முன்னோடிகள்

**Ajanta® QUARTZ**

the touch of tomorrow's technology

பதிவு அலுவலகம்:
திருநின்றவூர் ப்ளாட், த.பெ. எண் 115,
மோர்வி 363 641
போன்: 3627, 2280, 2457, 2433
டெலெக்ஸ்: 0168-212 ATCM

VANITHA


M207


M267


M227


M257

**எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கிறது**

எச்சரிக்கை: எங்கள் தயாரிப்பு அனைத்திலும் 'அஜந்தா' மார்க் உள்ளதா என பார்க்கவும். போலிகளை கண்டு ஏமாறாதீர்.

ரில் போகும் போது கூச்சமில்லாமல் வயிற்றைச் சுற்றிக் கொள்வாள்.

கன்னி மாராவிலும், தாஜிலும் காதோரம் கிசுகிசுப்பாய்ப் பேசியே எப்படி அவனைக் கவிழ்த்து விட்டாள்.

எவ்வளவு பரிசுகள் அழுதிருக்கிறான் அவன் அவளுக்கு... பிறந்த நாள் அது இது என்று...

பீட்ச்... ஊர் சுற்றும் போது தெரியாது. கும்மாளம் போடும் போது தெரியாது... கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்று கிருஷ்ணமூர்த்தி வலியக் கேட்டதும் ஒளிந்து கொண்டாள் தன் அம்மாவின் முந்தானை யில்...

''ஐயோ... என் டாடிக்குத் தெரிஞ்சா கொன்னே போட்டிருவாரு'' போலியாக அழுதாள்.

குறுந்தாடி வைத்துக் கொண்டு செக்கச் செவேலென்று ஃபாரின் மாப்பிள்ளையைக் கல்யாணம் செய்து கொண்டு வெட்கமில் லாமல் அவனுக்கே கல்யாணப் பத்திரி கையை வேறு அனுப்பினாள்...

கிருஷ்ணமூர்த்திக்கு மறக்க முடியாத அடி அந்த அனுபவம்.. வசதியான வீட்டுப் பிள்ளையான அவன் சுற்றி வந்தது கவிதா வின் அழகுக்காக... அவள் அவனைத் தூக்கி யெறிந்தது அவனுடைய அழகின்மைக்காக..

கிருஷ்ணமூர்த்தி தன் வசீகரமற்ற முகத் தைக் கண்ணாடியில் பார்த்து சபித்துக் கொள்வான்.. மறு நிமிடமே அவனுள் கர்வம் பொங்கும்... நான் கருப்புதான்... ஆனால் என் பணம் கருப்பில்லையே... அதற்குத்தானே சுற்றிச் சுற்றி வந்தாள்... டெவில்...

கிருஷ்ணமூர்த்தியின் இதயத்தின் பெரும் பகுதி எக்கச்சக்கமாய் சேதமாகியிருந்தது இப்படித்தான்...

எத்தனையோ வருஷமானாலும் அவள் அப்படி தூக்கி எறிந்ததை அவனால் மறக் கவே முடியவில்லை.

அழகான, வசீகரமான பெண்கள் அவனைப் பொறுத்தவரை அவனுடைய எதிரிகள்.

அவனுடைய ஈகோ மிகவும் அடிபட்டிருந் தது. அந்த அடிபட்ட ஈகோ வேறு ஒருவிதத் தில் அவனை மிகுந்த பலசாலியாய் மாற்றி யிருந்தது.

அவனுடைய தொழில் நுட்ப அறிவு, பேச்சுத் திறன், வாய்ச்சவடால் எல்லாம் சேர்ந்து அந்தக் கம்பெனிக்கு பல லட்ச ரூபாய் மதிப்புள்ள ஆர்டர்களை அவனால் கொண்டு வர முடிந்தது. அந்த வெற்றியே அவனை இறுமாப்புக்குள்ளாக்கியது...

சொந்த வாழ்வில் ஒரு அழகிய பெண் எதிரியாய் மாறியதை மறக்க ஆரம்பித்த நேரத்தில் அலுவலக வாழ்வில் மீண்டும் ஒரு எதிரி ஜனித்திருப்பது அவனுக்கு ஆத்திரத் தைக் கிளப்பியது.

இந்தப் புதுப் பெண் வினிதாவைத் தன் னுடைய பரம எதிரியாகவே அவன் பாவித் தான்.

கிருஷ்ணமூர்த்தி மேஜையில் தன் எதிரே இருந்த சிறு நாள் காட்டியை வெறித்தான்.

ஜூலை இருபத்தி நான்கு. அன்றைய தேதியை பேனாவால் வட்டமடித்துக் கொண்டான்.

'வாடி என் அழகான எதிரியே... ஒரு மாதம்... ஒரே மாதம்தான்... அதற்குள் உன்னை இந்த ஆபீசிலிருந்து அலற அலறத் துரத்தா விட்டால் பார்..., என் பெயர் கிருஷ்ணமூர்த்தி இல்லை....'

அவன் மனம் கறுவியது. வஞ்சகமான எண்ணங்கள் தோன்றின..

### 3

**ம**றுநாள் காலையிலேயே செல்வ ராஜனிடமிருந்து அவனுக்கு அழைப்பு வந்து விட்டது.

செல்வராஜின் எதிரில் அந்த வினிதா அமர்ந்திருந்தாள்.

''வாப்பா... கிருஷ்ணமூர்த்தி... உட்காரு... இவங்கதான் வினிதா'' என்றார்.

''தெரியும்.''

''நேற்றைக்கே மீட் பண்ணோம்'' என்றாள் வினிதா.

இள மஞ்சள் புடைவை என்னை மறுபடி யும் பார் பார் என்றது.

கிருஷ்ணமூர்த்தி தன்னைத்தானே கடிந்து கொண்டு கவனத்தை செல்வராஜிடம் நிறுத் தினான்.

இந்தக் கலர் கலரான உடையெல்லாம் கூட ஒருவிதமான ஆயுதங்களே... முட் டாளே உன்னை வீழ்த்தும் ஆயுதங்களே... எதிரியைப் பார்த்து மயங்காதே...

''இவங்களுக்கு நம்ம பொருட்கள், முக்கியமான வாடிக்கையாளர்கள், கிரெடிட் லிமிட்ஸ், விற்பனை முறைகள், பணம் வசூலிக்க மேற்கொள்ளும் நடவடிக்கைகள், எத்தனை அட்வான்ஸ் வாங்குகிறோம்... எல்லாவற்றையும் விளக்கிச் சொல்லு... முக்கியமான கஸ்டமர்களைப் போய்ப் பார்க்கும் போது இவங்களையும் அழைச்சுக் கிட்டுப் போய் அறிமுகப்படுத்து... கொஞ் சம் கொஞ்சமாய் வேலையைக் கற்றுக் கொண்டு உன் பொறுப்புகளைப் பகிர்ந்து கொள்ளும் அளவுக்கு இவங்களைக் கொண்டு வரணும்... ஷாவே இதைக் குறிப் பிட்டுச் சொல்லியிருக்கார்.. நீ இப்போ ஸினியர் லெவலுக்கு வந்துட்டே... இரண் டாவது வரிசை ஆபீசர்களைத் தயார் செய்யற பொறுப்பு உன்னோடது... உன் னைப் போலவே இவங்களையும் ஒரு வெற்றிகரமான அதிகாரியாகக் கொண்டு வர வேண்டியது உன் பொறுப்பு... ஆல் தி பெஸ்ட்.''



கிருஷ்ணமூர்த்தி தலையசைத்து விட்டு வெளியேறினான். அமைதியாய்த் தன் ரூமுக்குள் நுழைந்தான்.

ஹால் அவனை வேடிக்கை பார்ப்பது குறுகுறுப்பாய் உணர்ந்தான். விவஸ்தை கெட்டதுகள். என்னுடைய நடவடிக்கை களை கவனிப்பதே இவர்களுக்கு வேலை.

நாற்காலியில் சாய்ந்து கொண்ட போது அலுப்பாக இருந்தது. உதவி டிவிஷனல் மானேஜர் என்ற பதவி உயர்வு அவனுக்கு அளிக்கப்பட்டிருந்தால் ஒரு சாதாரண ஆபீசரைப் பயிற்றுவித்து மேலே கொண்டு வருவது போல அவளைப் பயிற்றுவிப்பதில் அவனுக்கு ஆட்சேபணை இல்லை.

பதவி உயர்வு ஏதும் கொடுக்காமல் வெறும் வாய் வார்த்தையாய் அவனை ஸீனியர் என்கிறாரே. வெறும் சாமர்த்தியம். ஆபீஸ் வேலையில் எத்தனையோ தந்திரங் கள் உள்ளன. அதையெல்லாம் நான் இவளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண் டும்.

பிறகு அவளை வைத்துக் கொண்டு என்னை வெளியே அனுப்பி விடுவான் முதலாளி... இதுதானே நிர்வாகம்!

கொக்கின் தலையில் வெண்ணையை வைத்து கொக்கைப் பிடிக்கிற கதைதான்.

உங்களுடைய தந்திரத்தை உடைக்கிறேன் பார். உங்களுடைய கருவியை வைத்தே உடைக்கிறேன்.

இவளுக்குப் பயிற்சியா தர வேண்டும் பயிற்சி... இதற்குள் அவள் வந்து விட்டாள்.

குறிப்பெழுதும் காகிதங்களும் பளபள வென்ற பேனாவுமாய் அவள் நகங்கள் கூட செழிப்பாகச் சிவந்து இருப்பதை கவனித் தான்.

அந்த எழிலின் ஒவ்வொரு வெளிப்

பாடுமே அவனை எரிச்சலூட்டின.

ஆனாலும் எதிரே உட்கார்ந்து ஆர்வமாய் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த பாவனையில் ஒரு எளிமை இருப்பதாகவே பட்டது.

காத்துக் கொண்டிருக்கட்டுமே இன்னும் சிறிது நேரம். சிகரெட்டை எடுத்து டக்கென்று பற்ற வைத்துக் கொண்டான். புகையை இழுத்து ஊதியதில் அறை முழுவதும் பரவியது.

அவளுக்கு அந்தப் புகை சகிக்காமலிருந்தால் ஓடியே போயிருக்க வேண்டும்.

ஏதோ சாம்பிராணிப் புகையின் நடுவே இருந்த மாதிரி அமைதியாய் இருந்தவளின் சகிப்புத் தன்மை அவனுக்கே பளிச்சென்று பட்டது.

ஓ! இவள் அவ்வளவு சீக்கிரம் ஓடி விடமாட்டாள்... கிருஷ்ணமூர்த்தி சிந்தனையை நிறுத்தி கம்பெனியின் பொருட்களைப் பற்றி விளக்கினான்.

அவன் காலேஜில் ஸயன்ஸில் டிகிரி வாங்கி, பிறகு எம்.பி.ஏ., முடித்திருந்தான்

பொருட்களின் அமைப்பு, மூலப்பொருட்கள், தயார் செய்யும் முறை பற்றி அவன் வர்ணித்த விதத்திலிருந்த தெளிவு அவளை மிகவும் கவர்ந்தது.

அவர்களுடைய சென்னைத் தொழிற்சாலை பத்து பொருட்களை உற்பத்தி செய்தது.

சில சாமான்களை டில்லியிலிருந்த ஃபரீதாபாத் ஆலை தயாரித்து அனுப்பியது.

எந்தப் பொருட்களுக்கு யார் முக்கியமான வாடிக்கையாளர்கள், வாடிக்கையாளர்களுக்குப் பொருளின் எந்த அம்சங்கள் பிடித்தமானவை, அதை எடுத்துச் சொல்லி சரக்குகளைத் தள்ளி விடும் முறை என்ன என்பதெல்லாம் விஸ்தாரமாய் அவன் சொல்லிக் கொண்டு போன போது விஷயங்களை எதிர்நோக்குவதில் அவனுக்கு இருந்த கூர்மையான அறிவு பளிச்சிட்டது.

வினிதா கட்டுண்டது போல அந்தத் தடையற்ற வார்த்தை வெள்ளத்தில் மூழ்கியிருந்தாள்.

குக்கரின் காஸ்கட் வளையம் பழையது ஆகிவிட்டால் அதனைத் தூக்கி எறிய வேண்டாம். 1. உடைந்த பக்கெட்டுகளில் மாட்டி வைத்தால் விட்டில் இருக்கும் குப்பைகளைப் போட வைத்துக் கொள்ளலாம். 2. அந்த காஸ்கட்டுகளைப் புடைவைகள் மாட்டும் ஹாங்கர்களாகவும் பயன்படுத்தலாம்.

— ரேவதி.

சிகரெட்டுகள் புகைந்து சாம்பலாயின. ஆஷ்டிரே நிரம்பி வழிந்தது. சாப்பாட்டு நேரம் வரை அவன் தந்த அற்புதமான விளக்கம் அவள் காதுகளை நிறைத்தது.

''என்னுடைய சாதாரண அறிவுக்கு எட்டிய விஷயங்களை உங்களுக்குச் சொல்லி விட்டேன்'' என்றான். கடைசியில்...''உங்களுடைய எம்.பி.ஏ., புத்திசாலித்தனத்தின் முன் நான் ரொம்ப சாதாரணம்... போகப் போக எனக்கே நீங்கள் வகுப்பு எடுப்பீர்கள் என்று நினைக்கிறேன்.''

அவனுடைய சொற்களில் தன்னடக்கமோ, நயமோ, சாதாரண கேலியோ கூட இருக்கவில்லை.. அந்தப் பார்வையில் ஒரு லேசான பகைமை உணர்வின் வெளிப்பாடு இருப்பதாகவே வினிதாவுக்குப் பட்டது.

இந்த வார்த்தைகளை இப்போது சொல்ல வேண்டிய அவசியம் என்ன... தான் எம்.பி.ஏ. படிக்கவில்லை என்று தாழ்மையுணர்ச்சி அவனுக்கு இருக்கும் என்று தோன்றவில்லை. எப்படி இருந்தாலும் அவனுடைய நல்ல தன்மைகளை மட்டும் எடுத்துக் கொள்வோமே என்று நினைத்தபடி வினிதா வெளியேறினாள்.

வேலையில் சேர்ந்த ஒரு மாதத்திற்குள் வினிதா அந்தக் கம்பெனியை எடைபோட்டு விட்டாள்.

ஓஹோவென்று ஓடா விட்டாலும் கம்பெனி படுமோசமாய் நடக்கவில்லை.

பழைய ஊழியர்களுக்குப் படிப்பு குறைவாக இருந்த காரணத்தால் சம்பளம் குறைவாகவே இருந்தது. ஆனாலும் அவர்கள் விசுவாசமாய் உழைத்தார்கள்.

புதிய இளைஞர்கள் பட்டம், உயர் கல்வி என்று காரணம் காட்டி அதிகச் சம்பளம், கூடுதல் அலவன்ஸ் என்று சலுகைகளைப் பெற்றார்கள்.

போட்டி ஓரளவுக்குக் கடுமையாக இருப்பதால் தலைமை அலுவலகம் புதிய இளைஞர்களுக்கு சம்பளத்தை அள்ளிக் கொடுக்கவே செய்தது.

ஆனால் எந்த நேரம் மார்க்கெட்டை கோட்டை விட்டாலும் கம்பெனி படுத்து விடும் என்ற ஆபத்தும் ஓர் மூலையில் காத்துக் கொண்டுதானிருந்தது.

மொத்தத்தில் இங்கே பணியாற்றுவது ஒரு நல்ல அனுபவம்... கூடியவரை நிறையக் கற்றுக் கொள்ளலாம். முயற்சி செய்தால் வெற்றிக் கனியை அறுவடை செய்து நல்ல பெயர் வாங்க முடியும்.

வினிதாவிடம் அந்த முயற்சி ஏராளமாய் இருந்தது. பெண் அதிகாரி என்று அவள் ஒருத்தி மட்டும் இருந்ததால் அனைவருமே பிரியமாக நடந்து கொண்டார்கள்.

சிலர் வலிய வந்து அவளுக்கு உதவினார்கள். யாரோடும் எந்தப் பிரச்னையும் இல்லை... எங்கும் கண்ணியமான உறவு

களே நிலவின. ஒரே ஒரு உறுத்தலாய் கிருஷ்ணமூர்த்தி மட்டும்.

வேலை சம்பந்தப்பட்ட போது நன்றாகப் பேசினான். ஆனால் திடீரென்று குண்டு வீசுகிற மாதிரி ஒரு சொல் அவளைத் தாக்கப் பறந்து வரும்.

அது ஒன்றுதான் அவளுக்குப் புரிய வில்லை. பிறகு அதற்காக அவன் வருத்தம் ஏதும் தெரிவிக்க மாட்டான்...

வினிதா அவன் எப்படி இருந்தபோதிலும் திருப்பித் தாக்குவதில்லை என்று மட்டும் உறுதி எடுத்துக் கொண்டாள்.

அவன் ஏதோ ஒருவிதமான மன நோயாளி போல்தான் அவளுக்குத் தோன்றி னான்.

நோய்தான் என்ன என்று அவளுக்குப் புரியவில்லை. அவளுடைய எல்லையற்ற பொறுமையை கிருஷ்ணமூர்த்தி சில சமயம் மிகவும் சோதித்தான்...

''கிண்டி தொழிற்பேட்டையில் ஒரு கஸ்டமரைப் பார்க்கணும்... வந்திருங்க'' என்பான்.

வினிதா சுற்றித் திரிந்து அந்த இடத்தைக் கண்டுபிடித்து அடைவாள். வெகு நேரம் காத்திருக்க வரவே மாட்டான். அந்தக் கஸ்டமர் வாங்கித் தரும் டீயைக் குடித்து விட்டு அவள் தன் மொபெட்டில் ஆபீசுக்கு விரைவாள்.

சிறிது நேரத்தில் ஃபோன் வரும்.

''நீங்கள் எங்கே போய் விட்டீர்கள் வினிதா... ஆபீசுக்கு ஃபோன் செய்தால் நீங்கள் கிண்டி கஸ்டமரிடம் இருக்கிறீர்கள் என்கிறார்கள். கிண்டிக்குப் ஃபோன் செய் தால் கஸ்டமர் நீங்கள் அப்பொழுதே போய் விட்டீர்கள் என்கிறார்.''

அவளுக்கு அந்தத் தொனியிலிருக்கும் இடக்கு தெளிவாய்ப் புரியும். சன்னமாய்க் கோபம் வரும். ''நான் தரமணியிலிருந்து பேசறேன்.. ஐ.எஸ்.ஐ. ஆபீசரோடு இன்னைக்கு நமக்கு அப்பாயின்ட்மெண்ட் என்பது உங்களுக்கு ஞாபகமில்லைன்னு நினைக்கிறேன்...''

நாளைக்கு என்றல்லவா சொல்லியிருந் தான். ஒரு நாள் முன்னதாக்கியிருக்கிறான் வேண்டுமென்றே...

''நீங்கள் பாவம் இப்போதுதான் கிண்டி யிலிருந்து பாரீஸ் கார்னருக்குப் போயிருக் கிறீர்கள். மறுபடியும் தரமணிக்கு வர முடியாது... சரி சரி... நானே அவரைப் பார்த்து விட்டு வந்து விடுகிறேன்'' என்பான்.

அந்தச் சந்திப்பில் பல விஷயங்களை அவள் கற்றுக் கொண்டிருக்க முடியும். அவளைத் தவிர்த்ததில் சாகசம் புரியும்.

என்ன அற்ப சந்தோஷம் இதில்... முட்டாள்.. எனக்கு அந்த அதிகாரியைச் சந்திக்க வேறு வாய்ப்பு இல்லாமலா போய்

---

இரவா கேசரி செய்யும் போது சில ருக்குக் கட்டிகள் விழக்கூடும். இதைத் தடுக்க எளிய வழி. கேசரிக்கு ஊற்ற விருக்கும் நெய்யில் முக்கால் பாகத்தை இரவையை பொரிக்கும் போது ஊற்றிப் பொரித்து விட வேண்டும். இரவை நெய்யில் சலசலவென்று வறுபட வேண்டும். இவ்வாறு வறுப்பதால் சர்க் கரை கொட்டியதும் ஏற்படும் முணு முணுக் கட்டிகளைத் தவிர்க்கலாம். இரவையும் நன்கு பொரிபட்டு கேசரியும் மிகுந்த மணத்துடனும் சுவையுடனும் இருக்கும்.

— அலமேலு.

---

விடும்... விஷயம் புரியாமலா இருந்து விடும்.. வினிதா தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வாள்.

ஒரு வாரத்தில் குறைந்தது ஆறு வாடிக் கையாளர்களைச் சந்திக்க வேண்டியிருக் கும்.

இரண்டு சாதாரணமான சந்திப்புகள். குளிர் பானம் குடித்து விட்டு ஆர்டரில் கையெழுத்து வாங்கி வரும் சொகுசான சந்திப்புகள்.

மற்ற நான்கு இழுபறிச் சண்டை சமா சாரங்கள்.

''நீ இதைச் செய்யவில்லை... நாங்கள் எங்கள் ஆர்டரில் குறிப்பிட்டது ஒன்று... நீங்கள் சப்ளை செய்தது வேறு... இது சொத்தை... விதிப்படி கால் பங்கு பணம் கழித்துக் கொண்டுதான் தர முடியும்'' என்று முறுக்கிக் கொள்ளும் விதமாய் மற்ற நான்கும் இருக்கும்.

கிருஷ்ணமூர்த்தி எளிதான முதல் இரண் டைத் தான் எடுத்துக் கொண்டு கஷ்டமான நான்கை வினிதாவிடம் தள்ளிவிடுவான்.

தரும்போது இண்டல் வேறு...

''நிறையக் கேள்வி கேட்பார்கள்... அவர் களைத் திருப்திப்படுத்தணும்... எனக்கே கஷ்டம்... உங்களால் முடியும் என்று நம் பிக்கை இருந்தால் போகலாம்...''

''நான் முயற்சி செய்து பார்க்கிறேன்'' என்பாள் சுருக்கமாக.

''செய்யுங்கள், செய்யுங்கள்... நீங்கதான் எம்.பி.ஏ. நேரடித் தேர்வு ஆச்சே... உங்க ளால் செய்ய முடியா விட்டால் எப்படி?''

''எம்.பி.ஏ. வோ... வெறும் பி.ஏ.வோ இரண்டு தரம் அனுபவப்பட்டால் மூன் றாவது தரம் தானாகத் தெரிந்து விடு கிறது... என்ன மிஸ்டர் கிருஷ்ண மூர்த்தி?'' என்பாள் பட்டென்று.,

அதோடு அடங்கிவிடுவான் அப்போது.

ஆனால் அந்த வாக்கியத்திற்கு மறு அடி அவளைத் தாக்க அவன் நாக்கின் நுனியில் தயாராய் இருக்கும்.

என்னதான் படிப்பும் கூரிய அறிவும் இருந்தாலும் அனுபவமின்மை என்ற

குறைபாடு அவனிடம் இருந்தது.

வாடிக்கையாளர்கள் செய்யும் சில தந்திரங்கள் முதல் சந்திப்பிலேயே அவளுக்குப் புரியவில்லை.

அவளுக்குள்ளே இன்னும் சில வெகுளித்தனங்கள் இருந்தன.

புதியவள்தானே, போகப் போகப் புரிந்து கொள்வாள் என்ற பரந்த மனம் அவனிடமும் இல்லாது போயிற்று.

தான் முன்னேற வேண்டும். தான் மட்டுமே விருட்சமாய் வளர வேண்டும் என்ற சுயநலமே அவனுள் மேலோங்கி நின்றது. அவளுடைய மெல்லிய தடுமாற்றங்கள் அவனுடைய கூரிய தாக்குதல்களின் இலக்காகும்.

"நான் அந்தக் கஸ்டமரை எப்படிச் சமாளிச்சிருப்பேன் தெரியுமா?" என்பான். கண்கள் கர்வத்தில் மின்னும்.

"அவங்களுடைய ஒப்பந்தத்திலிருக்கிற அதே பாயிண்டை எடுத்து அவனைத் திருப்பி அடிச்சிருப்பேன்... நீங்க பிரில்லியண்ட் எம். பி. ஏ. வாச்சே... உங்களுக்கு நான் 'கைட்' பண்ணத் தேவையில்லைன்னு விட்டுட்டேன்" உதட்டில் குரூரப் புன்னகை மிளிரும்... "இட்ஸ் ஓகே. உங்களுக்குப் பதிலா டிவிஷனல் மானேஜர்கிட்டப் பேசி நானே சமாளிக்கிறேன்... எனிவே... அடுத்த முறை கவனமாப் பண்ணுங்க" என்பான்.

இதுபோல எத்தனையோ அனுபவங்கள். வினிதா தளர்ந்து விடவில்லை.

அலுவலகப் பணியில் தான் மேலும் மேலும் சோதனைக்கு உள்ளாவது அவளுக்குச் சந்தோஷமே அளித்தது.

அது மேலும் கூராக்கப்பட்ட ஆயுதம் மாதிரியும், நெருப்பில் போடப்பட்ட தங்கம் மாதிரியும் தன் ஸ்திரத்தன்மையை அதிகரிக்குமே தவிர மழுங்கடிக்காது என்ற திருப்தி இருந்தது.

சமயம் கிடைத்தபோதெல்லாம் கிருஷ்ணமூர்த்தி அவளைப் பேச்சில் காயப்படுத்தும் அநாகரீகத்தை அவள் மிக உன்னிப்பாய் கவனித்துக் கொண்டுதானிருந்தாள்.

ஆனால் அவளுக்குள் எல்லை கடந்த பொறுமைதான் நிரம்பி நின்றது. படிப்பு அவளுக்குக் கர்வத்தைக் கொடுக்கவில்லை. பொறுமையைக் குறைக்கவில்லை.

பெண்ணின் பிறவி ஆயுதம் சகிப்புத் தன்மையுடன் கூடிய அன்பே என்பது அவளுக்குத் தீர்மானமாகத் தெரிந்திருந்தது.

அதே ஆயுதத்தை அவள் இறுகப் பற்றிக் கொண்டிருந்ததால் எந்தக் கட்டத்திலும் அவள் கிருஷ்ணமூர்த்தியிடம் நேரிடையாக மோதாமல் கழிக்க முடிந்தது.

பெங்களூர், கொச்சி, ஹைதராபாத், இளைகளிலிருந்த விற்பனை அதிகாரிகள் வினிதாவுக்கு அறிமுகமாயினர்.

கிருஷ்ணமூர்த்தி எல்லாரிடமுமே ஒருவித முரட்டுத்தனத்தோடு நடந்து கொள்வதைக் கவனித்தாள். அதே நேரத்தில் அவனை மறுத்தே பேசாமல், அவன் சொன்ன வேலையைச் சரியாக முடித்துத் தரும் அமைதியான ஊழியர்களுக்கு மேலிடத்தில் போராடி வசதிகளை வாங்கித் தரும் குணமும் அவள் கவனத்தில் பட்டது.

அவனை எதிர்த்துப் பேசிய ஒரு உதவியாளரை எல்லாவிதக் கெட்ட வார்த்தைகளால் திட்டிய கண்றாவியும், கோபப்பட்டு வேறு ஒரு சமயத்தில் பேப்பர் வெயிட்டால் மேஜைக் கண்ணாடியை உடைத்த அவனுடைய ஆத்திரப் போக்கும் மிகப் பிரபலமாய் இருந்தன.

இத்தனையையும் மீறி அவனுடைய தொழில் நுட்ப அறிவின் சிறப்பே அவனை அங்கே தங்க வைத்தது.

வினிதா அவனைச் சீர்ப்படுத்தும் முறை பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தாள்.

குறைந்தபட்சம் தன்னிடம் மோதாமல் சாதாரணமாக நடந்து கொள்ள என்ன செய்யலாம் என்று யோசித்தாள்.

"அவனோட எப்படி வேலை செய்ய நீங்க...? சுத்தக் காட்டானாச்சே அவன்?" என்ற கேள்விகளைப் புன்னகையால் அடக்கி விடுவாள்.

அவனைப் பற்றிய எந்த விமரிசனமும் அவள் வாயிலிருந்து வெளிப்படவே இல்லை. அவள் பொறுமையாக வேலையில் தன்னைக் கரைத்துக் கொண்டாள். எப்படியும் எல்லாக் கஷ்டங்களும் ஒரு நாள் முடிவு வரத்தானே போகிறது என்ற நம்பிக்கையுடன்...

(அடுத்த இதழில் முடியும்)

பொரித்து எடுக்கும் எல்லா குலாப் ஜாமுன் உருண்டைகளையும் சர்க்கரை பாகில் ஊறவைக்க வேண்டும் என்றால் நிறைய பாகு தேவைப்படுகிறது. குலாப் ஜாமுன் தீர்ந்த பிறகு பாகு மிஞ்சி விடுகிறது. இதைத் தவிர்க்க பொரித்த உருண்டைகளில் பாதியை மட்டும் பாகில் ஊற வைக்கவும். மீதி உருண்டைகளை ஒரு எவர் சில்வர் டப்பாவில் போட்டு வைக்கவும். இரண்டு அல்லது மூன்று நாட்கள் கழித்து, முதலில் ஊறவைத்த குலாப் ஜாமுன்கள் தீர்ந்த பிறகு அதே பாகில் மீதி இருக்கும் உருண்டைகளை போட்டு லேசாக பாகை சூடாக்கினால், குலாப் ஜாமுன் மிகுந்த soft ஆக ஆகிவிடும்.

— சீதா ராமனாதன்.



அன்றும் இன்றும் - 3

# உங்களுடைய எதிர்காலத்தைச் சிறப்பாக உருவாக்கட்டும்— சிட்டி யூனியன் வங்கி துணையுடன்!

வேலாயுத ஆசாரியின் வாழ்க்கை பல விதத்திலும் சிறப்பு வாய்ந்தது.

தச்சு வேலை ஒன்றே தனது சொத்தாகக் கொண்டு துவங்கிய அவரது வாழ்க்கையில் இன்று எவ்வளவு முன்னேற்றம்! அவருடைய கைத்திறனும், சிட்டி யூனியன் வங்கியில் அவருடைய மதிப்பும் பல மடங்குகள் பெருகியுள்ளதே!

தனிப்பட்டவர், சிறுதொழில் புரிவோர், தொழிலதிபர் ஒவ்வொரு வாடிக்கையாளரிடமும் தனிக்கவனத்துடன் செயல்படுவது சிட்டி யூனியன் வங்கி.

தேர்ந்தெடுக்கப் பல திட்டங்கள்:

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- ரொக்கப் பத்திரங்கள்
- வாமன விஸ்வரூப வைப்புத் தொகை
- கால வரை வைப்புத் தொகை
- வெளிநாட்டில் வாழ்வோர் சேமிப்புக் கணக்கு

*நாடுவீர் எம்மை—*
*பெறுவீர் நன்மை!*




CUB

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001.

CUB – உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.

MCS/CUB/305




இனிதான இரவுகள் கர்ல்-ஆன்
மெத்தைகளால் ஆரம்பமாகும்.
சௌகரியம் - சுகம் - அழகு
இவற்றின் உன்னதமான கலப்பு.
உங்களின் சுகமான
பூரண தூக்கத்திற்காக -
வருடக்கணக்கில்.

சுகம் - சௌகரியம் - அழகு

**Kurl-on®**

இந்தியாவின் மிக அதிகமாக
விற்பனையாகும் மெத்தைகள்

MASS/KCPL/89

Karnataka Consumer Products Ltd.
Marketing Division: Industry House, 45 Fair Field Road, Bangalore 560 001.
Phone: 70769/72710.
Area Sales Offices & Showrooms: 158 Pycrofts Road, Royapettah,
MADRAS 600 014. Ph: 831710; 46, Sen Gupta Street,
Ramnagar, COIMBATORE 641 009. Ph: 26898(PP).

# திருமணமலர்

## மணமகள் தேவை.

* Wanted a very fair, beautiful graduate bride from good affluent family for tall (5-10–) Iyer B.Tech., (Civil), 31, employed in a reputable construction company as Project Engineer. Haritha gothram, Kartikai star, shuddha jatakam, son of a senior company executive in Bombay. Girl main consideration. Sub-sects among Brahmins acceptable. Reply with horoscope and Particulars to Box No. 1240.

* Wanted a very fair, beautiful educated bride from good, affluent family for a fair, tall, handsome Iyer. Bombay-based Advocate with large established practice and good establishment. Kausika gothram, Makham star. Subsects among Brahmins acceptable. Reply with horoscope and particulars to Box No. 1241.

* வடமாள், ஆத்ரேயா, 29, 5' 5'' சதயம், இரண்டாவது பையன். பெண்கள் இல்லை. பெற்றோர்கள் உள்ளனர். படிப்பு, பி.யு.சியும், தமிழக அரசின் மூன்றாண்டு ஆட்டோமொபைல் இன்ஜினியரிங் டிப்ளமோ, சென்னையில் கம்பெனியில் மாதம் 1300+ போனஸ் Incentive மற்றும் சொந்தத் தொழில் புரியும் ரூ. 6000/- நல்ல வசதியுள்ள குடும்பம். பையன், தவறான ஆபரேஷனால் இடது குதிகாலை மிகச் சிறிய அளவில் தூக்கி நடப்பான். 25 வயதுக்கு உட்பட்ட நல்ல குடும்பத்தின் Middle/Low Income Group, decently employed at Madras மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1242.

* ஆத்ரேய கோத்திரம், வடமான் ஐயர், மூலம், செவ்வாய் தோஷம், டில்லியில் அமெரிக்க நிறுவனம் ஒன்றில், மாதச் சம்பளம் ரூ. 3600/- பெறும், 25 வயது பையனுக்கு, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த அழகும் பண்புமுள்ள 23 வயதிற்குட்பட்ட பட்டதாரி மணப் பெண் தேவை. ஜாதகம் மற்றும் இதர விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1243.

* வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், கிருத்திகை நட்சத்திரம், வயது 31, பி. ஈ. படித்தவர், நல்ல அழகாகவும் சிவப்பாகவும் உள்ளவர். உயரம் 6' 2'' வேலையிலிருக்கிறார். விவாகரத்தானவர். இவருக்கேற்ற கிராஜுவேட், அழகாகவும் தெய்வ பக்தியுள்ளவராகவும் அன்புடன் இருக்கும் நல்ல பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 1244.

* செங்குந்த முதலியார் வகுப்பைச் சேர்ந்த, பி. ஈ. படித்த, பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகப் பணிபுரியும் 30 வயது, உயரம் 174 செ. மீ. பூரம் நட்சத்திரம் உள்ள மணமகனுக்கு, படித்த, அழகான பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1245.

* சோழியவெள்ளாளர்வகுப்பு. வரன், படிப்பு பி. ஏ., உயரம் 5' 2'' சிவப்பு நிறம், வயது 31. வசதியான பண்புள்ள குடும்பம், பிரபலமான உள்ளூர் தனியார் நிறுவனத்தில் வேலை, சொந்த வியாபாரம், போதிய வருமானம் உண்டு. இதே இனத்தில் படித்த, சிவப்பான, பெண் தேவை. குடும்ப விவரங்களுடன் பெண்ணின் ஜாதகத்தையும் அனுப்பி வைக்கவும். பெட்டி எண்: 1246.

* கத்தோலிக்க கிறிஸ்துவ 35 வயதுள்ள இடைநிலை ஆசிரியராகப் பணிபுரியும் (அரசு பள்ளி) மாநிறமான நல்ல தோற்றமுடைய மணமகனுக்குப் படித்த அல்லது தொழில் தகுதியுடைய வேலை பார்க்காத குடும்பப்பாங்கான மணமகள் தேவை. எளியசூழ்நிலையில் உள்ளவர்களும் இக்கற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். சொந்த வீடு, நிலம் உண்டு. விவரங்களுக்குப் பெட்டி எண்: 1247.

* பலிஜா நாயுடு, மத்திய அரசாங்க அலுவலகத்தில் பணிபுரியும் வயது 39 உள்ள மணமகனுக்கு முற்போக்கு எண்ணங்களும், பரந்த மனப்பான்மையுடைய மணமகள் தேவை. பணியில் இருந்தால் நல்லது. இந்துவாக இருத்தல் அவசியம். பெட்டி எண்: 1248.

* தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த இந்து நாடார் சமூக புகை மற்றும் மது பழக்கமில்லாத இராணுவ உயர் அதிகாரிக்கு (கேப்டன் கிளாஸ் 1 கெஜெட்டட் ஆபிசர் 28/165(ரூ.4000) நாடார் சமூக நன்கு படித்த மெல்லிய அழகிய குடும்பப்பாங்கான மணமகள் தேவை. முழு குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1249.

* நைத்ருவ காஸ்யப கோத்ரம், வடகலை 30/163/ரேவதி. நல்ல நிறம், பட்டப் படிப்பு, மதறாசில், டி.வி.எஸ். குரூப்பில், வேலை ரூ. 1500/- சொந்த வீடு. தமிழ் வாலிபருக்கு, நல்ல குடும்பத்தில், நல்ல நிறமுள்ள, ஒல்லியாக, சர்க்கார், நிரந்தர வேலை பார்க்கும் வடகலை, மணமகள் தேவை. (வேலை மதறாசுக்கு மாற்றக் கூடியதாக) பெட்டி எண்: 1250.

* தெலுங்கு தேவாங்க செட்டியார், டெல்லியில் மத்திய அரசில் பணிபுரியும் அனுஷ நட்சத்திரம், வயது 25/164 செ.மீ. பட்டதாரிக்கு அதே இனத்தைச் சேர்ந்த மாநில/மத்திய அரசில் பணிபுரியும் பெண் தேவை. ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 1251.

* சைவ வேளாளர் (சைவ பிள்ளை) கூத்துடையார் கோத்திரம், உத்திராட நட்சத்திரம், 28 வயது சொந்தத் தொழில் புரியும் வசதியுள்ள மணமகனுக்கு, எஸ்.எஸ்.எல்.சி.க்கு படித்த, குடும்பப்பாங்கான பெண் தேவை. ஊர் திருச்சி. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1252.

* ரெட்டியார் வகுப்பு எம். எஸ்.ஸி., பாங்க் ஆபிசர் வயது 36, உயரம் 148 சம்பளம் ரூ. 3700/- மாநிறம் உள்ள திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த பட்டதாரியான சுமாரான அழகும் மாநிறமுமுள்ள மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1253.

* Bombay based Vadama Iyer boy. Ground Engineer, Indian Airlines 31/5'4"/Kousika, fair. From employed/unemployed graduate girls. 24 - 28 years. No horoscope. Details with Nakshathram to Box No.1254

* Wanted tall, good looking, graduate employed bride below 24 years for Telugu Naidu (Kappu) handsome bridegroom Hastham 27, 5.11", Rs.2500/- non-transferable Central Government job at Madras. Sub sects no bar. Apply with horoscope and bio-data to M. Rajalakshmi, Shri Sai Nilayam, 14, Vegavathi Street, Rajaji Nagar, Villivakkam, Madras - 600 049.

* Alliance invited for Bombay

based Tamil Vadama Iyer boy, Kausika Hastham, 170/36 M.Sc., employed in Reserve Bank Bombay from beautiful girls, suitably employed in Bombay or with jobs transferable to Bombay. Apply with full details to Box No.1255

* Iyer/Vadama/Bharathwaja Ayilyam/29/171/2900 Junior Engineer phones. (Widower without encumbrances) invites alliance from employed/un-employed fair graduate girls with good family background. Subsect welcome. Box No. 1256.

* Gavara balija chettiar innocent divorcee (without encumbrances) smart looking B.B.A. groom 39/171/2500 hosiery agent seeks suitable alliance from respectable family. Judicially separated for 9 years. Divorcees/widower acceptable. Box No. 1257.

* Devanga Chettiar/Telugu, working in BHEL, Tiruchy, B.E./30/170, seeks bride below 25, from same caste. Box No. 1258.

* Wanted Vadama brahmin bride employed/un-employed for groom PUC/ITI shadamarushana gothram, sathayam star. No dhosham. fair aged 31 height 170 cm, Employed Southern Rly, Tiruchy. Salary 1200 Own house. Horoscope to Box No. 1259.

* Transferable, employed brides below 30 years for Srivatsa Thenkalai Iyengar groom, bharanai 33/170/2300 employed in Central Govt., Hyderabad. Correspond with horoscopes, full family particulars to Box No. 1260.

* Match for Palghat Iyer Boy, 33 years, 156 cms, Koundanya gothram, Brahacharanam, thiruvonam, working as Steno in MP Electricity Board, Salary 1800/— pm. Employed Grils Transferable to Madhya Pradesh prefered. Box No. 1261.

* Required saiva vellala pillai, spinster graduate bride around 28 for same caste nationalised Bank employed 3500/32/160. Legally divorced mutual petition. No issues/encumberances. Box No. 1262.

* தமிழக அரசு பொறியியல் துறையில் பேராசிரியராக பணியாற்றும் எம்.ஈ., படித்த (பி.எச்டி.) ரூ. 3900/— பெறும் 31 வயது அழகான வசதியான இந்து சோழிய வெள்ளாளப் பிள்ளை மணமகனுக்கு படித்த நல்ல அந்தஸ்தில் உள்ள (டாக்டர், என்ஜினியர், பேங்க் ஆபீசர்) மணமகள் தேவை. பெட்டி எண்: 1263.

* போலியோவினால் நடக்க முடியாமல், சைக்கிள் உபயோகிக்கும் 34 வயது ஆரோக்கியமான, அழகான, மத்திய சர்க்கார் ஆபீஸில் 1700 சம்பாதிக்கும் ஐயர் பையனுக்கு (பி.காம்.,) அழகான நிறமான ஐயர் பெண் தேவை. விதவை, டைவோர்ஸ், சிறிது ஊனம், பரவாயில்லை. வரதட்சணை, நகை, சீர் தேவையில்லை. பெட்டி எண்: 1264.

* வயது 43, உயரம் 178 செ.மீ., தொலைபேசித் துறையில் மாதம் ரூ.2200/— (பிற்பட்ட வகுப்பினர்) சைவம், பள்ளியிறுதி படிப்புடைய, காப்பி, டீ, மதுப் பழக்கமற்ற, கடவுள், மதச் சடங்குகளில் நம்பிக்கையற்ற, தூய தமிழ், கற்றுலா, கலை, இலக்கிய, சமுதாயத் தொண்டில் ஆர்வமுள்ள கட்டொழுங்கு மிக்கவருக்கு, தொலைபேசி/மைய அரசு/பிற துறைகளில் பணியாற்றும் தகுதியுள்ள மணமகள் தேவை. பெட்டி எண்: 1265.

* ஐயர், சங்கிருதி கோத்திரம், பூரட்டாதி நட்சத்திரம், பிரஹசரணம், வயது 32, சென்னையில் தனியார் நிறுவனத்தில் ரூ. 700/— சம்பளம், எஸ்.எஸ்.எல்.சி. படிப்பு, உயரம் 5'5" வரனுக்கு வேலையில் உள்ள பெண் தேவை. வேலைக்கு போக படிப்பு தகுதி உள்ள பெண்ணும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1266.

* ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடமாள், 34 வயது, பூசம், பம்பாயில் நிரந்தர வேலையில் உள்ள பையனுக்கு வேலை பார்க்கும்/பார்க்காத எளிய குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 1267.

* தெலுங்கு பிராமணர் வெல்நாடு பாரத்வாஜம் அனுஷம் வயது 28, எம்.காம்., 5'8" ரிஸர்வ் பாங்கில் ரூ. 2500 சம்பாதிக்கும் வரனுக்கு பெங்களூருக்கு டிரான்ஸ்பர் கிடைக்கும் வேலையிலுள்ள பட்டதாரி மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1268.



* முத்துராஜா இனம், வயது 30, மாதம் நல்ல வருமானம் உள்ள சொந்தத் தொழில் செய்யும் மணமகனுக்கு அதே இனத்தில் 8 முதல் +2 வரை படித்த 20 முதல் 25 வரை வயது உள்ள அழகான (சிவப்பு) மணப்பெண் தேவை. உடனே தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1269.

* பள்ளன் இந்து (ஷெ. வ.) B. E. (Civil) M. E (Struc) சுய தொழில், கட்டிடக் கலை ஆலோசனை, ஒப்பந்தம் தொழில் புரியும் 29 வயது 175 செ.மீ. உயரமும் உள்ள வரனுக்கு தொழில் கல்வி கற்ற (எம்.பி.பி.எஸ் அல்லது பி.ஈ.) இதே இன மணமகள் தேவை. குடும்ப விவரம், ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1270.

* தமிழ் விஸ்வகரும ஆசாரி வகுப்பு, மத்திய அரசு உத்தியோகத்தில் உள்ள 36 வயதுள்ள பட்டதாரி, பார்வையற்றவருக்கு அதே வகுப்பைச் சேர்ந்த (அல்லது) இதர இந்து நடுத்தர வகுப்பைச் சேர்ந்த 23 முதல் 27 வரை வயதுள்ள 10 முதல் 12 வகுப்பு வரை படித்த 5 அடி உயரத்திற்கு குறையாத தமிழை தாய்மொழியாகக் கொண்ட அசைவம் மணமகள் தேவை. குழந்தை இல்லாத விதவைகளும் விண்ணப்பிக்கலாம். கோவை மற்றும் சுற்றுப்புறத்தை சார்ந்தவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1271.

* கம்மவார் நாயுடு, பி.காம்., வயது 30, பம்பாயில் மத்திய அரசு வேலை நல்ல தோற்றம். இந்த வரனுக்கு அதே இனத்தில் 27 வயதிற்குள் மத்திய அரசு வேலை (டெலிபோன், பேங்க், போஸ்டல்) பார்க்கும் நல்ல தோற்றமுடைய பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1272.

* அஷ்ட சாஸ்திரம், வாதூல கோத்திரம், வயது 38, 5'5", அவிட்ட நட்சத்திரம், மனநோய் சிகிச்சை பெற்று குணமடைந்துள்ள இண்டர் மீடியட் ஆர்ட்ஸ் பாஸான, வேலைக்கு போகாத, ஆனால் மிகவும் வசதியும், சொந்த வீடுமுள்ள பெற்றோர்களின் ஒரே மகனுக்கு பத்தாவது வரையாவது படித்துள்ள, குடும்பப்பாங்கான பிராமண பெண் தேவை. தமிழ் தெரிந்த ஏழை, எளிய குடும்ப அய்யர்/அய்யங்கார் பெண்கள், இளம் விதவைகள் விண்ணப்பிக்கலாம். தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: R. Srinivasan, 95, East End 'C' Main Road, 9th Block (East), Jayanagar, Bangalore-560 069.

* இந்து நாடார், வயது 30, சென்னையில் பேன்லி ஸ்டோ

# உங்களுக்காக...



பொதுவாகவே இல்லத்தரசிகளுக்கு பல பிரச்சனைகள் உண்டு.

பள்ளியில் குழந்தைகளைச் சேர்க்கும் போதும், குழந்தைகளுக்கு ஆங்கிலப் பாடங்களில் ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்திக்கும் போதும், குழந்தைகளைப் பற்றி ஆசிரியைகளிடம் விசாரிக்கவும், ஆங்கிலம் தெரிந்திருந்தால் தான் சமாளிக்க முடிகிறது.

பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் போதும், வங்கிகள், தனியார் நிறுவனங்கள் போன்ற இடங்களில் விசாரணை செய்து தகவல் பெறவும் ஆங்கிலம் தெரிந்திருப்பது அவசியமாகிறது.

வேலைக்குச் செல்லும் மகளிர் தங்களது அலுவல் தொடர்பாக ஆங்கிலத்தில் பேச வேண்டிய கட்டாயமான சூழ்நிலை ஏற்படுகிறது. ஓரளவு கல்வித்தகுதியிருந்தும் சிலரால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசமுடிவதில்லை.

ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்ற தயக்கம் ஏற்படுகிறது. இத்தகையோர் சென்னையிலுள்ள விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சியினை மேற்கொண்டால் போதும், தயக்கமின்றி சரளமாக ஆங்கிலத்தில் பேசவும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுதவும் உங்களால் முடியும்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால்மூலம் இப் பயிற்சிகளை மேற்கொள்ளலாம்.

சென்னையில் வசிக்கும் இல்லத் தரசிகளுக்கென காலை 10.30 முதல் 11.30 வரை நேர்முக வகுப்பும் இக்கல்வி நிலையத்தினரால் நடத்தப்படுகிறது.

தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் பம்பாய், கல்கத்தா, குஜராத், டெல்லி போன்ற இந்தியாவிலுள்ள பல பகுதிகளில் வசிக்கும் தமிழ்பேசும் பெண்மணிகள் தபால் மூலம் மிகச்சிறந்த முறையில் பயிற்சி பெற்றுப் பயனடைந்து வருகிறார்கள்.

நீங்களும் இப் பயிற்சியில் சேர்ந்து பயன்பெற கீழ்கண்ட முகவரிக்கு ஒரு கடிதம் எழுதினால் இப்பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் அனுப்பி வைப்பார்கள்.

---

நீங்கள் கடிதம் எழுதவேண்டிய முகவரி.

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**தபால் பெட்டி எண் 4986,**
**9, மேட்லி ரோடு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ. 50/—. தொகையை, 'மங்கையர் மலர்' என்ற பெயருக்குச் சென்னையில் உள்ள ஏதாவது ஒரு வங்கியில் மாற்றக் கூடிய MICR டிமாண்ட் டி ரா ப் ட ா க அனுப்ப வேண்டும். அல்லது மணியார்டர் மூலமாக அனுப்பலாம். போஸ்டல் ஆர்டர் ஒத்துக் கொள்வதில்லை. ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தரவேண்டும். திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்குப் பதில் அனுப்புபவர்கள், "விளம்பரதாரர் பெட்டி எண்...... C/o. மங்கையர் மலர், கிண்டி, சென்னை — 600 032 என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.

ரும், சொந்த வீடும், மாதம் ரூ. 2000/— மேல் வருமானமுள்ள வருக்கு படித்த, குடும்பப்பாங்கான பெண் (விதவைகள், விவாகரத்து பெற்றோரும்) தேவை. இந்து நாடார் வயது 24, படிப்பு +2, ஐ.ஐ.டி. முடித்து தொழில் புரியும், நல்ல வசதியும், செல்வாக்கும், வருவாயும் உள்ளவருக்குப் படித்த, அழகிய, வசதியான பெண் தேவை. தி.க. சுவாமிநாதன், தபால் பெட்டி எண்: 16, காஞ்சிபுரம் — 631 502.

* திருநெல்வேலி சைவ வேளாளப் பிள்ளை, வயது 35, படிப்பு பி.ஏ., தனியார் நிறுவனத்தில், நெல்லையில் ரெப்ரெஸெண்டேடிவாக வேலை. மாத வருமானம், ரூ.1500/— இவருக்கு அரசாங்கப் பணியிலுள்ள பெண் தேவை. வயது 28லிருந்து 33—க்குள் இருக்கலாம். ஜாதி பேதமில்லை. பெட்டி எண்: 1273.

* ஆதி திராவிடர், வயது 35, அரசு வேலை, மாதச் சம்பளம் ரூ. 1300/— பெறும் மணமகனுக்கு வேலையுள்ள/வேலையில்லாத அழகுள்ள மணமகள் தேவை. ஜாதி பேதமில்லை. பெட்டி எண்: 1274.

* நிரந்தரமான தனியார் கம்பெனியில் கௌரவமான உத்தியோகத்தில் ரூ. 2000/— சம்பளம் வாங்கும் 3 குழந்தைகளுள்ள மனைவியை இழந்த 40 வயது வன்னிய குல க்ஷத்திரிய மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த மணமகள் தேவை. பெட்டி எண்: 1275.

* கோவை மாவட்டம், பூர்வீகம் பெங்களூரில் பிரபல பப்ளிக் லிமிடெட் தொழிற்சாலையில் நிரந்தர வேலை, சம்பளம் ரூ. 2150/— தொழில் நுட்ப கல்வி தகுதி. அஞ்சல் வழியில் பட்டப் படிப்பு பயிலும் போயர் (நாயக்கர்) சாதி 32 வயது வரனுக்கு இதே இனத்தில் பெண் தேவை. பெட்டி எண்: 1276.

* தமிழ் ரெட்டியார் வகுப்பைச் சேர்ந்த வெளிநாட்டில் வேலை பார்க்கும் பையனுக்கு 29/5'9"/ மாதச் சம்பளம் ரூ. 13,000 அதே வகுப்பைச் சேர்ந்த, அழகான, பட்டப் படிப்பு படித்த, நல்ல குடும்பத்து பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1277.

* அசோக் லேலண்டில் டெக்னீஷியனாக பணிபுரியும் ஆயில்யம் நட்சத்திரம், 32 வயதான மணமகனுக்கு, நல்ல குடும்பப்பாங்கான மணமகள் தேவை. வேலைக்குச் செல்லும் பெண்ணாக இருந்தால் நல்லது. அப்பா மலையாள விஸ்வகர்மா. அம்மா லிங்காயத் இனத்தைச் சேர்ந்தவர். கலப்புத் திருமணத்தில் விருப்பம் உள்ளவர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1278.

* முஸ்லிம் தமிழ் பேசும் பிரிவு, வயது 30, உயரம் 5'6" மத்திய அரசு நிறுவனத்தில் நிரந்தர வேலை பார்க்கும் ரூ. 2000 மாதச் சம்பளம் பெறும் பட்டதாரி மணமகனுக்கு பட்டதாரி பெண் அல்லது +2 வரை இங்கிலீஷ் மீடியத்தில் படித்த மணமகள் தேவை. முஸ்லிம் உட்பிரிவுகளும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1279.

* தென்கலை, வசிஷ்ட கோத்திரம், டாக்டர், பி.எஸ்.சி., (பேச்சிலர் ஆஃப் சித்தா மெடிசன் & சர்ஜரி) வயது 30, நல்ல உயரம், சிவப்பு நிறமுள்ள வரனுக்கு எம்.பி.பி.எஸ்., படித்த டாக்டர் மணமகள் தேவை. அவரது தம்பி பட்டதாரி, வயது 28, தனியார் கம்பெனியில் வேலை மாதச் சம்பளம் ரூபாய் நாலாயிரம், பாங்க், எல்.ஐ.சி. அரசு வேலையிலிருக்கும் மணமகள் தேவை. வடகலையும் சம்மதம். பெட்டி எண்: 1280.

* Wanted Tirunelveli saiva pillai bride around 23 fair preferably secondary teacher for same caste (B.Sc.,) groom fair slim Indian Railways 1700/28/165 Box No. 1281.

* தமிழ் திருநெல்வேலி அய்யர், ஹரித கோத்திரம், வயது 30, பூரட்டாதி, எஸ். எஸ். எல். சி. படித்த, பம்பாயில் சொந்த வீடு, நல்ல வேலை, சௌகரியங்களுடன், அழகாக உள்ள பையனுக்கு நல்ல வேலையில் உள்ள, அழகான, குடும்ப மணமகள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1282.

* Alliance invited from good-looking affectionate graduate for a middle Management Iyer Bank Officer 36/170/6500 Divorcee without encumbrances pious disposition apply to Box No. 1283.

* Wanted beautiful well qualified bride for fair Hindu Post-graduate Nationalised Bank Officer. 38/158/5000 propertied. Divorcee. Caste no bar. Brahmins/Employed preferred. to Box No. 1284.

* Alliance invited from graduate SKY practitioner preferably Vegetarian girl for a Civil Engineer in TNEB, Pallar, aged 34, Caste religion no bar. Box No. 1285.

* I am a 28 years old, broad-minded, good looking, and belonging to a very well placed Brahmin Boy, seeks bride deaf & dumb, or blind or any physically handicapped from very well placed family. I am ready to settle my life any where in the world. Caste & Religion no bar. Full details to Box No.1286

* Tamil Iyer groom Vadama Kaundinya 31, 167, Ph.d., Elec., Engg., employed in Canada invites alliance from graduate science/engineering cultured, interested in Music, literature. Box No. 1287.

* வாத்திமா ஐயர், சுவாதி நட்சத்திரம், பாரத்வாஜ கோத்திரம், 29 வயது, எஸ். எஸ். எல். சி., ரயில்வே வேலையில் உள்ள (ரூ. 1000) வரனுக்கு இதே பிரிவு (அ) வடமாள் பிரிவைச் சேர்ந்த

வேலைக்குச் செல்லும் பெண் தேவை. பெட்டி எண்: 1288.

* Alliance invited from employed Girls for Ashtasahasram Bharadwaja Moolam 26/170/1800 D.Pharm. Employed in BARC Bombay. Reply Box No.1289

* வடமாள் — நைத்ருப காசியப கோத்திரம் — பூரட்டாதி, (வயது 26, உயரம் 6' 6" சம்பளம் Rs. 1600/- Jr. Officer, HARD CASTLE & WAUD Mfg. Co. Ltd., Madras Branch — இல் பணிபுரியும் ஓரளவு வசதியுள்ள பட்டதாரி பையனுக்கு — குடும்பப்பாங்கான — உத்தியோகம் உள்ள பெண் தேவை. பெட்டி எண்: 1290.

* தேசிய மயமாக்கப்பட்ட வங்கியில் ஆபீசராக ரூ. 4000/- சம்பளம்பெறும் வள்ளுவர் இனம், 31 வயது, மாநிறம், 5' 4" பட்டதாரி, ஜாதகமில்லாத வரனுக்கு அதே இனத்தில் பட்டதாரி, சிவப்பான, 5 அடி உயரம், 24 — 27 வயதில், ஓரளவு வசதியுடைய லட்சணமான பெண் தேவை. பிராமணர் நீங்கலாக மற்றவரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1291.

* 36 வயதுடைய இசை வேளாளர் வகுப்பினரைச் சேர்ந்த வக்கில் தொழில் பார்க்கும் பி. ஏ. பி. எல். படித்த மாதம் ரூ. 1500/- வருமானமுடைய இளைஞருக்கு சென்னையில் வேலை பார்க்கும் ஒரு நல்ல பெண் தேவை. தோஷம் இல்லாத ஜாதகம். ஜாதகத்துடன் அணுகவும். ஜாதி பேதமில்லை. பெட்டி எண்: 1292.



## மணமகன் தேவை

* செங்குந்தர் பெண் எம்.ஏ., படித்து ஆசிரியை வேலை 35 வயது முதல் 40 வயதிற்குள் மணமகன் தேவை. ஹஸ்த நட்சத்திரம், தனியார் கம்பெனியிலோ அல்லது கவர்ன்மெண்ட் வேலையோ ஏதாவதொரு வேலையில் இருப்பவராக இருக்க வேண்டும். எந்த கெட்டப் பழக்கமும் இல்லாமல் இருப்பவராகவும் அமைதியான சுபாவமும் உடையவராகவும் இருத்தல் முக்கியம். சமமான படிப்பு கட்டாயமில்லை. பெட்டி எண்: 2288.

* பரணி நட்சத்திரம், பாரத்வாஜ கோத்திரம், பிரஹசரணம், தபால் பிரிவில் வேலை பார்க்கும் 30 வயது பட்டதாரி பெண்ணுக்கு மத்திய/மாநில அரசு/வங்கி/எல்.ஐ.சி.யில் வேலை பார்க்கும் மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2289.

* சோழிய வெள்ளாளர், பி.எஸ்ஸி, பி. டி. 35 வயது. செவ்வாய் தோஷமுள்ள பெண்ணிற்கு, தகுதியான, செவ்வாய் தோஷமுள்ள, வேலையில் உள்ள, மணமகன் தேவை. பெட்டி எண்: 2290.

* பிரஹசரணம், கௌண்டின்ய கோத்திரம், அவிட்டம் நட்சத்திரம், சுத்த ஜாதகம், (தஞ்சாவூர்) எம். எஸ்ஸி படித்து தென்னக ரயில்வேயில் பணிபுரியும் அழகிய சிவந்த நிறமுள்ள 27 வயது ஆகும் பெண்ணிற்குத் தகுந்த வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2291.

* நகராட்சி மருத்துவமனையில் மருத்தாளுனராகப் பணிபுரியும் ரூ. 1500 — க்கு மேல் சம்பாதிக்கும் 30 வயதுடைய தாய் தகப்பனற்ற பூர்வீகச் சொத்துடைய சுற்றத்தாருடைய மணமகளுக்கு கற்ற வேலையிலுள்ள குணமான மணமகன் தேவை. வேலையிலுள்ள திக்கற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். விவரங்களுக்கு பெட்டி எண்: 2292.

* பிராமணாள், வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், உத்திர நட்சத்திரம், முதல் பாதம், 21 வயது, 5' 2" உயரம், சிவப்பான, அழகான, எஸ். எஸ். எல். சி. படித்து, வேலைக்குச் செல்லாத, அடக்கமான, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு வரன் தேவை. விரைவில் எளிய திருமணம். உயர்ந்த உள்ளம் கொண்டவர்கள் ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2293.

* சைவப் பிள்ளைமார் வகுப்பு, நேஷனல் இன்ஷியூரன்ஸ் கம்பெனியில் கிளார்க், மாத ஊதியம் ரூ. 1720/-, பி. காம்., வயது 22, உயரம் 5' 4" மாநிறம், ஆயில்ய நட்சத்திரம், 4 — ஆம் பாதம், குடும்ப நிர்வாகத்தில் தேர்ச்சியுள்ள பெண்ணிற்கு. அதே இனத்தில் மத்திய/மாநில அரசு அல்லது அரசு நிறுவனம்/சிறந்த கம்பெனியில் நிரந்தரப் பணியிலுள்ள மணமகன் தேவை. ஜாதகத்துடன் பெரியவர்கள் மூலம் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2294.

* இந்தியன் ரோமன் கத்தோலிக்க மதம், உயர்ந்த வகுப்பு, நல்ல படிப்பு, சிவப்பு நிறம், உயரம் 5' 3" வயது 34, அதிக வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணிற்குத் தகுந்த உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த எந்த மதத்தில் உள்ளவர்களும் விண்ணப்பிக்கலாம். குறிப்பு: வசதி, படிப்பு, தொழில் இவைகளுக்குத் தகுந்தது போல் செய்யப்படும். பெட்டி எண்: 2295.

* வடமாள், ஆத்திரேய கோத்திரம், பூரட்டாதி, வயது 23, வரதட்சணை, சீர், நகை அதிகம் கேட்காமல், குடும்பத்திற்கேற்ற பெண் தேவை என நினைக்கிற வடமாள் பையன்கள் விண்ணப்பிக்கலாம். அய்யர் பிரிவில் உட்பிரிவுகள் சம்மதம். தாரமிழந்தவரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 2296.

* உத்திரட்டாதி, ஆத்ரேய கோத்திரம், வடகலை ஐயங்கார், மாத வருமானம் ரூ. 1500/- தாலுகா அலுவலகத்தில் உதவியாளராகப் பணிபுரியும் 34 வயதுடைய பெண்ணிற்கு ஐயங்கார் பிரிவைச் சேர்ந்த படித்த வேலையில் உள்ள வரன்கள் தேவை. பெட்டி எண்: 2297.

* பிரஹசரணம் ஸ்ரீவத்ஸ கோத்திரம், அனுஷ நட்சத்திரம், 27, பி.ஏ. (பொருளாதாரம்) வேலைக்குச்செல்லாத, குடும்பப்பாங்கான, ஒரே பெண்ணிற்கு மத்திய/மாநில அரசு, வங்கி பொதுத் துறை நிறுவனங்களில் பணிபுரியும் 1,500—க்கு மேல் சம்பளம் பெறும் ஐயர் உட்பிரிவில் உள்ள மணமகன் தேவை. திருமணம், சீர் வகைகள் சிறப்பாகச் செய்யப்படும். பெட்டி எண்: 2298.

* வடகலை ஐயங்கார், உத்திர நட்சத்திரம், ஆத்ரேய கோத்திரம், உயரம் 150 செ.மீ., 25 வயது சென்னையில் தனியார் துறையில் வேலை பார்க்கும் பெண்ணுக்கு. சென்னையிலேயே தனியார், மாநில அல்லது மத்திய அரசில் பணிபுரியும் வரன் தேவை. பெண் வேலை பார்க்க வேண்டும் என்றால் எப் எப்பகுதியும் சம்மதம். பெட்டி எண்: 2299.

* Alliance invited from preferably Calcutta/Bombay based Iyer Doctors/Engineers/CAs, for MBBS girl, 28/155, slim, good-looking, Brahacharanam, Koundinyam/Utthiram, Suddha Jathakam. Decent marriage. Horoscopes, particulars to Box No. 2300.

* Correspondence invited from suitable boys from Mudrasa Naidu sect for a slim, beautiful spectacled, 27 years, 5-3—Hastham Star, respectable family, post graduate, diploma in

Computer Programming, unemployed early decent marriage. Reply with horoscope to Box No. 2301.

* Wanted suitable bridegroom for vadama Iyer Girl, age 29, Studied S.S.L.C., self-employed, owning Type Institute at Madras. Star Pooradam, Bharatwaja Gothram, Sub-sect no bar. Box No. 2302.

* Wanted broad minded Groom for Vadyama/Nidandanya Gothram/Rohini/very fair well trained domestically & home loving completing B.A. knowing shorthand/typewriting. Can do all work inspite of slight defect in right-hand. Reply to Box number with horoscope and other details. Sub caste no bar. Box No. 2303.

* Alliance invited from well settled bridegroom below 30 years Hyderabad based for 21 years girl graduate employed very fair. Athraya uthram vadama. Box No. 2304.

* Wanted any Saiva Mudaliar, cultured very decently employed, Assistant Prop. Officer Bank, L.I.C., C.A., Engr, Doctor, aged 32, 34 for fair sisters emploved 153, 154 good house workers. Foreign, employed also welcome. Box No. 2305.

* Wanted bride-groom for saiva vellala pillari girl, 22 years, +2, Shorthand/Typing Higher grade, 5-1--, slim domestically well trained, Tailoring. Alliance from parents of well settled groom around 28 years. Preferably Govt/Bank employed sought reply with horoscope and other details. Box No. 2306.

* Alliance invited from decently employed Iyer bachelor groom aged 39-42 for Brahacharanam Gauthama Aswathi cultured Post-graduate employed Girl 37/160. Sub-sect no bar. Apply to Box No. 2307.

* Suitable alliance proposals invited for girl smartha/brhacharanam/haritha/poosam/post-graduate/34 years/165 cms, tall Technical Executive in Central Govt., organisation at Madras. Sub-sect no bar. Contact to Box No. 2308.

* Alliance invited for-Kashyapa Makam, Vadamal Girl, S.S.L.C., 30/150 cms, goodlooking domestically trained. Early marriage. Boys send horoscopes with Bio-data to Box No. 2309.

* 24 வயதான, சிவப்பு நிறமுடைய, அழகான, பி.எஸ்.சி. படித்திருக்கும், வசதியான சோழிய வேளாள பெண்ணிற்கு மணமகன் தேவை. அதே இனத்து என்ஜினியர், டாக்டர், பாங்க் ஊழியர்கள் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 2310.

* வடமாள், பாரத்வாஜம் கேட்டை, பி.ஏ. டைப்பிங் லோயர் ஹிந்தி ராஷ்டிரபாஷா 5'3", 22 வயது அடக்கமான அழகான குடும்பப்பாங்கான பெண்ணுக்கு ஐயர் பையன் தேவை. 1 வயதில் போலியோ வலது கால் சிறிது பாதிக்கப்பட்டது. இப்போது நடந்தால் எந்தவித மாறுதலும் தெரியாது. உட்பிரிவு சம்மதம். பரந்த, தியாக மனப்பான்மை உள்ளவர்கள் ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2311.

* சைவ வேளாளர் பிள்ளை, வயது 39, அரசு வேலை, 5 அடி உயரம், மாநிறம், பெண்ணிற்கு அரசு நிறுவனத்திலோ, தனியார் நிறுவனத்திலோ வேலை பார்க்கும் 45 வயதுக்குள் உள்ள சைவ வேளாளர் வரன் தேவை. மனைவி இழந்தவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 2312.

* சோழிய வேளாளர் வகுப்பைச் சேர்ந்த பி.எஸ்.சி., பி.எட்., பெண்ணிற்கு இதே குலத்தில் மத்திய/மாநில பணியில் உள்ள மணமகன் தேவை. பெண் தனியார் மெட்ரிகுலேஷன் பள்ளியில் நிரந்தர வேலை. குடும்ப விவரங்களுடன், ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2313.

* மாதம் ரூ. 300/- மாநில அரசு பணியில் தொகுப்பு ஊதியமாக பெறும் 37 வயது பூராடம், வடமாள், பாரத்வாஜ கோத்திரம் பெண்ணிற்கு மணமகன் தேவை. தாரமிழந்த விவாகரத்து பெற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். ஐயரில் உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 2314.

* வள்ளலார் கொள்கையைக் கையாளும் தமிழ் இந்து வயது 28, உயரம் 5'2" பங்களூரில் ஆசிரியை வேலையிலிருக்கும் மணமகளுக்கு நல்ல குடும்பத்தைச் சேர்ந்த அரசு நிறுவனத்தில் பணிபுரியும் 34 வயதுக்குள் மணமகன் தேவை. எளிய திருமணம். ஜாதிபேதமில்லை. பெட்டி எண்: 2315.

* சோழிய வேளாளர், எஸ்.எஸ்.எல்.சி., படிப்பு, வயது 20, நல்ல சிவப்பு நற்குணங்கள் நிறைந்த மணமகளுக்கு இதே இனத்தைச் சேர்ந்த திருச்சி, தஞ்சாவூர், கோவை நகரங்களில் மாநில/மத்திய அரசு/பாங்க் நிறுவனங்களில் பணிபுரியும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2316

* ஐயர், பிரஹசரணம், சங்கிருதி கோத்திரம், மகம், வயது



24, சென்னையில் தனியார் கம்பெனியில் ஸ்டெனோவாக பணிபுரியும் அழகுள்ள குடும்பப் பாங்கான பெண்ணிற்கு நல்ல வேலையில் இருக்கும் மணமகன் தேவை. வயது 32-க்குள் இருக்க வேண்டும். பெண்ணிற்கு தந்தை இல்லை. உட்பிரிவுகள் சம்மதம். தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: ஆர். ராஜன், 6ஏ. இளங்கோ தெரு, பொன்மலை பட்டி, திருச்சி - 620 004.

* தஞ்சை மாவட்டத்தில் தனியார் உயர்நிலைப் பள்ளியில் செகண்டரி கிரேடு ஆசிரியையாகப் பணிபுரியும் 20/156/1600 மாத்வ பிராமண ஆறுவேலு கன்னடம் ஹரித்ஸ கோத்திரம் பெண்ணுக்கு 26 வயதுக்குள் நல்ல வேலையில் உள்ள மேற்படி இன மணமகன் தேவை. பெட்டி எண்: 2317.

* மாநிறமுள்ள, வயது 27, பி.ஈ.,(சிவில்) என்ஜினியரிங் படித்து உதவிப் பொறியாளராக ஸ்டேட் கவர்ன்மெண்டில் பணியாற்றும் பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. டாக்டர், எஞ்ஜினியர், அல்லது பாங்க் ஆபீசர்ஸ் விண்ணப்பிக்கலாம். தந்தை மலையாள விஸ்வகர்மா. தாய் லிங்காயத் இனத்தைச் சார்ந்தவர். கலப்பு மணத்தில் விருப்பம் உள்ளவர்கள ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2318.

* வயது 32, புதுவையில் அரசுப் பணி. ரூ. 2100 செங்குந்த முதலியார் பெண், அதே இனம், வயது 32-37 உள்ள மணமகன் தேவை. பட்டம் பெற்று அரசு (அ) தனியார் துறையில் பணிபுரிபவராக இருத்தல் வேண்டும். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2319.

* வடமாள், ஆத்ரேய கோத்திரம், மூலம், 25 வயது, +2 படித்த, அழகான, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு, 35 வயதிற்குள், நல்ல பழக்க வழக்கம், இரக்க சிந்தனையுள்ள, எளிய குடும்பத்திலிருந்து மணமகன் தேவை. பெண்ணிற்கு போலியோவினால் இடது கால் சற்று ஊனம். நடக்க வேலை செய்ய சிரமம் இல்லை. நல்ல முறையில் திருமணம்

மங்கல
சௌபாக்கியத்தின்
சின்னம்

**ஐடெக்ஸ்**
பூர்ணிமா குங்குமம்
matt finish

ஐடெக்ஸ் 50 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்




அரவிந்த் லாபரடரீஸ், சென்னை 600 033.

# ❛❛எனது நம்பிக்கைக்கு உரிய மைசூர் சந்தன சோப் வழங்கிடும் மகத்தான புதிய படைப்பு❜❜




அறிமுகப்படுத்துகிறோம்

புதிய

"BEST QUALITY"

**Mysore** BAR

100% BLUE DETERGENT

from the makers of TOTAL DETERGENT BAR




உங்களுக்கு விருப்பமான மைசூர் சாண்டல் சோப் தயாரிப்பாளர்கள் ஒரு இனிய அற்புதத்தை அளிக்கிறார்கள்.

மைசூர் டிடர்ஜெண்ட் பார்:- நூறு சதவிகித நீல டிடர்ஜெண்ட் பார் ஆன இது உங்களது துணிகளுக்கு மென்மையான சலவை அளிக்கிறது. ஒவ்வொரு சலவைக்கும் பின்னும் புதுமையான ஒளிமிக்க தோற்றத்தை துணிகளுக்கு அளிக்கிறது.

மைசூர் டிடெர்ஜெண்ட் பார்:- டிடர்ஜெண்ட் பார்களிலேயே சிறந்தது பல சலவைகளை அளிக்கும் சக்தி வாய்ந்தது.

**சக்தி வாய்ந்த வெளுக்கும் தன்மையால் உங்கள் ஆடைகளை பிரகாசிக்கச் செய்கிறது**







**கர்நாடகா சோப்ஸ் அண்ட் டிடெர்ஜென்ட்ஸ் லிட்.**
**பெங்களூர் 560 055.**

GOLDWIRE

செய்து தரப்படும். ஐயரில் எந்த உட்பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 2320.

* வன்னியர் குல க்ஷத்திரியர், பி.எஸ்.ஸி., மத்திய தொலைபேசி இலாகா, ரூ.1300/— 23 வயது. உயரம் 5'2" அழகிய பெண்ணுக்கு அதே இனத்தில் இஞ்ஜினியர்/பாங்க்/இன்சூரன்ஸ்/மாநில/மத்திய அரசு பணியில் ஆபீசர் கிரேடில் வரன் தேவை. ஜாதகத்துடன் குடும்ப விபரம் எழுதவும். பெட்டி எண்: 2321.

* Alliance invited from grooms employed in Govt/Bank/Reputed companies for a homely well trained graduate/23 years/5'1" fair/swathi/bharadwaj/vadama un-employed bride (having sevva dosham) Subsects no bar. Box No. 2322.

* ஐயர், கௌண்டன்ய கோத்திரம், அஸ்தம், வடமாள், 34 வயது, எஸ்.எஸ்.எல்.சி. படித்த நடுத்தர குடும்பப் பெண்ணிற்கு தகுந்த வரன் தேவை. உடனடி திருமணம். ஜாதகத்துடன் உடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2323.

* இந்து செங்குந்த முதலியார், வயது 25/5'2" எம்.ஏ., பி.எட்., பூரட்டாதி நட்சத்திரம், குடும்பப் பாங்கான பெண்ணிற்கு அதே இனம் அல்லது முதலியார் வகுப்பைச் சேர்ந்த பட்டதாரி இன்ஜினியர், கல்லூரி ஆசிரியர், உயர் அரசாங்க அதிகாரி அல்லது வெளி நாட்டில் பணிபுரியும் மணமகன் தேவை. விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2324.

* அனுஷம், கௌசிக, பிரஹசரணம், 30/5'3"/ரூ.2000 மாற்றல் இல்லாத, மத்திய அரசு வேலையில் உள்ள எம்.எஸ்.ஸி., தமிழ் ஐயர் பெண்ணிற்கு மதராஸில் நிரந்தர வேலையில் உள்ள பட்டதாரி மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2325.

* Wanted well educated, professionally well employed, Iyer bachelors, below 33, for vadama, vadoola, hastham, fair, good-looking well employed girl, 29 years, 162 cms, M.S., (Computer Science) Box No. 2326.

* Alliance for barathwaja gothram, Madwa girl star mrigasirsham, age 25, B.A., not employed, Height 5'0" Marathi speaking, knows Tamil & Kannada well trained in domestic work. Subsects in Brahmin no bar. Box No. 2327.

* Horoscopes invited from decent well settled. non-vadhoola, vadama graduate grooms for a graduate girl, 30, Moolam 2nd padam, very fair, good looking and employed in a reputed firm in Bombay. Box No. 2328.

* செங்குந்த முதலியார் வகுப்பில் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த கல்யாணமாகி ஒரு வருடத்தில் கணவனை இழந்த பெண்ணிற்கு மணமகன் தேவை. தகுதி எம்.ஏ., பி.எட்., அரசு பள்ளி ஆசிரியை. (அரசு சார்பு நிறுவனம்/அரசு ஊழியர்/தனியார் துறையில் 35 முதல் 40 வயதிற்குள் உள்ளவரும், குழந்தையற்ற மனைவியை இழந்தவரும், விவாகரத்து பெற்றவரும் விண்ணப்பிக்கலாம். முதலியார் பிரிவில் உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2329.

* Wanted for tall, fair, lean Girl of 33/159/1000 Vadamal Bharadwaja domestically well trained. Reply to Bo No.2330

* காசியபம், வடமாள், ஸ்மார்த்தா, பிராமணாள், உத்திரம் 4, எஸ்.எஸ்.எல்.சி., சிவப்பு நிறம், 5'2" உயரம், பிறந்த தேதி 26.4.1953, சென்னையில் தனியார் துறையில் மாதச் சம்பளம் ரூ.500/— உள்ள மணமகளுக்கு, அரசாங்கம் அல்லது தனியார் துறையில் நிரந்தர வேலையில் உள்ள மணமகன் தேவை. ஐயரில் எந்த உட்பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 2331.

* ஆற்காடு முதலியார் இனத்தைச் சேர்ந்த எஸ்.எஸ்.எல்.சி., பாஸ் செய்த, 32 வயது, 5'3" உயரம், நல்ல சிவந்த நிறமுள்ள குடும்பப்பாங்கான பெண்ணிற்கு மணமகன் தேவை. பெட்டி எண்: 2332.

* வடமாள், கௌசிக கோத்திரம், 23 வயது இரட்டைப் பெண்கள் (Twins) X & B. Sc. (working as Steno) உத்திரட்டாதி நட்சத்திரம் மற்றும் 21 வயது பெண் + 2 உத்திராடம் நட்சத்திரம் இவர்களுக்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள வரன்கள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். வி. சுந்தரம் ஐயர், 2/204, மௌண்டியம்மன் கோயில் தெரு, செங்குன்றம், சென்னை — 600 052.

* திருநெல்வேலி சைவ பிள்ளை. சிவ கோத்திரம், 5'5" உயரம், 26 வயதுள்ள எஸ். எஸ். எல். சி. படித்த குடும்பப்பாங்கான பெண்ணுக்கு பிள்ளை இனத்தைச் சேர்ந்த கௌரவமான குடும்பத்திலிருந்து வேலையிலுள்ள அல்லது சுய தொழில் செய்யும் மணமகன் தேவை. பெட்டி எண்: 2333.

* கௌண்டின்ய கோத்திரம், பிரகசரணம், ஹஸ்தம், 23½ வயது, 5'3" உயரம், பி. எஸ்ஸி, கம்ப்யூட்டர் டிப்ளமா (ஆகஸ்ட் 89) முடித்த அழகான மாநிறமுள்ள பெண்ணிற்கு வரன் தேவை. இஞ்சினியர், டாக்டர், கம்பெனி எக்ஸிகியூடிவ் ஆகிய வரன்கள், 32 வயதுக்குள் விரும்பப்படுகிறார்கள். கம்ப்யூட்டர் லைனில் இருந்தால் உத்தமம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2334.



## மணமகள் — மணமகன் தேவை

* சைவ வேளாளர் பிள்ளை, மாநிறம், 36/151, எஸ். எஸ். எல். சி./1077, அரசு பணி, தங்கை மாநிறம், 29/எஸ். எஸ். எல். சி./146/சதயம், சைவ பிரிவில் சிக்கன முறையில் பெண் எடுத்து பெண் கொடுப்பவர் தேவை. பெட்டி எண்: 3027.

* Mutual/separate alliance invited for kousika vadama graduate fair girl 36 Uthirattath and her brother 34, Uthiradam both Bank Employed at Madras. Agreement of horoscopes optional. Box No. 3028.

* Mutual alliance preferrerd for koundinya smartha Iyer sister tiruvathiri 29/155/B.A. Having slight disparity of one leg can manage independantly. Brothers avitam 34/B.Com.,/1500 & 27/MA.,/1500 employed in private sector. Subsects in bramins no bar. Box No. 3029.

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாகப் பரதன் அச்சகத்தில் ஆசிரியர் பொறுப்பேற்று அச்சிட்டு வெளியிடுபவர்: வி. முரளி. துணை ஆசிரியர்: மஞ்சுளா ரமேஷ்.
நிர்வாகக் காரியாலயம், ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி-600 032. போன்: 431543, 434157, 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 60/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 300/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 30/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 70/-; விமானத் தபால் ரூ. 150/-.

## கண்கண்ட தெய்வம்



குடும்பச் சூழல், (சுழல்னே சொல்ல லாம்). சிக்கி அவதிப்பட்ட நாட்கள். மனத் தில் நிம்மதி என்பதே இருக்காது. எப் படியோ சம்சார வண்டி ஓடிக் கொண்டு தான் இருந்தது.

பிள்ளை குழந்தை பிறந்தால் குருவாயூரில் துலாபாரம் கொடுக்கிறேன் என வேண்டு தல். (பெண்ணாகப் பிறந்து வைத்தால் இன் னும் கொஞ்சம் மாமியார் வாயில் அரைபட வேண்டுமே) பயங்களோடும், யோசனை ளோடும் ஒன்பது மாதம் போய் விட்டது. 'நீ மிக மிகக் கஷ்டப்படுவாய். அதற்குப் பிறகு மகிழ்ச்சி உண்டு' என்று பெண்ணின் வாழ் வின் முறைகளையே பிரசவத்தில் உணர்த்து கிறானோ?

குழந்தையை இழுத்து மார் மேல் போட்டு, 'உனக்குப் பிள்ளை பிறந்திருக்கான்மா' என்று டாக்டர் சொன்ன போது வயிற்றி லிருந்த சுமை மட்டுமல்ல, தலையிலிருந்த சுமையும் இறங்கியது.

நாட்கள் ஓடின. துலாபாரம் போட ணுமே! ஒவ்வொரு முறை குழந்தைக்கு உடம் புக்கு ஏதேனும் வந்தால் இதனாலோ, அத னாலோ என இருக்கும். இந்த முறை கட்டாயம் குருவாயூர் போய்ட்டு வந்துட ணும் என நினைப்பதோடு சரி.

ஆச்சு பிள்ளைக்கும் வயசு ஐந்தாகி விட்டது. எங்கேயிருந்து அந்தப் பிரச்னை கிளம்பியது எனத் தெரியவில்லை. என் காலில் ஒரு பெரிய கட்டி கிளம்பியது. தோவான நோவு. டாக்டர் மருந்து, ஊசி எனச் செல வழிந்தும் ஒன்றும் குணமாகவில்லை. தின மும் கால் கட்டுதான். மாமியார் தோள் பட்டையில் இடித்துக் கொண்டார்.

என்னவோ அந்த வருடம் குருவாயூர் போக எல்லாம் கூடி வந்தது. குடும்பத்தோடு கிளம்பினோம். இப்போதெல்லாம் ஒவ் வொரு அடியும் ஜாக்கிரதையாகத்தான் எடுத்து வைப்பேன். ஏனெனில் கால் கட்

டியை யாராவது மிதித்து விடுவார்களோ என் பயம்.

குருவாயூர் போய் மனங் குளிர அந்த மாயக் கண்ணனைச் சேவித்தோம். இந்தக் கண்ணனுக்கு துலாபாரம் கொடுத்தோம். கிளம்பும் நேரத்தில் ஒருவர் சொன்னார்,

''இவ்வளவு தூரம் வந்திருக்கீங்களே, கொடுங்கொல்லூர் பகவதியைப் பார்க்கலியோ! ரொம்ப சக்தி வாய்ந்த அம்மனாக்கும்!''

''எங்கே இருக்கு கொடுங்கொல்லூர்!''

''குருவாயூர்லேர்ந்து ஐம்பது மைல்தான் இங்கேயிருந்தே பஸ் போறது. அம்மனை சேவிச்சுட்டுப் போங்க!''

என்ன கட்டளையோ! யாரும் மறுத்துச் சொல்ல முடியவில்லை. முன்பின் தெரியாத ஒருவர் சொல்லுக்கு மந்திரம் போலக் கட்டுப்பட்டோம். பஸ் ஸ்டாண்டுக்குப் போனோம்.

சுழி சுழி எழுத்துக்கள். ஒன்றும் புரியவில்லை.

''கொடுங்கொல்லூர் போற பஸ் எது?''

''அதோ பாருங்க!''

கிளம்பிக் கொண்டிருந்தது அது. நாங்களும் கண்ணனைத் தூக்கிக் கொண்டு ஓடினோம். மாமியார் ஏற, நான் ஏற பின்னால் அவர் ஏறினார். பஸ் வேகம் பிடித்து விட்டது. யாரோ ஒரு பெண் 'சடக்'கென்று ஏறினாள் (அந்த வேகத்தில் எப்படி ஏறினாள்?) அவரை முந்திக் கொண்டு என்னைத் தாண்டும் போது 'சதக்!' ஒரே மிதி! 'அம்மா' என்று அலறி விட்டேன். என் கட்டு கிழிந்து 'கொட கொட'வென ரத்தம்! எல்லோரும் என்ன என்ன என வந்து விட்டார்கள். பஸ் பாட்டுக்கு ஓடிக் கொண்டு இருக்கிறது.

அந்தப் பெண்மணி 'அடேடே' எனத் திரும்பி வந்தவர் 'சடக்'கென்று தன் புடைவை ஓரத்தைக் கிழித்துக் கட்டி விட்டார். நான் கண்ணீரை அடக்க முடியாமல் ஓரமாக உட்கார்ந்து விட்டேன்.

அடிக்கடி துடைத்துத் துடைத்து இன்ஃபெக்ஷன் ஆயிடுமோ எனப் பயந்து பயந்து கட்டிய கட்டுக்களிலேயே அது உடையவில்லை. சுருக் சுருக் என வதைத்தது. இப்போது புடைவை நுனிக் கட்டு இன்னும் என்னென்ன தொற்றுக் கிருமிகளைக் கொண்டு வரப் போகிறதோ? காலையே எடுக்க வேண்டி வருமோ?

இரண்டு மணி நேரப் பயணத்திலே கொடுங்கொல்லூர் வந்து விட்டது. மூவரும் குழந்தையோடு இறங்கினோம். கோயில் நடை சாத்தியிருந்தது. மூணு மணிக்குத்தான் திறப்பார்களாம். இது வேறா? உடல் வேறு கண கண வெனச் சுட்டது. தாங்க முடியாமல் முன் பக்கத்திலுள்ள மண்டபத்தில் படுத்து விட்டேன். எப்படித் தூங்கினேனோ தெரியாது.

''வத்சலா, எழுந்திரு கோயில் தொறந்துட்டாங்க!'' என்று எழுப்பினார் இவர். 'சடக்'கென்று எழுந்து கொண்டேன் மடமடவென்று கிணற்றடியில் போய் முகம் கழுவிக் கொண்டு காலில் நீர் ஊற்ற... அப்போதுதான் மதியம் நடந்த சம்பவமெல்லாம் நினைவுக்கு வந்தது.

அந்தப் புடைவை நுனி என்னைப் பார்த்து சிரித்தது. மெதுவாகக் குனிந்து தொட்டேன். இங்கேயா கட்டி இருந்தது? இன்னும் கொஞ்சம் அமுத்தினேன் ம்ஹூம்!

பரபரவென்று அந்தத் துணியை எடுத்தேன். என் கைப்பையில் வைத்துக் கொண்டேன். காயம் சொத சொதவென்று இருந்தது. கவலைப்படாமல் நன்கு தண்ணீர் விட்டு அலம்பினேன்.

மீண்டும் மண்டபத்திற்கு வந்து பொட்டு வைத்துக் கொண்ட பிறகு எல்லோருமாகக் கோயிலுக்குள் நுழைந்தோம். கேரளாவுக்கே





புரிய கலையழகுடன் கோயில். சிறிய மூலஸ்தான அறை முழுக்க பிரம்மாண்ட உருவில் ஜகஜ் ஜோதியாக பகவதி!

கணகணவென மணி ஒலிக்க தீபாராதனை நடந்த போது அந்த ஒளியிலே அவளைக் கண் கொட்டாமல் பார்த்தேன்! ''அம்மா, என் அம்மா குருவாயூருக்கு வந்தவளை இங்கே எதற்கு இழுத்து வந்தாய்? என் நோய் தீர்த்து வைக்கவா? அம்மா, உடல்வலி போனால் போதுமா? நான் பேராசைக்காரிதான். இத்தனை நாள் பட்ட உடல்வலி தீர்ந்தவுடன் அடுத்ததைப் பற்றிப் பேசுகிறேன். ஆனா உன்னிடம் சொல்லாமல் நான் எங்கே போய் சொல்வது? என் மனவலி தீர்ப்பாயா? அம்மா, என் அம்மா!''

மௌனமாக அவளையே பார்த்துக் கொண்டு இருந்தேன். அவளும் என்னைத் தான் பார்க்கிறாளா? மூவரும் பாலக்காடு வந்து சென்னை வந்து சேர்ந்தோம்.

வாழ்விலே படிப்படியான மாறுதல்கள் எப்படி நடந்தது என்பது இதுநாள் வரை புரியாத புதிர். உவாமுன்னாக உறுத்திய உறவுகள் மெது மெதுவே கழன்றன. என்னைப் பக்குவப்படுத்த என வந்த கஷ்டங்கள் மனதைச் செம்மையாக்கின. வாழ்விலே என்னை நான் இன்னும் தெரிந்து கொண்டேன். சில சமயம் இதை இக்கட்டுகளில் இருந்து ஓடி விடலாமா என நினைத்ததெல்லாம் போயிற்று. வாழ்க்கை அதன் அர்த்தம் புரிந்து கொண்டேன்.

அம்மா இந்தக் குழந்தையை வழிநடத்திக் கொண்டு செல்கிறாள்.

**— வத்சலா ரகுநாதன்**

படங்கள்:

**ஷம்சுதீன், வேலம்கொல்லூர்.**

# தொட்டிலா... வேண்டாமே...

சாதாரணமாக, பிறந்த சிறு குழந்தைகளை நாம் தொட்டிலில் துணி விரித்து இருபுறமும் சிறு தலையணை வைத்துக் குழந்தையைத் தொட்டிலை ஆட்டித் தூங்க வைக்கிறோம். இவ்வாறு தொட்டிலை ஆட்டும் போது தொட்டிலின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்குக் குழந்தை உருண்டு உருண்டு முன்னும் பின்னும் வர நேரலாம். இவ்வாறு உருளுவதால் குழந்தையின் இதயம் பாதிக்கப்படலாம்.

இதனால் சிறு குழந்தைகளுக்கு நெஞ்சுவலி வர வாய்ப்பிருக்கிறது என்று குழந்தை நல மருத்துவர் கூறினார். ஆகவே, தூளி கட்டி, அதில் குழந்தைகளைப் போட்டு ஆட்ட வேண்டும். தூளியில் குழந்தை அந்தப் பக்கம் இந்தப் பக்கம் உருளாமல் துணி குழந்தையை அன்னை போல் அணைத்துக் கொள்கிறது. இதனால் குழந்தை தாயின் அணைப்பில் இருப்பது போலச் சுகமாக நீண்ட நேரம் தூங்குகிறது.

— ராஜம்.

